


# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்

## குளுமையானது, நறுமணமிக்கது, புத்துணர்ச்சி யூட்டுவது

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் குடும்பத்தினர் அனைவரும் எல்லாப் பருவ காலங்களிலும் உபயோகிக்க ஏற்ற உன்னத டால்கம் பவுடர். இதமளிக்கும் துல்லிய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் வறுத்தெடுக்கும் கோடையிலும் உங்களை நாள் முழுவதும் சுகமாக இருக்க உதவும். புழுக்கமான காலத்திலும் இனிய நறுமணமுள்ள பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் பூராவும் சுகந்தமான புத்துணர்ச்சியுடன் வைக்கும்!

உங்கள் குடும்பத்தினருக்காக ஒரு டின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் இன்றே வாங்குங்கள்—இப்பொழுது 3 சைஸ்களில் கிடைக்கிறது!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. யில் இணைக்கப்பட்டது)




நிழற்படவிளக்கம் 61ம் பக்கம் பார்க்க

# பொருளடக்கம்

சோபகிருது, ஐப்பசி 10 ★ அக்டோபர் 27



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 13

# தி. மு. க. திட்டம்

ஆங்கிலத்தை அகற்றி, ஹிந்தியை அரியாசனம் ஏற்றும் ஆட்சியாளர்களின் திட்டத்தைச் செயலுருவில் எதிர்ப்பதெனத் திராவிட முன்னேற்றக் கழகம் முடிவு செய்து அதற்காக ஒரு நிகழ்ச்சித் திட்டத்தையும் தயாரித்துள்ளது.

ஆங்கிலமே முன்போல் நீடிக்கவேண்டும்; நேரடியாகவோ மறைமுகமாகவோ ஹிந்தி ஆட்சிமொழியாவதற்கு இடமளித்து நமது எதிர்காலப் பிரஜைகளைக் கீழ்ப்பட்டவர்களாக்கி விடக்கூடாது என்பதே தி. மு. க. திட்டத்தின் நோக்கம். இந்த அபாய எச்சரிக்கைக்கு நாம் நூறு சதவிகிதமும் ஆதரவளிக்கிறோம். தென்னிந்தியர்களுக்கு நேரவிருக்கும் ஒரு பெருங் கொடுமையை எதிர்த்துப் போராடத் துடிப்புடன் முன்வந்துள்ள கழகத்துக்கு நன்றி செலுத்துகிறோம்.

அரசியல் சாஸனத்தின் எந்த ஷரத்து ரத்தாக வேண்டும் என்று ராஜாஜி வற்புறுத்துகிறாரோ அதனைத்தான் எதிர்ப்புக்கு ஒரு சமிக்ஞையாக தி. மு. க. எரிக்க முற்பட்டிருக்கிறது. இம்முடிவில் பெரியார் ஈ. வெ. ரா. வின் பாணி பிரதிபலிக்கிறது. அது அவ்வளவு ருசிகரமாக இல்லையாயினும், காட்டவேண்டிய எதிர்ப்பை ஏதோ ஒரு முறையில் எடுத்துக் காட்டுகிறது.

ஆட்சிமொழியினால் எவ்விதப் பட்சபாதமும் நேராது என்று பிரதமர் கொடுத்த வாக்குறுதிக்கு முற்றிலும் மாறாக மத்திய சர்க்கார் காரியாலயங்களில் ஹிந்தி புகுத்தப்பட்டு வருகிறது. வரிப் பணத்திலிருந்து ஊதியம் பெறும் ஊழியர்களின் வேலை நேரம் அவசியமில்லாத மொழி போதனையில் விரயமாக்கப்படுகிறது! இதற்குத் தமிழகத்தின் ஆட்சேபணையை உருவாக்கிக் காட்டுவதே தி. மு. க. வின் மறியல் திட்டம். அந்த அளவுக்கு இந்தத் திட்டம் வெற்றிபெற வேண்டுமென்று விரும்புகிறோம்.

தி. மு. கழகத்தை ஒடுக்க இதை ஒரு சந்தர்ப்பமாக ஆளும் கட்சியினர் பயன்படுத்திக் கொள்ளப் பார்ப்பார்கள். ஆனால் இது கழகத்தின் போராட்டம் மட்டும் அல்ல; எல்லா மக்களின் உணர்ச்சிக்கும் ஒரு சின்னமே தி. மு. க.வின் போராட்டம் என்பதை அரசாங்கம் புரிந்து கொள்ள வேண்டும்.

இன்று தேசம் தீர்க்கவேண்டிய ஜீவாதாரப் பிரச்னைகள் பல இருக்கின்றன. அவற்றிலிருந்து மக்களின் கவனத்தை அநாவசியமான மொழிப் பிரச்னையில் அரசாங்கம் திருப்பியிருப்பது துர்ப்பாக்கியமாகும். முக்கியமாக, தி. மு. க. போன்ற எதிர்க் கட்சிகள் காங்கிரஸின் யதேச்சாதிகாரக் கொள்கையை மக்களுக்கு விளங்க வைத்து எதிர்ப்பை உருவாக்குவதற்குப் பதில், மொழிப் பிரச்னையில் பூரண ஈடுபாட்டையும் செலுத்த நேர்ந்திருக்கிறது. இது ஆட்சியாளர்கள் வேண்டுமென்றே விளைவிக்கும் குழப்பம்தான். இக்குழப்பத்தின் விளைவாகத் தமிழகத்தில் எத்தகைய மனக் கொதிப்பு நேரக்கூடும் என்பதை மத்திய சர்க்கார் இப்போதேனும் உணர்ந்து ஆட்சிமொழிச் சட்டத்தையும், அரசியல் சாஸன ஷரத்தையும் ரத்து செய்துவிட்டு ஆங்கிலமே இன்றுபோல் நீடிப்பதற்கு வழிசெய்ய வேண்டும். தி. மு. க.வைக் கண்டிக்கும் பெரும் பத்திரிகைகளும் கூட இந்த யோசனையையே மத்திய அரசினருக்குக் கூறுகின்றன. இல்லாவிடில் விபரீத விளைவுகளை வலியத் தேடிப் போனதாகும்.

# தேசிய வருமானம் எப்படி உயரும்?

சோஷலிஸ சம விநியோகம் என்ற பெயரைச் சொல்லித்தான் நாட்டைத் திவாலாக்கும் திட்டங்கள் நடைபெற்று வருகின்றன. ஆனால் உண்மையில் தேசியச் செல்வம் இவ்வாறு சமமாக விநியோகிக்கப்படவில்லை என்பது பிரத்தியட்ச உண்மை. எதிர்க் கட்சிகள் எடுத்துக் கூறி வரும் இந்த உண்மையைத்தான் தேசிய வருமான விநியோகக் கமிட்டியும் இப்போது வெளியிட்டுள்ளது. ஒரு சிலரிடம் செல்வம் குவிவது இப்போது அதிகமாகியுள்ளது என்கிறது கமிட்டி. இந்த 'ஒரு சிலர்' சர்க்காருக்குத் தாளம் போட்டு பெர்மிட் லைசென்ஸ் பெறுகிறவர்கள்தான் என்பதைக் கமிட்டி கூறாவிட்டாலும் பொதுமக்கள் அறிவார்கள்.

'முன்னைவிட இப்போது ஏழை மக்கள் மேலும் ஏழையாகியிருக்கிறார்கள் என்று பொதுவாக ஓர் அபிப்பிராயம் இருக்கிறது. இதை எங்களால் நிரூபிக்கவும் முடியவில்லை; நிராகரணம் செய்யவும் முடியவில்லை' என்கிறது கமிட்டி. கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா, என்ன? விலைவாசி உயர்வாலும், பண வீக்கத்தாலும் ஏழை மக்கள் மேன் மேலும் துன்பப்பட்டு வருவது கண்கூடான உண்மை. இதற்கு எந்தக் கமிட்டியின் ஆராய்ச்சியும் தேவையில்லை.

ஆகக்கூடி தேசிய வருமானத்தின் விநியோகம் திருப்திகரமாக இல்லை என்பது கமிட்டியின் முடிவுகளிலிருந்து தெளிவு. விநியோகப் பிரச்னை ஒருபுறம் இருக்கட்டும். விநியோகிக்கப்பட வேண்டிய தேசியச் செல்வமே திட்டங்களின் பயனாக உயரவில்லை. இதற்கான காரணத்தை இந்தப் பத்திரிகையில் பல முறை கூறியிருக்கிறோம். மீண்டும் கூறுகிறோம்: மக்கள் சுயஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் செல்வத்தைப் பெருக்கிக் கொள்வதற்கு இடையூறான சர்க்கார் சர்வாதீனக் கொள்கை கடைப்பிடிக்கப்படும் வரையில் இந்த நாட்டின் செல்வம் ஒரு போதும் உயராது. வேண்டியவர்களுக்கு ஏகபோகம் கொடுத்து, வேண்டாதவர்களைக் கெடுக்க உதவுகிற பெர்மிட் — லைசென்ஸ் முறை அமுலாகும் வரையில் நாட்டில் உற்பத்தியாகும் செல்வம் நியாயமான முறையில் விநியோகமும் ஆகாது. இதில் சிறிதும் ஐயமில்லை.












# என்ன சேதி?

## தேசபக்தரின் மறைவு

திருப்பூர் ஸ்ரீ டி. எஸ். சுந்தரம் அவர்கள் காலமான செய்தி கேட்டுத் தேச விடுதலைப் போராட்ட காலத்தை நினைவில் வைத்திருப்பவர்கள் பெரிதும் வருந்தினர்கள். காந்திஜியின் சொல்படி, பர்மாவில் அடைந்திருந்த நல்ல வேலையை விட்டு விட்டு இந்தியாவில் கதர் வேலையில் இறங்கிப் பிறகு போராட்டத்தில் சிறை சென்றார். மறியல் நடத்தியதற்காக, திருப்பூர் குமரனும் சுந்தரம் அவர்களும் போலீசாரால் கடுமையான தடியடிப் பிரயோகத்துக்கு உள்ளானர்கள். இதில் உயிர் நீத்து விட்டார் குமரன்; தெய்வச் செயலால் தப்பிப் பிழைத்தார் ஸ்ரீ சுந்தரம். ஸ்ரீ சுந்தரம் உண்மையான தேச பக்தர்; மக்கள் தொண்டர்.

இந்தப் பழங்கால தேச பக்தர் இன்றையக் காங்கிரஸின் போக்கைக் கடுமையாகக் கண்டித்து வந்தார். ராஜாஜி சுதந்திரக் கட்சி ஆரம்பித்ததும் அதில் தீவிரமாக ஈடுபட்டுத் தொண்டு புரிந்தார். அவர் மறைவினுல் வருந்தும் அவருடைய குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## சோளிங்கபுரம் கும்பாபிஷேகம்

'கடிகைத் தடங்குன்றின் மிசை யிருந்த அக்காரக்கனி' என்று திருமங்கையாழ்வாரால் துதிக்கப்பட்ட பெருமான் திருக்கடிகை என்றும் சோளசிம்மபுரம் என்றும் கூறப்படும் சோளிங்கபுரத்து இறைவன். வடார்க்காடு மாவட்டத்தில் உள்ள சோளிங்கபுரத்தில் லட்சுமி நரசிம்மனுக எழுந்தருளியுள்ள மூர்த்தியின் சாந்நித்தியம் அளவுகடந்தது. இகபர நலன்களை அளிக்கும் இந்த இறைவனின் ஆலயத்தில் அக்டோபர் 31-ந் தேதி வியாழக்கிழமையன்று ஜீரணேத்தாரணப் பணிகள் பூர்த்தியாகிக் கும்பாபிஷேகம் நடைபெறுகிறது. அன்பர்கள் உடலாலும், உள்ளத்தாலும், பொருளாலும் பெருமான் சேவையில் ஈடுபடவேணும்.



# போகிற போக்கில்

திரு எம்.சி. சாக்லா மத்திய அமைச்சர் அவையில் ஒரு மந்திரியாகப் போகிறார் எனச் செய்தி ஒன்று கூறுகிறது. செய்தி உண்மையாக இருக்குமேயானால் பாராட்ட வேண்டியதுதான். இவருக்குக் கல்வி கலாசார மந்திரி இலாகா தரப்படும் எனவும் கூறப்படுகிறது. பிரபல முந்திரா வழக்கில் அடிபட்ட மூன்று பெயர்களில் ஏற்கனவே ஒருவர் மந்திரியாகிவிட்டார்! இந்தத் தில்லிச் செய்தியின்படி இன்னொருவர் மந்திரியாகப் போகிறார். மூன்றாமவர் திரு முந்திராதான் இப்போது வெளியிலே (மந்திரி சபைக்கு) இருக்கிறார். இவரும் மந்திரி ஆவாரோ?

ஃ ஃ ஃ

இந்திய பொதுவுடைமைக் கட்சியின் தேசியக் குழு சீன கம்யூனிஸ்டின் போக்கைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. இந்தத் தீர்மானத்துக்கு எதிராகத் திரு நம்பூதிரிபாட் ஒரு தீர்மானம் கொண்டு வந்தாராம். அதில் சீனக் கம்யூனிஸ்டுகளைப் பற்றிக் கண்டனமே இல்லையாம். இந்தியாவை ஆதரிக்கும் ரஷ்யக் கம்யூனிஸ்டுகளை ஆதரிப்பதாக ஒரு வார்த்தைகூட இல்லையாம்! இந்த அற்புதத் தீர்மானத்தை வோட்டுக்கும் விட்டிருக்கிறார்கள். இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவாக இருபத்தைந்து வாக்குகளும் எதிர்ப்பாக ஐம்பத்திரண்டு வாக்குகளும் கிடைத்ததாக ஒரு செய்தி கூறுகிறது. இறுதியில் சீனாவைக் கண்டித்து, ரஷ்யாவை ஆதரிக்கும் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. இந்தத் தீர்மானத்துக்குப் பிறகு இருபத்தைந்து பேர்கள் தங்கள் அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டு விட்டார்களா அல்லது பழைய போக்கிலேயே இருக்கிறார்களா என்பதை இந்திய சர்க்காரின் துப்பறியும் இலாகா கண்டுபிடித்தால் நன்றாக இருக்கும். தாங்கள் கண்டுபிடித்ததை இவர்கள் பொது மக்களுக்குக்கூடக் கூற வேண்டாம். இதர ரகசியங்களைப் போல் இதையும் தாங்களே வைத்துக் கொண்டால் கூடப் போதும். இந்தத் தகவலின் அடிப்படையில், சிகிச்சைக்காக வெளியூர்களுக்குப் போகக்கூடிய கம்யூனிஸ்டுகளுக்கு பாஸ்போர்ட் வழங்குவதைக் கண்காணித்து வந்தால் நன்றாக இருக்குமல்லவா?

ஃ ஃ ஃ

திருமணமானவர்களில் நாற்பது சதவிகித ஆண்கள் பல கஷ்டங்களின் விளைவாக மனைவிகளைப் பிறந்தகத்தில் விட்டு விட்டுத் தனித்தே பம்பாயில் வாழ்வதாக அறுபத்தோராவது வருடப் புள்ளி விவரக் கணக்கு கூறுகிறது என டாக்டர் சந்திரசேகர் பேசியிருக்கிறார். இதைக் கேட்டுச் சென்னையில் வசிக்கும் அநேக பிரம்மச்சாரிகள் 'இங்கென்ன வாழ்கிறது' என்று கேட்பார்கள். ஐந்தாண்டுத் திட்டத்தில் எங்கேதான் இந்த நிலைமை இல்லையென வெளியூர்க்காரர்கள் கேட்பார்கள். ஆக வீட்டுக் கஷ்டமும், விலைவாசித் துன்பமும், சர்வ வியாபிபோல் எங்கும் வியாபித்துள்ளன.

ஃ ஃ ஃ

''எதிர்க் கட்சிகளுக்குப் பதவிக்கு வர யோக்கியதை இல்லை. எதிர்க் கட்சிகளின் அமைப்பே சரியில்லை'' என்று காங்கிரசுக்கு அடுத்த தலைவராக வரப் போகும் திரு காமராஜ் திருவாரூரில் பேசியிருக்கிறார். இதைக் கேட்டு ஓர் எதிர்க் கட்சிக்காரர், ஆட்சி புரியும் காங்கிரஸ் இருக்கிற லட்சணத்துக்கு எதிர்க் கட்சிகள் இருக்கும் அமைப்பு எவ்வளவோ தேவலை எனக் கூறுகிறார். மேலும், காங்கிரஸே ஆள முடியும்போது நாங்கள் ஏன் ஆள முடியாது எனவும் வினவுகிறார்.

ஃ ஃ ஃ

காங்கிரசின் புதுத் திட்டப்படி ஸ்தாபனத்தையும் ஆட்சிமுறையையும் இன்னும் நெருக்கமாக அமைக்க ஓர் இணைப்புக் கமிட்டி உருவாகியிருப்பதாகவும் இந்தக் கமிட்டியில் சென்னை மந்திரிகள் இருவர் இடம் பெற்றிருப்பதாகவும் ஒரு செய்தி கூறுகிறது. இதற்கு என்ன அர்த்தம் என்றால் அரசாங்க அலுவல்களில் காங்கிரஸ்காரர்கள் தலையீடு இன்னும் அதிகமாக இருக்கும். –சிட்டுக்குருவி

---

## பட்டம் பறக்குது: சித்தம் பறக்குது!

சின்னஞ்சிறு குருவி போலே – நீ
திரிந்து பறந்துவா பாப்பா!

என்று வாய் நிறையத் தன் தங்க மதலையிடம் கூறிவிட்டாள் அவள். ஆனாலும் அது திரிந்து பறக்க அனுமதிக்க முடியாமல் அதனை ஆரத் தழுவிக் கொண்டுவிட்டாள்! அதனாலென்ன? அந்தப் பொல்லாத பிள்ளை இருந்த இடத்திலிருந்து கொண்டே தன் கண் வீச்சினால் குருவியுடன் திரிந்து பறந்தான். மேலே மேலே செல்கிற அந்த வண்டுக் கண் பார்வையில் குருவி மறைந்தது. ஆண்டவன் படைத்த குருவியின் நளின கதி மறைந்து, 'விர், விர்' என்று பிகுவுடன் பறக்கும் ஒரு காற்றாடி குழந்தையின் நோக்கில் சிக்கிற்று. அதைக் கண்டு கும்மாளமிட்டான் குழந்தை. குழந்தையின் குதூகலத்தில் அவனைப் பெற்றவளும் குதூகலித்தாள். அவளது மனமாகிற வானில் சிந்தனைக் காற்றாடி பறந்தது. 'நாளைக்கு இந்தப் பயலும் இதே போல் பட்டம் விடுவான்; அப்புறம் இன்னும் வளர்ந்து பட்டதாரி ஆவான்; அதன்பின்...' இன்று தான் குழந்தையைக் கொஞ்சுவது போலவே தன் மருமகள் அவளது குழந்தையைக் கொஞ்சுகிற நாள் வரை நமது அட்டைப் பட அன்னையின் எண்ணம் பறந்தது. அவள் எண்ணினாளோ இல்லையோ, நம்மை இப்படியெல்லாம் எண்ண வைத்து விட்டார் இந்த ஓவியத்தைத் தீட்டியுள்ள 'வினு'.

# தமிழ் விழாவில் குழப்பம்

ரஜனி

இவ்வருடம் இலங்கை சாகித்திய மண்டலம் ஆறு தமிழ் நூல்களுக்குப் பரிசு பெற்ற ஆசிரியர்களைக் கௌரவிப்பதற்காகச் சமீபத்தில் யாழ்ப்பாணத்தில் தமிழ் விழா செனட்டர் சு. நடேச பிள்ளை தலைமையின் கீழ் நடத்தியது. அந்தக் கூட்டத்தில் பெரும் குழப்பம் ஏற்பட்டது. இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தைச் சேர்ந்தவர்கள், சாகித்திய மண்டலம் பாரபட்சமாகவும் தான்தோன்றித்தனமாகவும் நடக்கிறது என்றும் பரிசுக்கு உரிய நூல்கள் சரியான முறையில் தெரிவு செய்யப்படவில்லை என்றும் புகார் செய்தார்கள். கூட்டத்தில் கோழிமுட்டைகள் வீசப்பட்டன. இக்குழப்பத்துக்கிடையில், தலைவர் கூட்டத்தை ஒத்தி வைத்தார். ஒரு மணி நேரத்துக்குப் பின்னர் மகாநாடு திரும்பவும் ஆரம்பமாகி அமைதியுடன் நடந்தது.

சாகித்திய மண்டலத்தின் போக்கைப் பற்றி முற்போக்குத் தமிழ் எழுத்தாளர்கள் மட்டுமின்றிச் சிங்கள எழுத்தாளர்களும் புகார் செய்வதனால் மண்டலத்தின் நடவடிக்கைகளை அதன் ஆரம்ப காலம் முதல் கொண்டு விசாரணை நடத்த வேண்டும் என்றும் அதற்காக ஒரு கமிஷனை நியமிக்க வேண்டுமென்றும் கோரப்பட்டு வருகிறது.

## தமிழுக்கு இடமில்லை

அடுத்த வருட ஜனவரி மாதம் முதல் அரசாங்கத்தின் சகல நடவடிக்கைகளும் சிங்களத்திலேயே நடைபெற வேண்டும் என்றும் சிங்களம் கற்று அந்த மொழியில் கடமையாற்ற முடியாதவர்களெல்லாம் பதவிகளிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டுவிட வேண்டுமென்றும் அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. இதன் பயனாக அரசாங்க உத்தியோகங்களில் சிங்களம் தெரியாத தமிழர்களுக்கு அறவே இடம் இல்லாமற் போவதுடன் ஆட்சி பீடத்தில் தமிழுக்குக் கண்டிப்பாக இடம் இல்லையென்ற நிலையும் உருவாகிறது. இது சம்பந்தமாக அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலம் இவ்வாரம் ஒரு விரிவான அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். அரசாங்கத்தின் இந்தத் தீர்மானம் காலஞ்சென்ற பிரதம மந்திரி திரு ஸாலமன் டயஸ் பண்டாரநாயகாவின் கொள்கைக்கு முற்றிலும் மாறானதென்றும் நீண்ட காலமாக விசுவாசத்துடன் பணிபுரிந்து வந்த அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு அரசாங்கம் தனது கடமையைச் செய்யத் தவறிவிட்டதென்றும் ஸ்ரீ பொன்னம்பலம் அந்த அறிக்கையில் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

''காலஞ்சென்ற பிரதம மந்திரியின் கொள்கைகளைச் செயல்படுத்துவதாகச் சொல்லியே இப்போதைய அரசாங்கம் மக்களின் ஆதரவைப் பெற்று வருகிறது. ஆனால் மொழிப் பிரச்னை என்ற அதி முக்கியமான பிரச்னை சம்பந்தப்பட்ட மட்டில் அரசாங்கம் காலஞ்சென்ற பிரதம மந்திரியின் கொள்கையைக் கடைப்பிடிப்பதிலிருந்து தவறி விட்டது. அரசாங்கத்தின் போக்கு அறநெறிகளுக்கு மாறானது'' என்று ஸ்ரீ பொன்னம்பலம் தம் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## தமிழரசு இயக்கம்

இலங்கை தமிழரசுக் கட்சி சிங்களத் திணிப்பு நடவடிக்கையை எதிர்க்க சாத்வீக எதிர்ப்பு இயக்கத்தைத் தமிழ்ப் பகுதிகளில் ஆரம்பித்திருக்கிறது. சிங்கள மொழி தமிழர்கள் மீது திணிக்கப்படுவதற்கு உதவியாகவும் உடந்தையாகவும் இருப்பவர்களைச் சகல விதங்களிலும் பகிஷ்கரிக்குமாறு தமிழ் மக்களைத் தூண்டுவதே இந்த இயக்கத்தின் முக்கிய இலட்சியமாகும். அக்டோபர் முதல் தேதியிலிருந்து இது ஆரம்பமாகியுள்ளது.

## எல்லாம் ஒன்றுதான்

முன்னாள் ஆளும் கட்சியும் திரு டட்லி சேனநாயகா தலைமையில் உள்ளதுமான ஐக்கிய தேசியக் கட்சியின் வருடாந்திர மகாநாடு களுத்துறை என்னும் இடத்தில் நடைபெற்றது. அப்பொழுது தற்போதைய அரசாங்கத்தின் கொள்கையே நாட்டில் பிரிவினைகளை உண்டு பண்ணி விட்டது என்றும் தேசிய ஐக்கியமில்லா விட்டால் எதையுமே சாதிக்க முடியாது என்றும் திரு டட்லி சேனநாயகா உரை நிகழ்த்தினார். இலங்கையின் தேசிய ஒற்றுமை குலைய இன்று காரணமாக இருப்பது அரசாங்கத்தின் மொழிக் கொள்கைதான் என்பது நிதர்சனமானது.

திரு டட்லி சேனநாயகா, ''அரசாங்க உத்தியோகங்களை நாடுவதாக இருந்தால் ஒழிய சிங்களம் படிக்க விரும்பாதவர்கள் சிங்களம் படிக்குமாறு கட்டாயம் செய்யப்படமாட்டார்கள்'' என்று கூறியிருக்கிறார். தற்போதைய அரசாங்கமும் சிங்களம் படிக்க வேண்டும் என்று எல்லோரையும் கட்டாயப் படுத்த வில்லை. அரசாங்க உத்தியோகம் வேண்டுமென்றால் சிங்களம் படிக்க வேண்டும் என்றுதான் அரசாங்கம் சொல்கிறது. எனவே வகுப்பு ஒற்றுமையே தனது இலட்சியம் என்று மார் தட்டும் ஐக்கிய தேசியக் கட்சி, அரசாங்கத்தின் போக்கினால் சிதைந்து போய் விட்டதாகக் கூறும் வகுப்பு ஒற்றுமையைத் திரும்பவும் நிலைநிறுத்த உருப்படியான யோசனை ஒன்றையும் சொல்லவில்லை. மாறாக மொழிப் பிரச்னையில் தன் கொள்கை அரசாங்கத்தின் கொள்கையைப் போன்றதுதான் என்பதைக் காட்டிக் கொண்டிருக்கிறது.

இலங்கைக் கடிதம்

# ஆஹா...

**என்னே ஆரோக்கியமளிக்கும் புத்துணர்ச்சி, கோலினுஸின் பாதுகாக்கும் நுரையிலே!**

சுறுசுறுப்பாக வாழ்பவர்கள் கோலினுஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்...ஏனெனில் நுரைக்கும் தன்மையுள்ள கோலினுஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய் நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினுஸ் சூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.





## தலைநிமிர்ந்த புன்சிரிப்பு—அது கோலினுஸின் புன்சிரிப்பு

அல்லது, வீரியமுள்ள குளோரோபில்லின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினால், புதிய சேர்க்கை கோலினுஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.




பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம் கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED

# முதல் மூவர்

ராஜாஜி - சோமு

29

'எம்பெருமானுடைய திருவடியை அடைக்கலமாகப் பற்றினேன்; வாழும் வகை அறிந்தேன்' என்று தமது பக்தியானந்த நிலையைப் பாடுகிறார் பேயாழ்வார்.

**வாழும் வகையறிந்தேன்**

[வாழும் வகை - பயனுள்ள புண்ணிய வாழ்க்கை வாழ்வதற்கான உபாயத்தை. அறிந்தேன் - அறிந்து கொண்டேன்.]

அது எங்ஙனம் என்று சொல்லுகிறார்.

**மைபோல் நெடுவரைவாய்**

[மைபோல் - அஞ்சனம்போல் கறுத்த. நெடுவரைவாய் - பெரிய மலையிலிருந்து.]

**தாழும் அருவிபோல்**

[தாழும் அருவி - விழுகிற அருவி. அருவி போல் - அருவியைப்போல்.]

**தார் கிடப்ப**

[தார் கிடப்ப - மாலையானது மார்பிலே பிரகாசிக்க.]

திருமாலின் மார்பு அஞ்சன மலை போன்று நீலமாகக் காட்சி தருகிறது. அந்த மார்பிலே ஒளி வீசுகிற மாலையானது மலையிலிருந்து வீழும் அருவி போல் விளங்குகிறது.

**— சூழும்**
**திருமா மணிவண்ணன்**
**செங்கண்மால்**

[திரு - லக்ஷ்மிதேவி. சூழும் திரு - மக்களுக்கு இரங்கி அவர்களை எப்படி உய்விக்கலாம் என்று எப்போதும் யோசனையாக இருக்கும் தேவி. சூழும் திருமாமணிவண்ணன் - அப்படிப்பட்ட லக்ஷ்மிதேவி மார்பிலே நித்தியவாசம் செய்கிற நீலமணிவண்ணனை. செங்கண்மால் - செவ்வரிக் கண்களையுடைய திருமால்.]

**எங்கள்**
**பெருமான் அடிசேரப்**
**பெற்று!**

[எங்கள் பெருமான்-எம்பெருமான். அடி சேரப் பெற்று - அவனுடைய திருவடிகளிலே அடைக்கலமாகச் சேரப் பெற்று; வாழும் வகை அறிந்தேன் - நல்வாழ்வுக்கு இதுவே உபாயம் என்பதை அறிந்து கொண்டேன்.]

**வாழும் வகைஅறிந்தேன்**
**மைபோல் நெடுவரைவாய்**

**தாழும் அருவிபோல்**
**தார்கிடப்ப — சூழும்**

**திருமா மணிவண்ணன்**
**செங்கண்மால் எங்கள்**

**பெருமான் அடிசேரப்**
**பெற்று!**

நல்வாழ்வுக்கு அவனடி சேர்வது உபாயமாவதோடு, அப்படிச் சேர்ந்து வாழ்வதே நல்வாழ்வு என்கிறார். பக்தியே உபாயமும் பயனுமாகும்!

# உங்கள் கேசம் உதிருகிறதா?

**இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.**



**பொடுகு**

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இங்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்துகீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-I சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ், பீசாம் (இந்தியா) பிரை. லிட்., பீசாம் ஹவுஸ், மாஹிம், பம்பாய்—16.

**ப்யூர் சில்விக்ரீன்**




கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/63

# தோல்விக்குப் பணிந்த பாண்டியன்

துரோணன்

காலம் : கி. பி. 764.

இடம் : : பூவிரியும் பொழிற்சோலைகள் நிறைந்த காவிரியின் தென் கரையோரம்.

நேரம் : பகல் பதினெட்டு நாழிகை.

பாத்திரங்கள் : 1. பராந்தக நெடுஞ்சடையன் — பாண்டியப் பேரரசனுன அரிகேசரி பராங்குச மாறவர்மனின் மகன் (இளவரசன்); 2. ஏனுதிசாத்தன் கரைப் படைத் தளபதி; 3. சங்கரன்—'இளங்கோ மங்கலப்பேரரையன்' எனப் பட்டம்பெற்ற பாண்டிய யானைப் படைத் தலைவன்; 4. மாறன் காரி — பாண்டிய அமைச்சர்; 5. கங்க மன்னர்—மழகொங்கத்தின் வேந்தர்; 6. பூசுந்தரி - கங்க மன்னரின் புதல்வி

[எழிலார்ந்த சோலையும், வாவியும், குறுங்குன்றுகளும், அடுத்தடுத்து விளங்கும் இயற்கைச் சூழலிலே பெரு வெள்ளம்! ஆம், கடல் பொங்கி எழுந்து கரை மூடி நிற்பதையொப்ப, கருங் குன்றுகள் போன்ற களிறுகளும், செம்மேகத் திரள்கள் போன்ற செழும் புரவிகளும் கொண்ட நாற்பெரும் படையிலே அலர்ந்த பிளிறோசைகளும், குமைந்த கனைப்புக்களும், மொழி துலங்கா ஆரவாரங்களும், கொண்ட உயிர்ப் படை வெள்ளம் சூழ்மி நிற்கிறது.

எதிரே — மோன நிலையாகத் தவழ்ந்து, சுழித்துச் செல்லும் காவிரியாற்றுப் பெரு வெள்ளம்! இவ்வெள்ளத்தைக் கடந்து, மறு கரை சேர்ந்து வீரச் சாதனை புரியக் காத்திருக்கிறது, அவ்வுயிர்ப் படை வெள்ளம்!

அவற்றுக்குச் சற்றுத் தூரத்துக்கு அப்பால் ஒரு துணிக் கூடாரம். அதனைப் பல வாள் வீரர்கள் காவல் காக்க, உள்ளே துயில் கொண்டிருக்கிறுன் இளவரசனுன பராந்தக பாண்டியன்.

காவிரிப் படுகையின் கரை மேட்டிலே அமர்ந்தபடி இருவர் தனிமையில் பேசிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் — யானைப் படைத் தலைவனுன சங்கரனும், காலாட்படை தளபதியான ஏனுதி சாத்தனும்.]

ஏனுதி: (இலேசாக நகைத்தபடி) இன்றைக்கென்ன இளவரசருக்கு அதிசயமான தூக்கமாக இருக்கிறது?

சங்கரன்: (வியப்புடன்) தூங்குகிருரா? பாவம் இப்போதாவது கொஞ்சம் தூங்கட்டும்! எனக்கும் கூடத்தான் தூக்கம் வருகிறது! (கொட்டாவி விடுகிறுன்)

ஏனுதி: ஏன், நீயும்தான் தூங்கேன். இப்போதைக்குக் காவிரி வெள்ளம் வடியப் போகிறதாகவும் தெரியவில்லை; படைகள் கிளம்பப் போகிறதாகவும் புலப்படவில்லை!

சங்கரன்: நான் தூங்க முற்பட்டால்கூட, முடிகிறதா? எண்ணங்கள் —

ஏனுதி: ஏன், வீட்டரசியின் நினைவுகள்! (குறும்புடன் 'கலுக்'கென நகைக்கிறுன்)

சங்கரன்: உம்! வீட்டரசியின் நினைவைக் கொண்டால் தீட்டிய வாளும் மழுங்கி விடுமே! அப்படி இல்லை. மாமன்னரின் கட்டளையும், இளவரசரின் கனவும் இப்போரில் நனவாகிவிடுமா, நமக்கும் நல்ல பெயர் நல்கி விடுமாவென்ற கவலைதான் இப்போது!

ஏனுதி: (அலட்சியமப் பிரதிபலிக்க) ஹூக்கும்! இதற்கா கவலைப்பட வேண்டும்? குழும்பூர் போரைக் காட்டிலும்—

சங்கரன்: (இடைமறித்தவாறு) அதுதான் நீ நினைப்பது தவறு! பல்லவர் படையையும் சோழர் படையையும் போன்றதல்ல இப்போது நடக்கப் போகும் மழகொங்கத்துப் போர். அங்கே இயற்கை வளம் அவர்களுக்கு மிக அனுகூலம். தவிரவும் அங்கே உள்ள தெல்லாம் சாளுக்கியரின் படை பலம் என்பது உனக்குத் தெரியாதா? சாளுக்கியரின் வெற்றிகளுக்கெல்லாம் முக்கிய காரணம் அவர்களுடைய யானைப் படைகளின் வலிவுதான்: அப்பா! நினைத்தாலும் குலை நடுங்குகிறது. புலிகேசியின் படையெடுப்புக் காலம் முதல் அனைத்தையும் குடியில் பழக்கியிருக்கிருர்கள். அந்தப் போதை வெறியில்....:

(கலுக்கென நகைக்கிறுன்)

ஏனுதி: ஏன்? அந்தப் போதை வெறியில் அவைகளுக்குத் தம்மவரையும் எதிரிப் படைகளையும் கூடத் தெரிந்து கொள்ள முடியவில்லையல்லவா? நல்ல காலம்! நம் அரசர் நம் படை யானைகளுக்கு அப்பழக்கத்தை

ஏற்படுத்த மறுத்து விட்டதைப் பாராட்டத்தான் வேண்டும். அதிருக்கட்டும்.... நம் அமைச்சர் மாறன்காரி அங்கே போனவரை ஏன் இன்னும் காணோம்? ஒருகால் அவருக்கு அங்கே ஏதாவது...

சங்கரன்: நானும் அதைத்தான் நினைக்கிறேன். அப்போதே நம் இளவரசர் அவரை அங்கு அனுப்ப வேண்டாமென்று தடுத்தார். அவருக்குத்தாம் பல மொழிகள் தெரியுமென்று மாமன்னர் அவரை அனுப்பிவைத்தார். இன்றைக்கு அமரபட்சத்து நவமியும் முடிந்து பதினான்கு நாட்களாகி விட்டன. வஞ்சகமாக ஏதாவது தீம்புகள் செய்திருப்பாரோ....?

ஏனாதி: ஆனால் பிற நாட்டின் தூதுவனாக நாடி வருபவருக்கு இன்னல் விளைவிக்கும் அற்பச் செயல் யாரும் புரிந்ததில்லை. இருந்தாலும் இப்போது....

சங்கரன்: (கவலை மிகைப்பட) சாளுக்கியர்களின் அட்டூழியம் அங்கே மலிந்திருப்பதைக் கொண்டு...

[அப்போது காய்ந்த இலைச் சருகுகள் மிதிபடும் ஓசை கேட்கிறது. இருவரும் சட்டெனத் திரும்புகின்றனர். அவர்களுக்குப் பின்புறத்திலுள்ள மரத்தின் மறைவிலிருந்து விரைவாகச் செல்லும் இளவரசனைக் காண்கிறார்கள். இருவரும் திடுக்குற்றபடி எழுகின்றனர்.]

சங்கரன்: (வியப்பும் கவலையும் கொண்டவாறு) ஐயோ! நாம் பேசிக் கொண்டிருந்ததை இளவரசர் கேட்டிருப்பாரோ?

ஏனாதி: ஆமாம். அப்படித்தானிருக்க வேண்டும்.

சங்கரன்: பின்னே, அவர் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தது போல் வந்து சொன்னாயே?

ஏனாதி: அது உண்மைதான். ஆனால்...

[இருவரும் இளவரசன் இருக்கும் பாசறையை நோக்கி நடக்கின்றனர். அவர்கள் சிறிது தூரம் போவதற்குள்ளாகவே மிக எளிய உடை தரித்த ஒருவன் குதிரை மேலேறிக் காவிரிப் படுகையின் மேல் மேற்கு நோக்கிச் செல்லுவதைக் காண்கின்றனர்.]

சங்கரன்: (பரபரப்புடன்) ஏனாதி கவனித்தாயா? குதிரை மேல் போவது யாரென்று புரிகிறதா?

ஏனாதி: (புருவம் குவித்தபடி) யாரது—நம் இளவரசரா...?



சங்கரன்: நம் இளவரசரேதான். சந்தேகமேயில்லை. வா, பாசறைக்குப் போய் விசாரிப்போம்.

[இருவரும் பாசறையை வந்தடைகிறார்கள். அங்கேயுள்ள காவல் வீரர்கள் அவர்களைச் சூழ்கிறார்கள். வீரர்களில் ஒருவன் இளவரசன் மாறு வேடமாக எளிய உடை தரித்துக் கொண்டு செல்வதைக் கூறுகிறான்.]

சங்கரன்: (மிகுந்த பரபரப்புடன்) ஏனாதி காரியம் கெட்டுவிட்டது. நம்அமைச்சரைப் பற்றி நாம் பேசிக்கொண்டிருந்ததை இளவரசரேகேட்டிருக்கிறார். அதன் விளைவுதான் இது! உம்...! நீயும் சட்டென ஒரு குதிரையைப் பிடித்துக் கொண்டு அவரைத் தொடர்ந்து போ! ம்... சீக்கிரம்!

[சங்கரன் ஏனாதியின் தோள்களை உலுக்கி விடவும், ஏனாதியும் பரபரப்புக் கொண்டு ஓடுகிறான்.]

இளவரசன் நான்கு மைல்களுக்கப்பால் வந்து சேருகிறான். விஸ்தாரமான சமவெளிக்கிடையே சிறு சிறு குன்றுகள். அவற்றை படுத்து முந்திரித் தோப்புகள். அதைக் கடந்து அவன் அடர்த்தியான சோலைக்குள் வந்து சேருகிறான். அங்கே!

காற்றினிலே தவழ்ந்து வரும் யாழின் நாதம் கேட்கிறது! வியப்புறுகிறான். சற்று நேரத்துக்கெல்லாம்அத்தேவகானம்முடிவடைகிறது. ஓர் இளம் பெண் மான் போல் துள்ளி வந்து நாலா திசைகளையும் நோக்குகிறான். நல்ல வேளை! அவளது பார்வை அவனிருப்



மதை அறியவில்லை. அவளது முகத்திலே குறும்பு! அவள் தன் மேலங்கியில் மறைத்து வைத்திருக்கும் ஒரு பொருளை எடுத்து அங்கே உள்ள ஒரு மரத்தின் பொந்துக்குள் வைத்து விட்டு வந்த வழிக்கே திரும்பி ஓடுகிறாள். ஒரு விநாடிப் பொழுதுதான்.

கருமுகிலைக் கிழித்துப் பளிச்சிட்டு மறையும் மின்னலைப் போன்று உணருகிறான் இளவரசன். மனம் குறுகுறுக்கிறது. சட்டென ஓடி அவளால் வைக்கப்பட்ட பொருளை எடுக்கிறான். அது ஒரு சுவடிக்கட்டு. அவனுள்ளம் வியப்பால் விம்முகிறது. கட்டைப் பிரித்து உற்று நோக்குகிறான். அதனிலே வடிவுகொண்டுள்ள செந்தமிழ்க் காப்பியம் அவனது கருத்தைப் பற்றியிழுக்கிறது. அதனைக் கையில் எடுத்துக்கொண்டு கற்பாறை மேட்டுக்கு வந்து அமருகிறான். அப்புதுமைக் காப்பியத்துடனேயே ஆழ்ந்து விடுகிறான்.

பொழுதின் இறக்கம் அவனது புலன்களுக்கு எட்டவில்லை. திடீரெனத் தன் சமீபத்திலே மெல்லிய கனிவார்ந்த குரலொன்று 'ஐயா!' என அழைக்கவும் திடுக்குற்று நிமிர்கிறான்.

அவள்: (தாழ்ந்த குரலில்) ஐயா, வணக்கம். தயை புரிந்து கையிலுள்ள அதனை....

இளவரசன்: இதென்ன விந்தை! உம்...? திடீரென எங்கிருந்தோ வருகிறாய். என் கையிலுள்ளதை உன் உரிமைப் பொருள் போன்று கேட்கிறாய்—இதன் கருத்து விளங்கவில்லையே!

அவள்: சுவாமி, அது என் தோழியின் பாடப் பிரதி. அவள் அதை மிக அசட்டையாக வைத்திருந்தாள். அவளைக் கொஞ்சம் பதற வைத்து அறிவு புகட்டலாம் என்றே இங்கு எடுத்து வந்து மறைத்தேன். ஆனால் இப்போதோ எனக்கும் சேர்த்து அறிவு புகட்டலாம் என்பதற்காகவே தாங்கள் தோன்றியிருக்கிறீர்கள்!

இளவரசன்: (கலகலப்புடன் நகைத்தபடி) ம்... அதிருக்கட்டும், சற்று முன் முறையான பயிற்சி கீதம் நடந்ததே. (குடிசையைச் சுட்டிக் காட்டியபடி) இங்கு யார் இருக்கிறார்கள்? அந்தக் காப்பியம் யாருடையது?

அவள்: (உதட்டின் விளிம்பிற் சொரியும் அரும்பு நகையுடன்) அது எங்கள் பேராசிரியரால் தொடுக்கப்பெற்றுள்ள பாமாலை.

இளவரசன்: (ஆர்வமான முகத்துடன்) அப்பாடலை ஒருதரமாகிலும் இசைத்துக் காட்டினால்தான் இச்சுவடிக் கட்டு உன்னுடையதுதானா, கொடுக்கலாமா என்பதைப் பற்றி யோசிக்க முடியும்!

அவள்: (பெருமூச்சுடன் தலை குனிந்து ஒடுங்கி நின்றவாறு இசைக்கிறாள்.)

'ஆன்றை மேய்க்க நீ போதி
அருமருந்து ஆவது அறியாய்
கானகமெல்லாம் திரிந்து—உன்
கரிய திருமேனி வாட...."

[அவள் தன் கரத்திலிருக்கும் சுவடிக் கட்டைப் பக்கத்திலே வைத்துவிட்டு, அவ்விசையிலே செவி பதிய பாடலின் பொருளை இமை மூடிச் சுவைக்கிறான். அவனிடமிருந்து 'ஆஹா' காரங்கள் வெளியாகின்றன!]

அவள்: (இசை)

'பானையிற் பாலைப் பருகிப்
பற்றுதார் எல்லாம் சிரிப்ப
தேனில் இனிய பிரானே
செண்பகப் பூச்சூட்ட வாராய்!'

இளவர: (மிகுந்த பரபரப்பாக) ஆஹா! செல்வி! நான் கேளாத கானமிது! உணர்ச்சி பொங்கி நுரைத்து விழும் இக்காப்பியம் யாருடையது? அவர் எங்கிருக்கிறார்?

அவள்: (முகத்திலே பெருமை மலர) சுவாமி, இது எங்கள் பேராசிரியரான புத்தூர் விட்டுச் சித்தரின் பாடல். அருள் பெற்ற கவியான அவரது இதயச் சுரங்கத்தினின்றும் பெயர்ந்த வைர மணிகளில் இது ஒன்று! எண்ணெடுங்காலமாக இறைஞ்சித் தவமுற்றோரெல்லாம் காண முடியாத அந்நீல வண்ணன் — எங்கள் ஆசிரியரின் இதயச் சிறையிலே அடைபட்டிருக்கிறான். அவனைப் பலப்பல வடிவங்களில் கண்டு பரவசமுறுகிறார் எங்கள் ஆசிரியர். அவர் பெறும் இன்பம் இவ்வையமெல்லாம் பெற வேண்டி, இவ்வேடுகளிலே பதிவாகியுள்ளன!

இளவரசர்: (பரபரப்பான குரலில்) செல்வி! அவர்தாம் இக்குடிசையில்...

அவள்: (குறுநகை தவழத் தலையசைத்து) ஊஹூம், அவரை இப்போது நீங்கள் காண முடியாது. அவர், அம்மாலவனின் புகழ் பாடும் பித்தராகிப் பலப்பல திருப்பதிகளையும் தேடிச் சென்றுவிட்டார்!

இளவரசர்: அப்படியானால் இப்போது அக் குடிசையில்....

அவள்: அக்குடிசையிலுள்ளவர் எங்கள் இளையாழ்வார் 'செல்வ நம்பி' யெனப்பட்டவர்.

இளவரசர்: ஓ, அப்படியா! ம்... (சிறிதே குழம்பியபடி) இம்மழகொங்கத்தின் எல்லையிலே இத்தகைய தமிழ்த் தேனருவி பாய்ந்து கொண்டிருப்பதை நான் இப்போதுதான் அறிகிறேன். இன்று உன் சந்திப்புக் கிடைத்தது என் முன்னோரின் தவப் பயன். உன் பெயர், உன் பெற்றோர் இவற்றைப் பற்றி...

அவள்: (நாணத்துடன் மறுபுறம் திரும்பியபடி) நகர்ப்புறத்திலுள்ள ஓர் எளிய வணிகரின் மகள்.

இளவரசன்: (குறும்புடன்) நானுமோர் ஏழை வணிகன்தான். பெயர் சோலையழகன்!

அவள்: இருப்பிடம்?

இளவரசன்: பாண்டிய நாட்டைச் சேர்ந்த திருமாலிருஞ்சோலை!

அவள்: (வியப்புடன்) திருமாலிருஞ்சோலையா?

இளவரசன்: ஆம்.

அவள்: ம்....(குழம்பியவாறு) எங்கள் ஆசிரியரும் அங்கேதான் சென்றிருக்கிறார்.

இளவரசன்: அதிருக்கட்டும். உன்னை யாரென்று கூறுமலே என்னை மடக்கி விட்டாயே! உன் பெயர்?

அவள்: (பெருமூச்செறிந்தவாறு) ஓ! என் பெயரையா கேட்கிறீர்கள்? ம்... உங்கள் பெயர் ... 'சோலையழகன்' இல்லையா? என் பெயர் பூங்குழலி! வணக்கம்.... நான் வருகிறேன். (கையிலுள்ள சுவடிக் கட்டுடன் கைகூப்புகிறாள்.)




எப்பொழுதும் நான் அணிவது

**பின்னி துணிகளே!**

விசேஷ சந்தர்ப்பங்களுக்கு

**பின்னியின் "வர்சிடி"**

மற்றும்

குவாலியர் ★ டெரிலின் ★ சூட்டிங்குகள்

நான் விரும்பி வாங்குமிடம்

# C.S.V's கிளாத் சென்டர்

போன்: 3909

ராஜா தெரு...... .....கோயமுத்தூர்-1

பிராஞ்சு: திவான்பகதூர ரோடு, R. S. புரம்



TRAYONS

# ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்தது, உங்கள் விற்பனையை பன்மடங்கு அதிகமாக்குகிறது



ஒரு பொருளை வாங்கு முன், அதைக்கையிலெடுத்து நன்கு பரிசீலனை செய்யாமல் யாரும் முடிவுக்கு வருவதில்லை. வாடிக்கைக்காரரின் பரிசீலனைக்கேற்ப, கைக்கெட்டியவாறு பொருள்களைக் கடையில் வைப்பது சிறந்த முறை தான். ஆனால், அடிக்கடி கைபடுவதால் பொருள்களின் மேல் அழுக்கும், கறைகளும் பட்டு விடுகிறது. பிறகு அதை வாங்குவார் யார்? இக்காரணத்தினால்தான் பெரும்பாலான உற்பத்தியாளர்கள் தம் பொருள்களை ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்கின்றனர்.

Rt

ஸ்டாக்கிஸ்டுகள் :

**ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1.

போன் 21641 தந்தி CELYARN.

கிளைகள்: போன் 3253-தந்தி CELYARN 68/416 மெயின் ரோடு, செவ்வாப்பேட்டை, சேலம்.

போன் 2598-தந்தி CELYARN 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.

போன் 3441-தந்தி RAYONS யுனைடெட் இந்தியா பில்டிங், அவனாசி ரோடு, கோயமுத்தூர்.

RT-32-5A

[இளவரசன் திடுக்குற்றபடியே திரும்பித் தான் அமர்ந்திருந்த இடத்தை நோக்குகிறான்.]

அவள்: (கலகலப்பான நகைப்புடன்) சுவாமி! மிக்க நன்றி! நீங்கள் தேடும் பொருள் இருப்பிடத்தை அடைந்து விட்டது!

[கையிலுள்ள கவடிக் கட்டைத தட்டிக் காண்பித்தபடி கைகுவிக்கிறாள்.]

இளவரசன்: (வியப்புடன்) அட! நீ இதை எப்போது என்னிடமிருந்து எடுத்தாய்?

அவள்: எடுக்கவில்லை...பறித்தேன்!

[அவள் ஓட்டமாக ஓடி மறைகிறாள். வேறொரு பக்கமுள்ள கற்பாறையின் மறைவிலிருந்து ஒரு கனைப்புச் சத்தம் வெளியாகிறது! இளவரசன் திடுக்குற்றுத் திரும்பவும் குறும்பு மலர்ச்சியுடன் ஏனாதி வருகிறான்!]

ஏனாதி: (குறும்புடன்) இளவரசே! இப்போதைக்கு இந்த நாடகத்தை ஒரு மூட்டையாகக்கட்டி வையுங்கள்...இப்போது நம் கண் முன் நிற்பது போர் ஒன்றுதான். மழகொங்கத்து மன்னன் வரும் நிறைமதி நாளுக்குள்ளாகத் தங்களை அடிபணியச் செய்துவிடுவதாகச் சபதம் கொண்டுள்ளானும்!

இளவரசன்: (திடுக்குற்றபடி) என்ன என்ன? என்னை அடிபணியச் செய்வதாகவா?

ஏனாதி: ஆம்... நம் அமைச்சரின் அந்தரங்க ஒற்றனை விற்குடி மாராயனைத் தற்செயலாகச் சந்தித்தேன். அவன் மூலம் தெரிந்து கொண்டேன். அவன் நல்ல மாறு வேடத்துடனே இங்கு உலவி வருகிறான்...

இளவரசர்: (சற்றே துடிப்புடன்) நம் அமைச்சர்...?

ஏனாதி: அவரைப் பற்றின புலன்தான் கிடைக்கவில்லை. அவர், இந்த வெண்பைக் காட்டில் யாரோ ஒரு திருமால் பக்தர் இருப்பதாகவும், அவரைத் தேடிக்கொண்டு வந்திருப்பதாகவும், மாராயன் கூறினான். இளவரசே! இப்போது நாம் பேசிக் கொண்டிருப்பதற்கோ சிந்திப்பதற்கோ பொழுதில்லை. அதோ பாருங்கள். பொழுது இறங்கி விட்டது. நாளைக் காலைக்குள் எதிரியின் யானைப் படை ஆற்றைக் கடந்து வந்து நம் படையைஎதிர்க்க முற்பட்டுவிடும் என்று தோன்றுகிறது. அதற்கு முன்பாகவே நம் எதிர்ப்பு முந்திக் கொள்ளவேண்டும்.

[இருவரும் விரைகின்றனர்.]

**கா**விரியின் தென் கரையில் காத்து நிற்கும் பாண்டியப் படைகள் மழகொங்கம் நோக்கிப் புடைத்துச் செல்கின்றன. ஏழு தினங்கள் உக்கிரப் போர் நிகழுகிறது! சாளுக்கியப் படையில் பெரும்பாலானவை அழிகின்றன. எஞ்சியவை புறமுதுகிட்டு ஓடுகின்றன.

திடீரெனச் சங்கொலி எழுகிறது! ஓங்கி உயர்த்தப்பட்ட வெண் குடை, வெண் கொடியுடன் ஓர் இரதம் போர்க் களம் நோக்கி வருகிறது. இரதத்திலே நின்றபடி வந்து கொண்டிருக்கும் கங்க மன்னர் இரு கைகளையும் உயர்த்தித் தூக்கியபடி, போரை நிறுத்துமாறு சைகை யிடுகிறார். பாண்டியப் படைகளோ ''வெற்றி வேல்! வீரவேல்!'' என்று கோஷமிடுகின்றன.

இளவரசன்: கங்க மன்னரே! ஏன் போரை நிறுத்தச் சொல்கிறீர்கள்? பாண்டியர் படையின் உயிரினங்கள் அழிகின்றனவே என்ற கழிவிரக்கத்தாலா? அல்லது பாண்டியர் படையின் வீரத்தால் புறமுதுகிடும் தலையிறக்கத்தாலா? எங்கே உங்கள் வாய்ச் சபதம்? எங்கே உங்கள் வீரம்? எங்கே உங்கள் வாள்?

[கங்க மன்னர் மிக்க அமைதியுடன் தம் உடை வாளை உருவி இரு கரங்களிலும் ஏந்தியவாறு பாண்டிய இளவரசனை நெருங்குகிறார். அவரோடு பாண்டிய அமைச்சர் மாறன் காரியும் வருகிறார்.]

கங்க மன்னர்: தென்னகம் ஈந்த வீரரே! முதலில், இவ்வாளைப் பெறுவதன் மூலம் உங்கள் வெற்றித் திருவையேற்றுக் கொள்ளுங்கள்! பின்னர் — எனது குறிக்கோளான வெற்றி என்ன என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்!

[கங்க மன்னர் மகிழ்ச்சியுடன் கையில் உள்ள வாளை நீட்டுகிறார். இளவரசன் குதிரையை விட்டுக் கீழிறங்கிச் சென்று மிடுக்குடன் வாளைப் பெறுகிறான்.]

கங்க: பாண்டிய வொளியே! இன்றுதான் எனது ஆவல் நிறைவுற்றது! எனது தோல்வி



**ஒருவர்:** இந்தக் கடையில் எந்தப் பொருளும் வாடகைக்குக் கிடைக்குமோ?

**கடைக்காரர்:** ஓ, கிடைக்குமே! உங்களுக்கு என்ன வேண்டும் சொல்லுங்கள்!

**அவர்:** நான் ஒரு தொழில் செய்யலாம் என்று நினைக்கிறேன். இந்தக் கடையையே வாடகைக்குக் கொடுக்க முடியுமா?

யைத் தகுதியான இடத்தில் பெற்றமைக்கு அகம் களிக்கின்றேன். நீண்ட கால சுயேச்சையுடனும், அமைதியுடனும் இருந்து வந்த எங்கள் குறுநாட்டைக் கடந்த சில ஆண்டுகளாகப் பல்லவரும், சாளுக்கியருமாக மாறி மாறிப் பந்தாட்டம் கொண்டார்கள். இதன் விளைவால், எங்கள் நாட்டின் அமைதியே சீர்குலைந்து விட்டது. அதைத் தவிர்க்க என் ஒரே அருமை மகளான பூசுந்தரியைத் தங்கள்பால் திருமண உறவு கொள்ளுவதன் மூலம் இணைப்பிக்க ஆவல் கொண்டேன். எனது அந்தரங்கக் கருத்தை, தூதுவராக வந்த உங்கள் அமைச்சரிடம் தனிமையிலும் கூறினேன். ஆனால் காலம் வஞ்சித்து விட்டது! காவிரியின் தென் கரையில் உங்கள் படைகள் சூழ்ந்திருப்பதைக் குறிப்பிட்டு, சாளுக்கிய மன்னன் என்னை நெருக்கி விட்டான். அவன் எதிரிலே உங்களை அடிபணியச் செய்வதாகச் சபதம் கூறினது உண்மை! பலப் பல போர்க்களங்களிலும் கையிலே வாள் எடுத்துப் போர் புரிந்த இக்கங்க மன்னன், இப்போரிலே, வாளைத் தீண்டவும் கருத்தின்றி, விலகி இருந்தே — சாளுக்கியரின் படைப் பெருக்கத்தை வஞ்சம் தீர்த்துக் கொண்டேன்! மாவீரரே! இனி, எங்கள் கோட்டையின் முடியிலே ஒரு சிம்மக் கொடியோ, அல்லது பன்றிக் கொடியோ பறந்திட இடம்பெறாது!

மாறன்காரி (இளவரசனின் தோளைப் பற்றியசைத்தபடி): இளவரசே! கங்கமன்னர் கூறுவது அனைத்தும் உண்மை! நான் மழகொங்கத்தை விட்டு, திருமாலின் அடியவரைப் பின்தொடர்ந்து செல்லாதிருந்திருந்தால் இப்போரே நடந்திராது! மன்னர் ஆவலின்படி, அவரது அருந்தவப் புதல்வியான பூசுந்தரியை நீங்கள் மணம் புரிந்து கொள்ள வேண்டியதுதான் நல்லது.

இளவரசர் (பெருமூச்சுடன் இருவரையும் வெறித்து நோக்கி விட்டு) அமைச்சர் பெரும! தங்களது வார்த்தையை என் தந்தையாரும் மறுத்ததில்லை. ஆனால் நான் மறுப்பதற்கு மன்னிக்கவேண்டுகிறேன். பெரியீர், கங்க மன்னருடன் காலம் முழுவதிலும் நட்புற்றிருப்பதில் எனக்குத் தடையில்லை. என் இதயத்தில் வேறொரு கன்னியவள்... ஆழ்ந்து உறைந்து விட்டாள்! அவளையன்றி —

மாறன்: என்ன? இளவரசே! நீங்களா இவ்வாறு புகலுகின்றீர்கள்? பாண்டிய மண்டலத்தின் பேரரசனாகத் திகழப் போகும் நீங்களா இத்திருமண உறவினை மறுக்கின்றீர்கள்? இளவரசே! நீங்கள் கங்கர் புதல்வியை நேரில் கண்டதில்லை. அவளது பேரெழிலையும், அவளுக்குள்ள அறிவுத்திறனையும் நீங்கள் அறிந்தால், உங்கள் தகுதியற்ற காதல் தெறித்து விழுந்து விடும்!

இளவரசர் (திடுக்குற்று வெறித்து நோக்கியபடி): பெரியீர்! நீங்களா என் பண்பைச் சோதிக்க வேண்டும்? போரின்பால் புறமுதுகிட்டுள்ள இக்கங்க மன்னரின் பேரழகுப் புதல்வியை மணப்பதைக் காட்டிலும், அம் மழகொங்கத்தின் எல்லையிலேயே எளிய வாழ்வு கொண்டிருக்கும் ஒருவரின் புதல்வியை மணப்பதையே மிகப் பெருமையாக மதிக்கின்றேன்!

[அப்பொழுது ஓர் இரதம் போர்க் களம் நோக்கி விரைந்து வருகிறது. அதனின்றும் கங்க மன்னரின் புதல்வியான பூசுந்தரி இறங்கி வருகிறாள்!]

மாறன்: இவள்தான் கங்க மன்னரின் புதல்வி பூசுந்தரி.

இளவரசர் (வியப்புடன்): இவளா கங்கமன்னரின் புதல்வி? இவள் — பூங்குழலி!

கங்கர்: இளவரசே! இவள்தான் என் மகள் பூசுந்தரி! இவளுக்கு உள்ள தமிழார்வத்தையும் இசையறிவையும் கண்ட வில்லிப்புத்தூர் விட்டுச் சித்தர் என்னும் திருமாலடியார் இவளைத் தம்முடன் இட்டுச் சென்று, இவளது தமிழறிவைப் பெரிதும் வளர்த்து விட்டார்!

எனாதி: இளவரசே! உங்கள் இருவரின் மனத் திண்மைகளும் போற்றத் தக்கன! 'சோலையழகன்' யார் என்பதை அவள் அறியவில்லை; 'பூங்குழலி' யார் என்பதை நீங்கள் அறியவில்லை! உங்கள் இருவரின் சந்திப்பையும், காதலையும் கங்க மன்னர் அறியவில்லை! இந்நிலையிலே இன்று காலை நான் இங்கு வந்து சேர்ந்தபின் — அரண்மனைப் புறத்தே இவளது உறுதியைக் கண்டு வியந்தேன். இவள் திருமால் இருக்கும் சோலையைச் சேர்ந்த ஒரு வணிகனிடம் தன் மனத்தைப் பறித்திருப்பதையும், அவ்வுறுதியில் மாறாதிருப்பதையும் கண்டு மகிழ்ந்தேன். அத்தகைய வணிகனை சோலையழகன்தான் எங்கள் இளவரசன் பராந்தக பாண்டியன் என்பதை நான் உணர்த்திய பின்பே இவள் திருமணத்துக்கு இசைந்தாள்.

இளவரசர்: பெரியீர், எங்கள் இருவரையும் இணைப்பித்தது — இங்குள்ள தமிழ்மணம்!

[பூங்குழலி பாண்டிய இளவரசனின் அருகே வந்து, தன் கையிலுள்ள பூச்சரத்தை வாளுக்குச் சூட்டி விட்டுப் புன்னகை தவழ நிற்கிறாள்.]

# உங்களுக்கும் ஒரு
# பிலிப்ஸ்
## ஸைக்கிள்
## அவசியம்

பளபளவென கண்ணைப் பறிக்கும் பிலிப்ஸ் ஸைக்கிள் உங்களைப் போன்ற இன்றைய சுறுசுறுப்புள்ள இளைஞர்களுக்காகவே பிரத்தியேகமாய்த் தயாரிக்கப்பட்டது. உயர்ந்த ரக எஃகினாலான இந்த ஸைக்கிள், உறுதியும், எவ்விதமான கரடு முரடான பணிகளைச் சமாளிக்கவல்ல சக்தியும் வாய்ந்தது. 70 வருட காலமாய் உலகெங்கும் புகழ் பெற்ற பிலிப்ஸ் ஸைக்கிள், டி. ஐ. ஸைக்கிள்ஸாரின் மிக்க நவீன இயந்திர வசதி கொண்ட தொழிற்சாலையில், உங்களுக்காக தயாரிக்கப்படுகிறது.




PHILLIPS

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்

JWT-TIC-PH-2053a

# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்



சங்கரின் மனத்தை முறிக்கும்படியாக வசந்தி அவனை மணந்து கொள்ள முடியாது என்று கூறியதும் அவன் அடைந்த வேதனை கொஞ்சநஞ்சமல்ல. எனினும் எப்படியாவது வாதம் புரிந்து அவளைத் தன் வழிக்குக் கொண்டு வந்து விடலாம் என்கிற எண்ணத்துடன், ''வசந்தி! நீ என்ன கல்யாணத்தைச் சிறைக்கூடமாகக் கருதுகிறாயா, அல்லது அது இரண்டு அன்பு உள்ளங்களை அலுப்புறும் சத்துருக்களாக்கிப் பிரித்து விடும் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்டான்.

''சங்கர்! உன் சுபாவம் வேறு, என் சுபாவம் வேறு!'' என்றாள் வசந்தி.

சங்கர் ஒரு கணம் பின்வாங்கினான்.

''ஏன் இப்படி யெல்லாம் பேசுகிறாய், வசந்தி? நீ என்னோடு பழகுவதைப் பார்த்ததும் நீ என்னைக் காதலிக்கிறாய் என்று நினைத்தேன்.''

''அப்படி நீ அர்த்தப்படுத்திக் கொண்டால், அது உன் தப்புதான், சங்கர்!'' என்றாள் வசந்தி.

''நீ என்னைப் பார்த்துச் சிரித்தாய்! பரிகாசமாய்ப் பேசினாய்! பரவசம் உண்டாகும்படி பழகினாய்!'' என்றான் சங்கர்.

''என் சிநேகிதிகளிடம் கூடத்தான் அப்படி யெல்லாம் பழகினேன்; பேசினேன்; சிரித்தேன்!''

''ஓகோ! என்னையும் ஒரு பெண்ணாக நினைத்தாய்! ஆணாகவே மதிக்கவில்லை!'' என்று சங்கர் குமுறினான்.

''அப்படி நினைக்காதே, சங்கர்!''

''வசந்தி! என் உள்ளத்தை உடைப்பதால் உனக்கு என்ன லாபம்? ஒரு வேளை உனக்கு அது வேடிக்கையாக இருக்கலாம்! ஆனால் அதன் வேதனை, உன் உள்ளமும் உடைந்து அதை நீ அநுபவிக்கும்போது தான் உனக்குத் தெரியும்!''

''என்னைச் சபிக்காதே, சங்கர்! அன்பு என்பதற்குக் காதல் என்ற ஒரே அர்த்தம்தான் உண்டா?... சங்கர்! சத்தியமாகச் சொல்லுகிறேன். ஒரு சிநேகிதி மீது வைக்கும் அன்புதான் உன்னிடம் வைத்தேன். ஓர் ஆணும் பெண்ணும் பழகினால் அது காதலாகத்தான் இருக்க வேண்டுமா? இருவரும் நண்பர்களாக இருக்க முடியாதா?''



''ஓ! 'பிளாட்டனிக் லவ்' என்கிற உடல் நினைவில்லாத ஆத்மீகக் காதலைக் குறிப்பிடுகிறாயா, வசந்தி? அதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை!'' என்ற சங்கர் அழாத குறையாகச் சிரித்தான். ''வசந்தி! ஒரே வார்த்தையில் சொல்லி விடு! நீ என்னைக் காதலிக்கவே யில்லை! அப்படித்தானே?''

வசந்தியின் உதடுகள் தயங்கின.

அவ்வுதடுகளின் அசைவையே கூர்ந்து கவனித்த சங்கர், ''எனக்கு இப்போது புரிகிறது, வசந்தி! நீ என்னைக் காதலிக்க வில்லை. அது உண்மைதானே?'' என்று கேட்டான்.

''உண்மைதான்!''

வசந்தி தன் கரு விழிகளை உயர்த்தி ஒரு கணம் சங்கரின் முகத்தை உற்றுப் பார்த்தாள். அந்த முகத்தில் பதிந்திருக்கும் வேதனை அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தது. அவனுக்காக வசந்தி வருத்தப்பட்டாள். ஆனால் சங்கரைப் போல், ஒரு பெண்ணின் அசைவுகளையும் சிரிப்புகளையும் கண்டு மோகம் கொள்ளும் உணர்ச்சிப் பித்தர்கள், காதலின் வேதனையையும், ஏமாற்றத்தையும் பெரிதாக நினைத்துக் கொண்டு அதிக காலம் அவஸ்தைப் பட மாட்டார்கள் என்பதும் அவளுக்குத் தெரியும்! சில மாதங்கள் போனால் மனப்புண் ஆறியதும் சங்கர் வேறு எங்காவது, வேறு ஒரு பெண் தனக்குத் தகுதியானவளாகக் கிடைத்ததும் அவளைப் பிடித்துக் கொண்டு வாழ்க்கை நடத்தினால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.



''என்னை மறந்து விடு, சங்கர்.... அது சுலபம்தான்!''

''ஒரு வேளை நீ வேறு யாரையாவது காதலிக்கிறாயா?....''

வசந்தியின் முகம் குபீரெனச் சிவந்தது. உதடுகள் துடித்தன.

''என்னை மன்னித்துவிடு, வசந்தி!'' என்று பரபரப்புடன் சொன்ன சங்கர், ''நான் அப்படிக் கேட்டிருக்கக் கூடாது! உன் உள்ளம் வேறு ஒருவனைக் காதலித்திருந்தால் அதைப் பற்றி நான் விசாரிப்பதுகூட அநாகரிகம்!'' என்றான்.

''இல்லை, இல்லை, சங்கர்! நான் வேறு யாரையும் காதலிக்க வில்லை! என்னால் காதலிக்கவும் முடியாது!''

''ஏன் முடியாது?''

''நான் எந்த ஆணின் காதலுக்கும் அடிமையாவதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன்!''

''ஓஹோ! காதல் என்பது அடிமைத் தனமா? அப்படி யென்றால் அன்பு, பாசம், பற்று என்பதெல்லாம்கூட அடிமைத்தனம்தான்! தேச பக்தி என்பது கூட அடிமைத்தனம்தான். ஏனென்றால், அது மனிதனை மண்ணின் எல்லைகளுக்கு அடிமைப்படுத்துவது! கடவுள் பக்தி என்பதும் அடிமைத்தனம்தான். அது கல்லுக்கோ, கற்பனையின் பிரமைகளுக்கோ மனிதனை அடிமைப்படுத்துவது! தாய்மொழிப் பற்று என்பதும் அடிமைத்தனம்தான். அது வாய் ஓசைகளுக்கு மனிதனை அடிமைப்படுத்துவது! பெற்றோர்களின் அன்பு என்பதும் அடிமைத்தனம்தான். அது பிள்ளைகளுக்கு அவர்களை அடிமைப்படுத்துவது! வசந்தி! அடிமைத்தனம் என்ற முழக்கங்கள் மேடைப் பேச்சுகளுக்கு வேண்டுமானால் அழகாக இருக்கலாம். ஆனால் நடைமுறை வாழ்க்கைக்குப் பயன் படாது! வசந்தி! பாசமோ பற்றோ வைக்க முடியாத உள்ளம் எதன் மீதும் படர்ந்து வளரவோ வாழ்க்கையின் சுவையைக் காணவோ முடியாது! இதை நீ எப்போதும் ஞாபகம் வைத்துக் கொள்! என்றாவது ஒரு நாள் நீ மனப் பூர்வமாக ஒருவனைக் காதலிக்க முடிகிற போதுதான் அதன் இன்பமோ, ஏமாற்றத்தின் வேதனையோ உனக்குப் புரியும். அப்போது என்னை நினைவுபடுத்திக் கொள்!''

''சங்கர்....''

''நீ இப்போதே எந்த முடிவும் சொல்ல வேண்டியதில்லை, வசந்தி!— நாட்டு மக்களைச் சிரிக்க வைக்கப் புறப்படும் என்னை நீ அழ வைத்து அனுப்புகிறாய்! ஆனால் என்றாவது ஒரு நாள் நீ மனம் மாறி என்னை மணந்து கொள்வாய் என்ற என் நம்பிக்கையையும் நாசப்படுத்தி அனுப்பாதே!'' என்று சொல்லி விட்டுச் சங்கர் விர்ரெனப் புறப்பட்டு, அவன் வந்த வழியே வேகமாகப் போய் விட்டான்.

அவன் போனதும் ஏதோ ஒரு பாரத்திலிருந்து விடுபட்டவள் போல் வசந்தி பெருமூச்செறிந்தாள். அடை மழை போன்ற அழகான நாடக வசனங்களைத் தன் காது குளிரக் கேட்டது போல் தன் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டு வழக்கம்போல் சிரிக்கவும் முயன்றாள்.

## அத்தியாயம் பதினாறு

# கசப்பும் இனிப்பும்

''உமா! குழந்தைகள் ஒரேயடியாகக் குதிக்கின்றன! மிருகக் காட்சிச் சாலையில் ஏதோ வாலில்லாக் குரங்கு, குட்டி போட்டிருப்பதாக அவர்களின் சித்தப்பா ஜகந்நாதன் சொல்லிவிட்டுப் போனானாம். அதிலிருந்து மிருகக்காட்சிச் சாலைக்குப் போக வேண்டும் என்று பாவம் குழந்தைகள் துடிக்கின்றன. நீ அவர்களை ஒரு நாள் அழைத்துப் போகிறாயா?'' என்று பரிவுடன் குரல் தழுதழுக்கக் கேட்ட திரிபுர சுந்தரியம்மாள், கட்டிலை விட்டு எழுந்திருக்க முடியாத பலவீனமான நிலையில் இலேசாகப் புரண்டு படுத்தாள்.

''சரியம்மா! நாளை ஞாயிற்றுக் கிழமை லீவுதானே? நாளைக்குக் காலையிலேயே அழைத்துப் போகிறேன். எனக்கும் உற்சாகமாக இருக்கும்!'' என்றாள் உமா அன்பு கனியும் புன் முறுவலோடு.

அழகழகாக ஒன்பது குழந்தைகளைப் பெற்ற பாக்கியவதியான ஒரு தாய் அக் குழந்தைகளோடும், கணவரோடும் பல இடங்களுக்கும் சென்று பார்த்து மகிழும்படியான பாக்கியத்தை மட்டும் பெறாமல், உடல் பலவீனமான நிலையில் சதா காலமும் மாடியறைக் கட்டிலோடு ஒட்டிக் கொண்டு அதிலேயே தன் காலத்தைக் கழித்து வருவதென்றால் அந்தத் தாயுள்ளத்தில் எத்தனை தவிப்புகள் இருக்கும்? அது உமாவுக்குப் புரிந்திருந்தது. அதனால் அந்த அம்மாள் மீது அவளுக்கு அளவு கடந்த பாசப் பிடிப்பும் ஏற்பட்டிருந்தது.

''எங்கள் டீச்சர் நாளைக்கு எங்களையெல்லாம் மிருகக் காட்சிச் சாலைக்குக் கூட்டிக் கொண்டு போகப் போறாங்க!'' என்று திரிபுர சுந்தரி அம்மாளின் குழந்தைகளெல்லாம் குதித்துக் கொண்டே சேதியை அக்கம் பக்கத்து வீடுகளில் உள்ள பிள்ளைகளுக்கெல்லாம் பெருமையுடன் பறைசாற்றுவதற்காகப் பறந்து சென்றன.

மூத்த பெண் ராஜி தன் தாயாரின் கிழிந்த பட்டுப் புடவையொன்றைத் தேடி எடுத்து, அதைத் தனக்குத் தாவணியாகத் தயாரிப்பதற்காகத் தையற்கடைக்கு ஓடினாள்.

''உமா! குழந்தைகளின் மனத்தில் ஜகந்நாதன் விளையாட்டாக ஒரு ஆசையை உண்டாக்கினானே தவிர அவனே அவர்களை மிருகக் காட்சிச் சாலைக்கு அழைத்துக் கொண்டு போகத் தயாராக இல்லை. அதைப் பற்றி அவனிடம் நான் கேட்டதற்கு, 'அண்ணி! உன் நவக்கிரகங்களைக் கட்டி மேய்க்கவும், அவர்களின் அமானுஷ்யமான கேள்விகளுக்குப் பதில் சொல்லவும் வாயில்லா ஜீவன்களைப் பற்றிப் பொறுமையாக வர்ணிக்கவும் டீச்சர் உமாவால்தான் முடியும்' என்று அவன் சிரித்து மழுப்பினான். அது மட்டுமல்ல; 'உமாவை எப்போதும் உன் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருக்க ஒரு வழி பாரேன், அண்ணி!' என்று எனக்கு ஒரு யோசனையும் சொல்லி விட்டுப் போனான்'' என்றாள் திரிபுர சுந்தரியம்மாள்.

உமா சிரித்துக் கொண்டாள். ஆனால் உள்ளூற ஒரு பரபரப்பு உண்டாயிற்று.

திரிபுரசுந்தரி அம்மாள் ஓர் ஆழ்ந்த பெருமூச்சு விட்டுவிட்டு, உமாவைக் கூர்ந்து நோக்கியபடி ''உமா! இங்கு ஜகந்நாதன் வந்தால் உன்னைப் பற்றித் தான் ஓயாமல் சிரிக்கச் சிரிக்கப் பேசுவான்... அவனைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டாள்.

உமா தன் பரபரப்பை அடக்கிக் கொண்டு சமாளிக்க முயன்றவளாய், ''உங்கள் மைத்துனர்தானே? அவர் ஒரு டாக்டர், நாவல் ஆசிரியர், சிறந்த அறிவாளி! எதையும் தமாஷாகத் தான் பேசுவார்!'' என்றாள், ரத்தினச் சுருக்கமாக.

''அவ்வளவு இருந்தும் என்ன? அவனுக்கு வாழ்க்கையில் ஒரு பிடிப்போ, பொறுப்போ இல்லை. பொறுப்பு என்பதை ஒரு சுமை என்று நினைக்கிறானே தவிர, அதில்தான் சுவை இருக்கிறது என்பது அவனுக்குப் புரியவில்லை. அதனால் குடும்பம், குழந்தைகள் என்பது கால்கட்டுகள் என்று நினைத்துக் கல்யாணம் செய்து கொள்ள மறுத்து விட்டு மேல்நாடுகளைச் சுற்றிப் பார்க்கச் சென்றான். அவனுடைய அண்ணாகூட அந்தக் காலத்தில் அப்படித்தான் இருந்தார். அவர் துறவியாகி ஏதாவது ஆசிரமத்திலோ, மடத்திலோ சேர்ந்து விடுவார் என்றுகூடச் சொன்னார்கள். ஆனால்.... நான்தான்....'' என்று ஒரு பெருமூச்சு விட்டு நிறுத்திய திரிபுர சுந்தரியம்மாள் அலாதியான ஒரு புன்

---

இந்த வருடம் நவராத்திரி பூஜையைக் காஞ்சி காமகோடி பீடம் சங்கராச்சாரிய சுவாமிகள் திருச்சி நகரத்தில் நடத்தியிருக்கிறார்கள். திருச்சி நகரத்தில் ஆசாரிய சுவாமிகள் பட்டணப் பிரவேசம் செய்யும் காட்சியையும் மக்கள் பக்தி சிரத்தையோடு திரளாக நின்று அவரை வரவேற்கும் கோலாகலத்தையும் காண்கிறீர்கள். ஆசார்யரோடு புதுப் பெரியவர்களும் இந்தக் குதூகலப் பவனியில் வருவது கண்கொள்ளாக் காட்சிதான்.



முறுவலுடன், ''நான்தான் அவரை எப்படியோ பிடித்துக் கொண்டுவிட்டேன் என்று என் அப்பா அம்மா கூடக் கேலி செய்தார்கள்'' என்று சொல்லிவிட்டு, நாணத்தோடு முகம் தாழ்த்திக் கொண்டாள்.

அதன் எதிரொளியாக உமாவின் முகத்திலும் புன்முறுவலுடன் நாணத்தின் செவ்வொளி படர்ந்தது.

''ஆனால் உமா, அதை ஜகந்நாதன் மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை. 'எங்க அண்ணா விவேகாநந்தரைப் போலவோ, புத்தரைப் போலவோ சரித்திரப் பிரசித்தி அடைந்திருப்பார், அண்ணி! அவரை நீதான் மடக்கி வக்கீலாக கோர்ட் வாசலோடு நிறுத்தி, அவரை நவீன குசேலராகவும் ஆக்கி வருகிறாய்' என்று ஜகந்நாதன் பரிகாசம் செய்வான். அவன் மனத்தையும் யாராவது ஒரு பெண் மாற்றிக் குடும்பமும் குடித்தனமுமாக வாழ வைக்க முயன்றால் எவ்வளவோ நன்றாயிருக்கும்!''— என்று பெருமூச்சு விட்ட திரிபுர சுந்தரியம்மாள் உமாவைக் கூர்ந்து பார்த்தாள்.

அந்தப் பார்வையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டதும் உமா விருட்டென்று எழுந்து, ''நான் வருகிறேன், அம்மா!'' என்று விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தாள்.

வெளியே, தெருவின் இருட் சரிவில் தெரு விளக்குகளின் வெளிச்சம் தன் மீது படாதபடி வாசற்படி ஓரமாக ஓர் ஆண் உருவம் நின்று அவளுடைய வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

உமாவைக் கண்டதும் அந்த உருவம் சட்டென மறைய முயன்றது.

அதற்குள் உமா தன் புருவங்களை உயர்த்தி வியப்புடன் அந்த உருவத்தை உற்றுப்பார்த்தவாறு, ''என்ன பிச்சுமணி, நீயா?'' என்று கேட்டாள்.

பிச்சுமணி தலை குனிந்தான்.

அப்போது இரவு எட்டு மணி! நிலா வெளிச்சம் கூட அதிகம் இல்லை. மூன்றாம் பிறை நிலவு, மொட்டவிக்க முயலும் அரும்பு போல், பருவக் கொப்பில் இருக்கும் முதிராத கனி போல மோகனப் புன்முறுவல் பூக்க முயன்றது.

''பிச்சுமணி! நீ ஏன் இங்கு வந்தாய்?'' என்று சற்றுக் கோபமாகவே உமா கேட்டாள்.

பிச்சுமணி பதில் சொல்லவில்லை.

எதிரேயுள்ள சோடாக் கடை சாத்தியிருந்தது. அங்கே சோடா வாங்கிக் குடிக்க வந்ததாகவும் சொல்லமுடியாது.

''என்ன, பிச்சுமணி! இங்கு ஏன் வந்தாய்?'' என்று உமா மீண்டும் கேட்டாள்.

பிச்சுமணிக்கு அழுகை வந்துவிடும் போலிருந்தது.

''உங்களைப் பார்க்கத்தான்....!'' என்று அவன் விம்மினான்.

''என்னையா?'' என்ற உமாவுக்கு நெஞ்சு வேகமாக அடித்துக்கொண்டு விம்மித் தாழ்ந்தது. முகமெல்லாம் சிவந்து, கண்ணிமைகள் வண்ணத்துப் பூச்சியின் இறக்கைகளைப் போல் படபடத்தன. இனம் புரியாத ஓர் இன்ப ஜுவாலை உடலெல்லாம் படர்ந்து அவளை ஆகாசத்தில் தூக்கிக்கொண்டு போக முயன்றது.

அந்த உணர்ச்சியை உமா வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, ''என்னை நீ எதற்காகப் பார்க்க வேண்டும்?'' என்று கண்டிக்க முயன்றாள். ஆனால் குரல் என்னவோ கரகரத்தது.

''ஒன்றுமில்லை!.... என் தாத்தாவுக்கும் எனக்கும் ஒரு சிறு சண்டை!''

''சண்டையா?''

''ஆமாம்! என் தாத்தாவிடம் டாக்டர் ஜகந்நாதன் என்னைப் பற்றி ஏதோ கோள் சொல்லி யிருக்கிறார்....''

''டாக்டர் ஜகந்நாதனா?''

''ஆமாம்! இந்த வீட்டுக் குழந்தைகளுக்குச் சிங்கப்பூர் சித்தப்பாவாக வந்து முளைத்திருக்கிறாரே, அந்த டாக்டர் ஜகந்நாதன்தான்! அவர் எப்படியோ என் தாத்தாவைச் சிநேகம் பிடித்துக் கொண்டு எங்கள் குடும்ப டாக்டராகி விட்டார். இப்போதெல்லாம் என் தாத்தா அவர் பேச்சைத்தான் மதிக்கிறார். அவர் என்னைப் பற்றி ஏதோ சொன்னதால்தான் என் தாத்தா இன்று என்னைப் பிரமாதமாகக் கண்டிக்க ஆரம்பித்து விட்டார். நான் வெளியே ஊர் சுற்றக் கூடாது. முக்கியமாக இந்தத் திருவல்லிக்கேணிப் பக்கமே எட்டிப் பார்க்கக் கூடாது என்றெல்லாம் தடை உத்தரவுகள் போட்டார். ஆனால் நான் என்ன சின்னப் பிள்ளையா? தாத்தாவின் தடையுத்தரவுகளை யெல்லாம் மீறப் போவதாக நானும் சத்தம் போட்டேன். 'எங்கே, மீறு பார்க்கலாம்!' என்று தாத்தா உறுமினார். 'இன்றே பாருங்கள்! ராத்திரி இரண்டாவது ஆட்டம் சினிமா பார்த்து விட்டுச் சரியாக ஒரு மணிக்குத்தான் திரும்பி வருவேன்!' என்று நான் கத்தி விட்டு வந்து விட்டேன்'' என்று பிச்சுமணி கோபத்தால் உடம்பெல்லாம் குலுங்க, உதடுகள் துடிதுடிக்கப் படபடவென்று சொன்னான்.

''நல் தாத்தா உன் மீதுள்ள பிரியத்தால்தான் கண்டிக்கிறார். உன் நன்மைக்காகத்தான் அவர் கட்டுப்பாடுகளெல்லாம் விதிக்கிறார். வயதான காலத்தில் அவர் மனத்தை நீ புண்படுத்தலாமா, பிச்சுமணி?''

''அவர் மட்டும் என் மனத்தைப் புண்படுத்தலாமோ?''

''உன் மனத்தைப் புண்படுத்தினாரா ?''

''ஆமாம்! என் தாத்தா என்னைப் பற்றி எது சொன்னாலும் பொறுத்துக் கொள்வேன். ஆனால்.... ஆனால்....'' என்று உதடுகள் வெடவெடக்கப் பொருமி நிறுத்திய பிச்சுமணி அதற்கு மேல் அதைப்பற்றி உமாவிடம் விளக்கிச் சொல்ல விரும்பாதவனாக, ஆத்திரத்தோடு தன் உதடுகளைப் பற்களால் கடித்துக் கொண்டு, பெரிதாக விம்மி யழுதான்.

உமாவின் தேகம் இலேசாக நடுங்கியது.

''உமா! உங்களிடம் இதைச் சொன்னால் தான் என் மனசு ஆறும் போல் இருந்தது. அதனால்தான் உங்களைத் தேடி வந்தேன்!''

''என்னையா?....''

''ஆமாம்! என் தாத்தாவை விட்டால் உங்களைத் தவிர எனக்கு வேறு யார் இருக்கிறார்கள், உமா?'' என்று பிச்சுமணி குழந்தையைப் போல் ஒருவித ஏக்கத்துடன் குரல் தழுதழுக்கக் கூறினான். அதன் உருக்கத்தில் உமாவின் உள்ளமும் கனிந்தது.

''பிச்சுமணி! நீ குழந்தை போல உன் தாத்தாவின் மீது கோபித்துக்கொண்டு வந்திருக்கிறாயே? இது தப்பு! பேசாமல் வீட்டுக்குத் திரும்பிப் போ!''

''ஊஹூம்! என் தாத்தாவிடம் சொன்னபடி ராத்திரி ஒரு மணி ஆனபிறகுதான் என் வீட்டுக்குப் போவேன். எனக்கும் மானம், ரோஷம் உண்டு!''

''அப்போ, நீ இரண்டாவது ஆட்டம் சினிமா பார்க்கப் போகிறாயா?''

''இல்லை! இன்று எனக்கென்னமோ சினிமா கினிமா ஒன்றும் பிடிக்கவில்லை!''

''அப்படியானால் ராத்திரி ஒரு மணி வரை நீ என்ன செய்வாய்? உன் காரை எடுத்துக்கொண்டு தெருத் தெருவாய்ச் சுற்றிக் கொண்டிருப்பாயா?''

''இல்லை! காரை உங்கள் வீட்டு வாசல் முன்னால் நிறுத்தி விட்டுக் காரிலேயே படுத்துத் தூங்குவேன்!''

''அது 'டாப்' இல்லாத கார் ஆயிற்றே! குளிரும் வாடையுமாக இருக்கிறது. ராத்திரி மழை வேறு பெய்தால் என்ன செய்வாய்?''

''மழையில் தெப்பமாக நனைவேன்!''

''ஐயய்யோ! ஜலதோஷம் பிடித்துக் கொள்ளுமே?''

''பிடித்துக் கொள்ளட்டும்! குளிர் ஜுரத்தால் செத்துப் போகிறேன்!''

அவனை உமா கூர்ந்து நோக்கினாள். அவன் சொன்னபடி செய்யக் கூடியவன்தான் என்பது அவளுக்குப் புலனாயிற்று. **(தொடரும்)**





## அருவிச் சிகிச்சை

நீரில், முக்கியமாகச் சில அருவிகளில் குளிக்கும்போது வெளி உடம்பு ஆரோக்கியமடைவதுடன், தண்ணீரில் உள்ள தாதுப் பொருள்கள் தோல் வழியே கிரகிக்கப்பட்டு உள் உடம்பில் உள்ள நோய்களும் அகலுகின்றன. இம்மாதிரி ஏற்படுவதை விஞ்ஞானிகள் 'மார்க்கிங்' என்று பெயரிட்டிருக்கிறார்கள். இவர்கள் தோலின் கிரகிக்கும் சக்தி பற்றிச் செய்துள்ள ஆராய்ச்சிகளில் வெளியான சில தகவல்கள் நிபுணர்களுக்குக் கூடப் புதிது போலத் தோன்றி யுள்ளன. தோல்களிலுள்ள 'செல்கள்' இப்பொருள்களைக் கிரகித்துக் கொண்டபின் அங்கு நடைபெறும் மாறுதல்கள் அதி ஆச்சரியமானதாக இருப்பதாக இவர்கள் கண்டு பிடித்திருக்கின்றனர்.

மனிதனுடைய தோல் மூச்சு விடுவதுடன் மட்டுமின்றி உட்கொள்ளும் சக்தியையும் பெற்றுள்ளது. சாதாரணமாக நன்றாக ஸ்நானம் செய்யும்போது சருமம் ஐம்பது கிராம் தண்ணீரை உள்ளுக்கு இழுத்துக் கொள்கிறது என்பது நன்கு கணக்கிட்டே கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு சில நிமிட நேரத்தில் தண்ணீரிலுள்ள குணப்படுத்தும் பொருளைச் சருமம் கிரகித்து விடுகிறது. சருமங்களில் உள்ள செல்களில் இதன் பின் ரசாயன மாறுதல்கள் ஏற்படுகின்றன. செல்களிலிருந்து ரத்த நாளங்கள் மூலம் தேகத்துக்கு நன்மை செய்யும் பொருள்கள் உடலில் சேர்க்கப்பட்டு விடுகின்றன. இந்தச் சிகிச்சை முறையைக் கொண்டு எல்லா நோய்களையும் அகற்ற முடியுமா அல்லது ஒரு சிலவற்றை மட்டும்தான் குணப்படுத்த முடியுமா என்பது இப்போது ஆராயப்பட்டு வருகிறது.




# அம்மா ஆ ஆ ஆ ஆ

அவனுடைய வேதனையைப் போக்கி அவனைச் சிரிக்கச் செய்யுங்கள், உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடுப்பதன் மூலம். இப்பொழுது ஒரு நூற்றாண்டுக்கு மேலாகக் குழந்தைகள் (லட்சக்கணக்கில்) வாயு, வயிற்றுக் கோளாறு மற்றும் பல் முளைக்கும் போதுள்ள வேதனைகள் முதலியவைகளிலிருந்து நிவாரணம் அடைந்திருக்கின்றனர். இத்தகைய நிவாரணத்தை உட்வர்ட்ஸ் மட்டுமே அளிக்கிறது. தலைமுறை தலைமுறையாகத் தாய்மார்கள் செய்தது தவறாகவே இருக்கமுடியாது!

## உட்வர்ட்ஸ்
## 'கிரைப் வாட்டர்'

**100 வருஷங்களுக்கு மேலாக உலகெங்கிலும் உபயோகிக்கப்படுகிறது.**



அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகள்: ஹெர்பர்ட்ஸன்ஸ் லிட். பம்பாய், கல்கத்தா, & லக்னோ ● டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ. மதராஸ், எம். ஜி. ஷஹானி & கோ. (டில்லி) பிரைவேட் லிட்., டில்லி.

*Aiyars AT. 337-TM. A*





1. மதுரை பாரதி புத்தக நிலையத்தாரின் பிரசுரமான 'காமராஜ் வரலாறு' புத்தகத்தைச் சென்னை முதன்மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் வெளியிட்டார். 2. பாரத ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களின் மதுரை விஜயத்தின்போது நகர வவேற்புக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவருக்கு மலர்மாலை அணிவிக்கிறார். 3. கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் பேராசிரியர் கல்கி அவர்களின் பிறந்த தின விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பிரபல வங்க அறிஞர்கள்,





எழுத்தாளர்கள் இவ்விழாவில் கலந்துகொண்டனர். 4. காந்திஜியின் வாழ்க்கை, நூல்கள் பற்றிய கருத்தரங்கு காந்தி ஜயந்தி தினத்தன்று மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி ஹாலில் ராஜாஜி அவர்களின் தலைமையில் நடைபெற்றது. 5. தமிழக முதல் அமைச்சர் திரு பக்தவத்சலம் தில்லிக்குச் சென்றிருந்த போது, தில்லி தமிழ்ச் சங்கம் அவரை வரவேற்றுக் கௌரவித்தது. மந்திரி சி. சுப்பிரமணியம், உதவி மந்திரி திரு ஸி. ஆர். பட்டாபிராமன், பேராசிரியர் கே. சுவாமிநாதன் ஆகியோர் வருகை தந்து சிறப்பித்தார்கள். 6. அகில மலாயா தமிழர் சங்கத்தின் ஐந்தாவது பேராளர் மகாநாடு சிரம்பானில் விமரிசையாக நடைபெற்றது.






உங்கள் இல்லத்தில் பண்டிகையின் மகிழ்ச்சி பொங்க...

# கிளியர்டோன் Kleertone

வீட்டு வேலைக்கான பொருள்கள்

கிளியர்டோன் எலக்டிரிக் கெட்டில்



கிளியர்டோன் ஆகாரத்தைச் சூடாக்கும் ட்ரே



கிளியர்டோன் வாட்டர் பாய்லர்



கிளியர்டோன் பிளாஸ்டிக் வடிதட்டு



கிளியர்டோன் குக்கிங் ரேஞ்ச்



கிளியர்டோன் மடக்கும் நாற்காலி & மேஜை



ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்



உங்கள் அருகிலுள்ள கிளியர்டோன் அல்லது நேஷனல்-எக்கோ வியாபாரியிடம் சென்று நீங்கள் தேர்ந்தெடுக்கத் தகுதிவாய்ந்த பலதிறப்பட்ட 'கிளியர்டோன்' பொருள்களைக் காணுங்கள். பண்டிகை காலத்திற்கேற்ற இந்த ஒப்பற்ற பொருள்களை நீங்கள் சுலபமாகவும் சிக்கனமாகவும் வாங்க முடியும்!

'கிளியர்டோன்' வீட்டுச் சாமான்கள் பண்டிகைகள் காலத்தில் உங்கள் வீட்டுக்குப் புதுப்பொலிவை யூட்டும். உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும் மிகவும் ஏற்றவை என்பதோடு பண்டிகையின் குதூகலம் வருஷம் முழுவதும் நீடித்திருக்கவும் இவை வழிசெய்யும்.

கிளியர்டோன்
இம்பீரியல் டோஸ்டர்



கிளியர்டோ
ஸிங்கிள் ஹாட் ப்ளேட்



கிளியர்டோன்
டேபிள் ஃபான்



கிளியர்டோன் இம்பீரியல்
இஸ்திரிப் பெட்டி



கிளியர்டோன்
ஸர்வீஸ் ட்ராலி



கிளியர்டோன் மடக்கும்
இஸ்திரி மேஜை



IWT-GRA-1633 (A)

பம்பாய்: 8, நியூ க்வீன்ஸ் ரோட், கல்கத்தா: 3, மதன் ஸ்ட்ரீட். மதராஸ்: 1/18, மவுண்ட் ரோட். டில்லி: 27, நேதாஜி மார்க், தரியாகஞ்ச். பெங்களூர்: 36/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோட். ஹைதராபாத்: ராஷ்ட்ரபதி ரோட். பாட்னா: ஃப்ரேஸர் ரோட்.

**GRA**

# விளம்பரக்கலையின் வளர்ச்சி

'எதற்காக நான் விளம்பரங்களைப் பார்க்க வேண்டும்? இன்று முழுதும் ஒரு விளம்பரத்தைக்கூட நான் படிக்கப் போவதில்லை' என்று சங்கற்பம் செய்துகொள்ளுங்கள். நிச்சயமாக அதனை உங்களால் நிறைவேற்றவே முடியாது! விரும்பியோ விரும்பாமலோ தினந்தோறும் விளம்பரங்களை நாம் பார்க்கவும் படிக்கவும் நேர்கிறது. இத்தனைக்கும் நம்மை யாரும் கட்டாயப்படுத்தவில்லை. எனினும் விளம்பரங்களிலிருந்து தப்பிக்கவும் வழியில்லை. காலையில் எழுந்து தினசரியைப் புரட்டினால் முக்கியமான செய்திகள் கண்களுக்குத் தென்படுகிறதோ இல்லையோ, பளிச் பளிச்சென்று விளம்பரங்கள் கண்களைக் கவருகின்றன. செய்திகளைக் கருத்துடன் படிக்க விரும்புவோர் பலர் தங்கள் கவனம் வேறு பக்கம் அவ்வப்போது இழுக்கப்படாமல் இருக்க முதலில் எல்லா விளம்பரங்களையும் ஒரு தடவை பார்த்து, ஒரு பெருமூச்சையும் விட்டுவிட்டுப் பிறகு செய்திகளில் கண்ணோட்டம் செலுத்துவது வழக்கம்! ஆபிஸுக்குக் கிளம்பினால் பஸ்ஸின் பின்புறம் விளம்பரம், சாலை ஓரச் சுவர்களில் விளம்பரங்கள், விளக்குக் கம்பங்களில் விளம்பரங்கள், ஆங்காங்கே பெரிது பெரிதாக நிற்கும் 'பானர்கள்' இத்தியாதி. வீடு திரும்பியதும் ஈஸிசேரில் சாய்ந்து நிம்மதியாக ஒரு வார அல்லது மாதப் பத்திரிகையைப் புரட்டினால் அங்கும் விளம்பரங்கள். அதே நேரத்தில் பக்கத்து வீட்டு ரேடியோவிலிருந்து சிலோன் நிலையம் ஒலிபரப்பும் டப்பா சங்கீதமும் இடையிடையே ''ஞாபகமிருக்கட்டும் காட்பரீஸ் போர்ன்விடா!'' என்பதுபோன்ற விளம்பர வாசகங்களும் காதைத் துளைக்கின்றன. இரவு ஒரு சினிமாவுக்குப் போனால் அங்கும் ஆரம்பத்திலும் இடையிலும் விளம்பரங்கள்தான்!

இதையெல்லாம் பார்த்தும் கேட்டும் ஓரளவுக்கு அலுத்துப் போன குடும்பஸ்தர் கடைக்குப் போய் நிறைய விளம்பரப்படுத்தப்பட்ட பொருளை வாங்கும்போது, விளம்பரங்களைச் சபிக்கிறார். ''சனியன்! இவன் செய்கிற விளம்பரங்களுக்கெல்லாம் சேர்த்து வைத்து விலையில் நீட்டுகிறான். அதையும் நான் கொடுத்து அழ வேண்டியிருக்கிறது!'' என்று முணுமுணுத்துக்கொண்டே பர்ஸைத் திறக்கிறார்.

ஆனால் உண்மை என்ன? அவர் பார்த்த அந்த விளம்பரங்கள் இல்லையேல் அவர் வாங்கும் அந்தப் பொருளின் விலை இப்போது அவர் அதற்குக் கொடுத்ததைவிடக் கண்டிப்பாய் அதிகமாகத்தான் இருக்கும்!

விளம்பரங்கள் செய்வதால் ஒரு பொருளின் விற்பனை அதிகமாகிறது. அதனால் அந்தப் பொருளைத் தயாரிக்கிறவர் மிகக் குறைந்த லாபத்துக்கு அதை விற்றாலும் மொத்த விற்பனை




2-வது மகத்தான வா
10-8-35 சனிக்கிழமை
தினம் 2 காட்சிகள். 6. & 9-30
சனி, ஞாயிறு மாட்டினி 2-45 ம
கெய்ட்டி டாக்
— மிஸ்டர் C. V. V. பந்து
மிஸ் சரோஜினி, மிஸ்டர் செ
நடிக்க
ஞானசௌந்தரி
பக்திதரும் பாடல்கள்!
கண்களைக் கவரும் சீன்கள்!!

உங்கள் குழந்தையின் சுகத்திற்கு








Lovely as new- washed at home with LUX!
LUX









அதிகமாக இருப்பதால் கணிசமான லாபம் கிடைக்கிறது. தயாரிப்பாளரும் திருப்தியடைகிறார். மாறாக விற்பனையாகும் சரக்கின் எண்ணிக்கை குறைந்தால் தயாரிப்பாளர் விலையைக் கூட்டவேண்டி வரும். விளம்பரங்கள் அதிகமான விற்பனைக்கும் அது காரணமாக விலை குறையவும் உதவுகின்றன.

நம் நாட்டில் விளம்பரங்களுக்காகும் செலவைப் பண்டங்களை வாங்குவோருக்குப் பிரித்துக் கொடுத்து விடுவதாய் வைத்துக்கொள்வோம். ஒவ்வொருவருக்கும் ஒன்றிரண்டு நயா பைசாக்கள்கூடக் கிடைக்காது. அதே நேரத்தில் விளம்பர ஏஜென்ஸிகளை மூட நேரிடுமாதலால் ஆயிரக் கணக்கான மக்கள் தங்கள் வேலை வாய்ப்புகளை இழந்து அவதிப்படுவார்கள். ஆனால் விளம்பரங்கள் செய்வதால் மலிவான விலைக்கு மக்களுக்குப் பொருள்களைக் கிடைக்கச் செய்யமுடியும். விளம்பரங்களால் தயாரிப்பாளருக்கும் சரி, பொது மக்களுக்கும் சரி, லாபமே தவிர நஷ்டம் ஏதுமில்லை.

விளம்பரங்கள் செய்யும் இன்னும் ஒரு சிறப்பான பணியும் உண்டு. அது நம் நாட்டின் கலாசார உயர்வுக்கு உதவுவது.

விளம்பரங்கள் இல்லையேல் நம் நாட்டில் வெளிவந்து கொண்டிருக்கும் சிறப்பான தினசரிகள், மாத, வாரப் பத்திரிகைகள் ஆகியவற்றை மக்களுக்கு இப்போது உள்ளதைப் போன்று குறைந்த விலைக்கு விற்க முடியாது. தயாரிப்புச் செலவுகளை விளம்பரங்களால் கிடைக்கும் வருமானம் ஓரளவுக்கு ஈடு கட்டுகிறது. இந்த வருமானம் இல்லையேல் பத்திரிகைகளின் விலை கூடுதலாகும். விற்பனை அதற்கேற்பக் குறையும். பத்திரிகைகளைப் படிக்கும் மக்களின் எண்ணிக்கை குறைந்தால் நாட்டின் கலாசாரம் அபிவிருத்தி அடைவதற்குப் பதிலாகத் தேக்கம் உண்டாகும். கலைகளின் வளர்ச்சி குன்றும். இலக்கிய ஆர்வம் இல்லாது போகும்.





"உங்களுக்குத் தெரியுமோ? பாரீஸ் கோல்ட் — சாஸ்திரீய முறைப்படி தயாரிக்கப் பட்ட இமிடேஷன் கோல்ட் — சுத்தத் தங்கத்தைப் போலவே பாளங்களாகக் கிடைக்கும். ஓர் அவுன்ஸ் விலை ரூபாய் ஆறு. சுத்தத் தங்கத்தின் விலையைவிடக் குறைவாக இருப்பதற்கென்றே அத்துடன் கலக்கப்படுகிறது. தங்கத்தின் மாற்றுக் குறையாது..." என்பதுபோன்ற பயங்கர விளம்பரங்கள் வெளியானதெல்லாம் மூப்பது முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னர்தான். இப்போதெல்லாம் தரமான பத்திரிகைகள் தரமான பொருள்களையே விளம்பரம் செய்கின்றன. ஆகவே சரக்கு நல்லதாயிருக்கும் என்ற தைரியத்துடன் மக்கள் வாங்குகிறார்கள். ஏமாந்து போக இடமில்லை.

1920ல்தான் நம் நாட்டில் முதன் முதலாக இரண்டு விளம்பர ஏஜென்ஸிகள் செயல் படத் தொடங்கின. இங்கு விளம்பரம் ஒரு கலையாக மாறியதும் அப்போதுதான். அந்த நிறுவனங்கள் சிறந்த விளம்பரக் கலைஞர்களையும் ஓவியர்களையும் மேனாட்டிலிருந்து தருவித்தன. ஆனால் அவர்களுடைய ஓவியங்களை 'பிளாக்' செய்யவோ, தரம் குறையாமல் அச்சிடவோ வசதி படைத்த பத்திரிகைகள் இந்தியாவில் அப்போது இல்லை!

ஆகவே இந்த விளம்பர ஏஜென்ஸிகள் தாங்களே 'பிளாக்' செய்யும் உபகரணங்களையும் தருவித்து, பழங்காலத்து அச்சு இயந்திரங்களில் மட்டமான பேப்பரில் அச்சாவதற்கு ஏற்ற வகையில் மட்டமான 'பிளாக்கு'களைச் செய்து தரவேண்டியிருந்தது! இந்த நிலையெல்லாம் அடியோடு மாறி அச்சகக் கலையிலும் விளம்பரக் கலையிலும் இன்று கணிசமான முன்னேற்றம் கண்டிருக்கிறோம். எனினும் கலை என்றுமே வளர்ந்து கொண்டிருப்பதுதான் அல்லவா?

சுதந்திரத்துக்குப் பின் நாட்டின் தொழில் வளம் பெருகப் பெருக, புதிதும் பழையதுமான பொருள்களின் உற்பத்தி அதிகரிக்க அதிகரிக்க, தயாரிப்பாளர்கள் அவற்றின் விற்பனைக்கு மேன்மேலும் விளம்பரங்களின் உதவியைத்தான் நாடப் போகிறார்கள்.

பத்திரிகைகளில் வரும் விளம்பரங்கள் படிப்பவர்களுடைய கவனத்தை ஈர்க்க வேண்டும். அதற்குப் படங்கள் மிகவும் அவசியம். வெறும் எழுத்துக்களால் இடத்தை நிரப்பினால் இந்த அவசர யுகத்தில் யாருக்கும் படிக்கப் பிடிக்காது; பொறுமையும் இருக்காது. நவீனமான புதுப் புதுப் பாணியில் படம் போடுகிற ஓவியரும், அவருக்கு இன்னதைப் படம் போடலாம் என ஆலோசனை கூறுபவரும், இவ்விரண்டையும் இணைத்து விளம்பரத்தைத் தயாரிக்கும் ஆர்ட் டைரக்டரும் ஒற்றுமையாகச் செயலாற்றுகிறார்கள்.

இப்போது வெளிவரும் விளம்பரங்களில் குறைகளும் இல்லாது போகவில்லை. குறிப்பாகப் பிரதேச மொழிகளில் வெளியாகும் விளம்பரங்கள் பலவற்றின் வாசகங்கள் வருந்தத் தக்க நிலையில் உள்ளன. இதற்குக் காரணம் விளம்பரங்கள் முதலில் ஆங்கிலத்தில் தயாரிக்கப்பட்டுப் பின்னர் தமிழில் மொழிபெயர்க்கப்படுவதுதான். இதனால், வாசகங்கள் இயற்கையாக அமையாமல் வாசிப்பவர்களைச் சிரமப்படுத்துகிறது. இவ்வாறின்றி அந்தந்தப் பிரதேசங்களின் சமூக வாழ்க்கை முறைகளுடன் ஒன்றுகிற மாதிரியாகப் புதிய கருத்துக்களை அந்தந்தப் பிரதேச மொழிகளிலேயே சிந்தித்துச் சொல்லக் கூடியவர்களாகத் தேர்ந்தெடுத்து அவர்கள் திறமையைப் பயன்படுத்துதல் நலம்.

உதாரணமாக, சென்னையில் ஏர் இந்தியா காரியாலயம் புதிய இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கு கட்டிடத்துக்கு மாற்றப்பட்டபோது வெளியான விளம்பரத்தில், **'I am moved to say'** என்ற வாசகம் காணப்படுகிறது. இதில் **moved** என்கிற வார்த்தை விலாச மாற்றத்தையும் குறிக்கும், மன நெகிழ்ச்சியையும் தெரிவிக்கும். 'ஏர் இந்தியா மகாராஜாவின் படத்துடன் சேர்த்துப் பார்க்கும்போது விளம்பரம் பிரமாதமாக இருக்கிறதென்றே சொல்லலாம். ஆனால் தமிழில் இதை எப்படிச் சுவை குன்றாது மொழிபெயர்ப்பது? இந்த நடக்காத காரியத்தை ஏர் இந்தியா விளம்பர நிர்வாகிகள் முயன்று பார்த்ததாயும், தெரியவில்லை. 'புத்திசாலிகள்' என்று மகிழ்கிறோம். ஆனால் வேறு ஒரு முகப் பூச்சு விளம்பரத்தில் **All purpose talcum powder** என்பதை "சர்வ காரிய டால்க்" என்று மொழிபெயர்த்து வெளியிட்டிருப்பதைப் பார்க்கும்போது தமக்குக் கோபமும் வருகிறது. இதுபோன்ற கண்ணையும் கருத்தையும் உறுத்தும் வாசகங்கள் நீங்க வேண்டும்.

லண்டனில் பாதாள ரயில் நிலையங்களை அழகுபடுத்த வேண்டும் என்று அங்கு விளம்பரத் தாள்களை ஒட்டுவோரை நகரசபை கேட்டுக்கொண்டதாம். அதன் பின் ஒவ்வொரு பாதாள ரயில் நிலையமும் ஓர் ஓவியக் கண் காட்சி போல விளங்குகிறதாம். அத்தனை அற்புதமான ஓவியங்களுடன் கூடிய விளம்பரத் தாள்களை ரயில் நிலையச் சுவர்களில் விளம்பர ஏஜன்ஸிகள் ஒட்டின!

தமிழ் நாட்டிலும் சிறந்த ஓவியக் கலையினைச் சில சமயங்களில் விளம்பரங்களில் காண்கிறோம். சென்னையில் ஜெமினி ஸ்டுடியோவுக்குப் பக்கத்தில் இரத்தத் திலகம் திரைப் படத்தின் பிரம்மாண்டமான விளம்பரம் நிற்கிறது. சீனப் பகைவனின் கொடூரத்தையும் பாரதச் சிப்பாயின் உறுதியையும் வீரத்தையும் ஒன்றாகப் பிரதிபலிக்கும் பாணியில் அமைந்த ஓவியம் அந்தப் பக்கமாய்ச் செல்வோரை நிமிர்ந்து நடக்கச் செய்கிறது.

ஆனால் வேறு சில திரைப்பட விளம்பரங்கள் வெறும் ஆபாசக் களஞ்சியமாகவும் இருக்கின்றன. நிர்வாணமான நங்கையினைக்கூட அழகுணர்ச்சியுடன் ஓவியமாகத் தீட்ட முடியும். உலகப் புகழும், சரித்திரப் பிரசித்தியும் பெற்ற பல ஓவியங்கள் இந்த ரகத்தைச் சேர்ந்தவைதான். ஆனால் நம் நாட்டில் உடலை மறைத்து நிறைய ஆடைகள் அணிந்தும் ஆபாசமாய்த் தோன்றக் கூடிய முறையில் நடிகைகளைப் படம் போட்டுக் காட்டித் திரைப் படத்தை விளம்பரப்படுத்துவது வருந்தத் தக்கது.

விளம்பரக் கலை நெருப்பைப் போன்றது: ஒளி கொடுக்கும் சாதனமாய் அதனைப் பயன்படுத்தலாம்; வீட்டை எரித்துச் சாம்பலாக்கவும் உபயோகிக்கலாம்.

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்

உன்னதமான காஷ்மீர் பொக்கே வின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக் கொண்டு அதன் ஊற்றுப்பெருக் கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

**டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!**

# கலை வளர்க்கும் கோயில்கள்

# கோவை தொழில் நுணுக்கக்

"ஆஹா! புதுப் புடவை வெகு நன்றாக இருக்கிறதே! எங்கு வாங்கினீர்கள்? என்ன விலை? நானும் இதைப்போல் ஒன்று வாங்கலாமாவென்று பார்க்கிறேன்" என்று எதிர் வீட்டுப் பெண்மணியும் பக்கத்து வீட்டு யுவதியும் வேகமாகக் கேள்விகளை வீசினார்கள். மத்தியஸ்தரின் பிகில் சத்தத்தைக் கேட்டுப் பாயத் தயாராக இருக்கும் ஓட்டப் பந்தய வீரர்கள்போல், அந்தப் புதுப் புடவையை வாங்கியவளின் பதிலுக்காகக் காத்திருந்தார்கள் அவர்கள். புடவை அப்படிக் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது.

புதுப் புடவையுடையாள் தன் கோபத்தைப் புன்னகையால் மறைத்துக் கொண்டே சிந்தனையை ஓடவிட்டாள். "அவர் வாங்கிக் கொண்டு வந்தார். எங்கு வாங்கினாரோ? என்ன விலை கொடுத்தாரோ? கேட்டால் கூடச் சொல்ல மாட்டார்!" என்ற அந்த அம்மாளின் பதில் வார்த்தைகளில் 'ஓஹோ! நீங்களும் இதே மாதிரி ரகத்தை வாங்கி வந்து கட்டி மினுக்கலாம் என்று பார்க்கிறீர்களா? அப்புறம் என்னுடைய தனிப் பெருமை என்ன ஆவது?' என்ற சவால் மறைந்திருந்தது.

பி. ஆர். ராமகிருஷ்ணன்

ஆர். வேங்கடசாமி நாயுடு

'தான் பெற்ற இன்பம் தனக்கே தனி உரிமை' என்ற கொள்கையை உடைய அந்த அம்மாளைப் போல் உலகில் அதிகம் பேர்கள் உண்டு.

ஆனால் 'தான் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற வேண்டும்' என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பவர் வெகு சிலர்தான் உண்டு. அவர்களில் ஒருவர்தான், கோவை நகரில் உள்ள தொழில் நுணுக்கக் கல்லூரியின் (Coimbatore Institute of Technology) ஸ்தாபகர் திரு வி. ரங்கசாமி நாயுடுஅவர்கள்.

'தன் பிள்ளைகள் மாத்திரம் பொறியியல் துறையில் திறமைசாலிகளாக விளங்கினால் போதாது. அவர்களைக் கொண்டு நாட்டில் பல பொறியியல் நிபுணர்களைத் தோற்றுவித்து, ஒவ்வொரு வருங்கால இன்ஜினீயரின் பெற்றோர்களுடனும் தான் பெற்றிருக்கும் மகிழ்ச்சியைப் பகிர்ந்துகொள்ள வேண்டும்' என்ற பரந்த நோக்குடன் தொழில் துறையில் நீண்ட அநுபவமும் வசதியும் பெற்ற திரு ரங்கசாமி நாயுடு அவர்கள், 1955ம் ஆண்டில் தம் குமாரர்களான திரு ஆர். வேங்கடசாமி, திரு பி. ஆர். ராமகிருஷ்ணன் ஆகிய இருவரின் துணை கொண்டு பொறியியல் கல்வி வழங்குவதற்கான ஒரு ஸ்தாபனத்தைத் தோற்றுவித்தார். கல்லூரி 1956ம் ஆண்டில் தன் பணியைத் தொடங்கியது.

திரு வேங்கடசாமி இங்கிலாந்திலுள்ள மான்செஸ்டர் சர்வகலாசாலையில் படித்துப் பொறியியலில் பட்டம் பெற்றவர். அவரிடம் இந்த ஸ்தாபனத்தின் நிர்வாகப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

திரு ராமகிருஷ்ணன் புகழ்பெற்ற அமெரிக்க நாட்டு மாஸச்சூட்டஸ் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னலஜியில் பொறியியல் கல்விப் பட்டம் பெற்றவர். அவர் படித்த அந்தக் கல்லூரியின் பெயருக்கு ஒத்து வரும்படியாகத்தான், இந்தக் கோவை பொறியியல் கல்லூரிக்கும் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. கல்லூரி முதல்வராகப் பணியாற்றும் திரு ராமகிருஷ்ணன், பெயர் வைத்ததோடு தம் மகிழ்ச்சியின் அளவை நிறுத்திக் கொள்ளாமல் தரத்திலும் மாஸச்சூட்டஸ் கல்லூரியை எட்டிப் பிடிக்கும் ஆர்வத்தில் தம் பணியைச் செய்



"ஹருகாய் ஸெப்"




நவீன விஞ்ஞான உபகரணங்களுக்குக் குறைவே இல்லை.

கிறார். பாராளு மன்றத்தின் உறுப்பினராகவும் கோவை மக்கள் அவரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

பொருளாதார நிபுணரான திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியால் திறந்து வைக்கப்பட்ட இந்தப் பொறியியல் கல்லூரியில், ஆரம்ப நாட்களில் நுழைவுக் கட்டத்தில் நூறு மாணவர்களைச் சேர்த்துக் கொள்வதற்கான வசதி தான் இருந்தது. நாளடைவில் அந்த வசதியைக் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டு வந்து இப்போது ஆண்டு ஒன்றுக்கு நூற்றி எண்பது மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள்.

சிவில், மெக்கானிகல், எலக்டிரிக்கல் ஆகிய பொதுவான மூன்று பிரிவுகளுடன்தான் இந்தக் கல்லூரி தொடங்கப்பட்டது. சமீபத்தில் 'கெமிக்கல் இஞ்சினீயரிங்' பிரிவையும் ஆரம்பித்து அதில் முப்பது மாணவர்களைச் சேர்த்துக் கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

ஆசிரியர்களில் முப்பது சத விகிதத்துக்கு மேலாகவே 'வெளிநாட்டுச் சர்வகலாசாலைகளுக்குப் போய்ப் பயிற்சியும் பட்டமும் பெற்றுத் திரும்பியவர்கள். அவர்கள் உலக சமாதானத்துக்கே ஒரு வகையில் வழிகாட்டுபவர்களாக இருக்கிறார்கள் என்று கூடச் சொல்லலாம்! ஏனெனில், வெளிநாட்டுக்குப் பயிற்சி பெறப் போகும் ஆசிரியர்கள் பலர் பாரபட்சமில்லாமல் அமெரிக்காவுக்கும் ரஷியாவுக்கும் அனுப்பப்படுகிறார்கள்!

ஆசிரியர்களின் ஊக்கத்தையும், திறமையையும் கவனித்து வந்து தகுதியானவர்களை வெளிநாட்டுக்கு அனுப்பி வைப்பதில் கல்லூரி முதல்வர் திரு ராமகிருஷ்ணன் வெகுவாக அக்கறை எடுத்துக் கொள்கிறார். அவரால் பொறுக்கி இரண்டு வருடப் படிப்புக்காக அமெரிக்க சர்வகலாசாலை ஒன்றுக்கு அனுப்பப்பட்ட ஆசிரியர், தாம் தங்கியிருந்த இரண்டு வருடங்களில் தம் திறமையையும், ஆர்வத்தையும் காண்பித்த விதம் அந்தச் சர்வகலாசாலை நிர்வாகிகளின் கவனத்தைக் கவர்ந்ததாம். அந்த ஆசிரியரை மேலும் தங்க வைத்து டாக்டர் பட்டத்தையும் சேர்த்துக் கொடுத்துத் திருப்பி அனுப்பி வைத்தார்களாம் அந்த நிர்வாகிகள்!

ஏறத் தாழ லட்சத்துப் பதினேழாயிரம் சதுர அடி விஸ்தீரணமுள்ள மைதானத்தில் பிரும்மாண்டமான கல்லூரிக் கட்டடங்களும் பரிசோதனைச் சாலைகளும், ஹாஸ்டல்களும் பார்ப்போர் வியக்கும் வண்ணம் எழுந்து நிற்கின்றன. பிரதான கட்டடத்தை மேலும் விஸ்தரித்துக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

கல்வி வளர்ச்சியின் தரத்தை எத்தனை கவனமாக முதல்வர் கவனித்துக் கொள்கிறாரோ, அதைவிடப் பன்மடங்கு அதிகக் கவனத்துடன் கல்லூரி கரஸ்பாண்டென்ட் திரு வேங்கடசாமி 'கட்டட வளர்ச்சியைக் கவனித்துக் கொள்கிறார்.

''ஹாஸ்டல்வாசிகளான எங்களுக்குச் சில சந்தர்ப்பங்களில் 'ஹோம் சிக்னெஸ்' அதாவது வீட்டு நினைவு வந்து விடும். ஆனால், நாங்கள் சிற்றுண்டி அருந்தும் போதோ, சாப்பிடும்போதோ இந்த நிறுவனத்தின் ஸ்தாபகரோ அவருடைய மனைவியாரோ, ஒரு பக்கமாக வந்து நின்று ஹாஸ்டல் மாணவர்கள் சந்தோஷமாக இருக்கிறார்களா, சிப்பந்திகள் ஒழுங்காக நடந்து கொள்கிறார்களா என்று

கல்லூரியின் புதிய கட்டிடங்கள் பலவற்றுள் ஒன்று





திரு வி. ரங்கசாமி நாயுடு

கவனிப்பார்கள். அந்தப் பெரியவரையும் மூதாட்டியையும் பார்க்கும்போது எங்களுக்கு, வீட்டில்தான் இருக்கிறோமோ என்ற உணர்ச்சி தோன்றி 'ஹோம் சிக்னெஸை' விரட்டி விடும்'' என்று அந்தக் கல்லூரியில் படித்து வெற்றியுடன் வெளிவந்த மாணவர் ஒருவர் தெரிவித்தார்.

சுமார் அறுநூறு மாணவர்கள் தங்கிப் படிப்பதற்கேற்ற ஹாஸ்டலைச் சுற்றி வரத் திறந்த வெளியாக இருப்பதால், நிம்மதிக்கும் நல்ல காற்றுக்கும் பஞ்சமில்லை. தண்ணீருக்கு அவ்வப்போது ஏற்படும் பஞ்சம்கூட நாளடைவில் சரியாகப் போகலாம்.

''குழாய்த் தண்ணீர் சில சமயங்களில் எங்களுடன் ஒத்துப் போக மறுக்கும். அதற்குப் பதிலாக நாங்கள் தண்ணீர் விநியோகத்துடன் ஒத்துப்போய் விடுவோம். சில நாட்களில் நள்ளிரவில் குழாயில் 'தப தப' வென்று ஜலம் கொட்டும். நாங்கள் உடனே, 'நல்ல சமயமடா! நழுவ விடுவாயோ' என்று தலையில் எண்ணெய் வைத்துக் கொண்டு ஸ்நானத்தை முடித்துக் கொள்வோம். இப்படி நாங்கள் அடிக்கடி தீபாவளி கொண்டாடுவது உண்டு'' என்றார் ஒரு மாணவர்.

ஹாஸ்டல்வாழ் மாணவர்கள் உற்சாக புருஷர்களாகவே விளங்குகிறார்கள். மாணவர்களாகவே, தங்கள் நிதியிலிருந்து மின்விசையில் இயங்கும் கிராமபோனும் இசைத் தட்டுகளும் வாங்கி வைத்து அவ்வப்போது, பார்முலாக்களுக்குச் சமமாக இசையையும் பழகுகிறார்கள்.

'ஊறுகாய் கிளப்' என்பது இந்த ஹாஸ்டல் மாணவர்களிடையே நிலவும் ஒரு ரஞ்சகமான ஸ்தாபனம். ஐந்தாறு மாணவர்கள் சேர்ந்து தங்களை ஒரு குழுவாக அமைத்துக் கொண்டு, ஒவ்வொருவரும் ஊரிலிருந்து ஊறுகாய் வரவழைத்து வைத்துக்கொண்டு குழுவின் மற்ற அங்கத்தினர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்கள். சாப்பாட்டு ஹாலுக்குப் போகும்போதும் வரும்போதும் அவர்கள் பக்தி சிரத்தையுடன் அந்த ஊறுகாய் சீசாக்களுடன் செல்லும் காட்சி தமாஷாகவே இருக்கிறது.

ஞாயிற்றுக்கிழமை பிரிஞ்சி மாணவர்களுக்கு மிகவும் பிடித்த அயிட்டம். நாக்கைத் தீட்டிக் கொண்டிருப்பார்கள். ஒரு ஞாயிற்றுக்கிழமை பிரிஞ்சி தயாரித்துக் கொண்டிருக்கும் போது சமையல்காரருக்குத் தாங்க முடியாத தலைவலி வந்து விட்டது. நீலகிரித் தைலம் நிறைந்த பெரிய சீசா ஒன்றைத் தேடிப் பிடித்துக் கணிசமாக நெற்றியில் பூசிக் கொண்டு பாட்டிலை அப்படியே அலமாரியில் வைத்துவிட்டு வெளியே போனார்.

உதவி சிப்பந்தி வந்தான். பிரிஞ்சிக்குப் பன்னீர் விடுவது வழக்கம். பன்னீர் பாட்டில் என்று நினைத்து யூகாலிப்டஸ் பாட்டிலை எடுத்துத் திறந்து பிரிஞ்சிப் பாத்திரத்தில் ஊற்றிக் கிளறி விட்டுப் போனான்.

''டேய்! என்னடா பிரிஞ்சியில் தலை வலித் தைலம் வாசனை வருகிறது'' என்றான் ஒரு மாணவன். ''பின் வரிசையில் யாராவது தடவிக் கொண்டிருப்பார்கள்'' என்று சொல்லி விட்டுப் பக்கத்து நண்பன் ஒரு வாய் போட்டுக் கொண்டான். அப்புறம்தான் பிரிஞ்சியே நீலகிரித் தைலம் பூசிக் கொண்டிருப்பது தெரிய வந்ததாம்!

கல்லூரி நிர்வாகம் அவ்வப்போது மாணவர்களின் தேவைகளையும், குறைகளையும் தெரிந்து கொண்டு ஆவன செய்கிறது. மத்திய சர்க்கார் ஸ்காலர்ஷிப் உதவியோ, தனியார் ஸ்காலர்ஷிப் உதவியோ, குறிப்பிட்ட மாணவர்களுக்கு உண்டு என்று தெரிந்த பிறகு, அந்தப் பணம் கைக்குக் கிடைக்கக் காலதாமதமாகும் போது கல்லூரிக்கான சம்பளத்தை உடனே கட்டி விட்டுப் பிறகு திருப்பி வாங்கிக் கொள்ளலாம் என்று கல்லூரி நிர்வாகம் நிர்ப்பந்திப்பதில்லையாம். அவர்களுக்கான பணம் வரும் வரை அவகாசம் எடுத்துக்கொள்ளச் சலுகையளிக்கிறது.

முன்பு ஒருகாலத்தில் சாண்ட்விச் என்னும் பிரபு இங்கிலாந்தில் வசித்து வந்தார். அவருக்குச் சீட்டாடுவதில் ஒரே பைத்தியம். சீட்டாட்டத்தை நிறுத்திச் சாப்பிட அவகாசம் எடுத்துக் கொள்ளக்கூட அவருக்குப் பொறுமை கிடையாது. இரண்டு ரொட்டித் துண்டுகளுக்கிடையே கொஞ்சம் வேக விட்ட கறிகாய்களை வைத்து அமுக்கிக் கொண்டு வரச் செய்து சீட்டாடியபடியே உண்பார். அதிலிருந்துதான் அப்படித் தயாராகும் தின்பண்டத்துக்கு அந்தப் பிரபுவின் பெயரான 'சாண்டுவிச்' என்பதே நிலைத்துவிட்டது.

இரண்டு ரொட்டித் துண்டுகளுக்கிடையே அமுக்கப்பட்டிருக்கும் பதார்த்தங்களுடன் கூடிய இந்தச் 'சாண்டுவிச்' போல் படிப்புக்கு இடையே கட்டாயமாக நுழைக்கப்பட்டிருக்கும் நேரடி தொழிற்பயிற்சியுடன் கூடிய 'சாண்டுவிச்' தொழில் நுணுக்கப் படிப்பு இக்கல்லூரியில் அளிக்கப்படுகிறது. எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்தவர்கள் இந்தப் படிப்புக்குச் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். ஆறு வருடத்துக்கான படிப்பை நான்கு வருடத்தில் அடக்குவதால், இதில் சேரும் மாணவர்களுக்கு விடுமுறை கிடையாது. அதே போல் சம்பளமும் கிடையாது. பள்ளியில் யந்திர சம்பந்தமான போதனையும், நகரத் தொழிற்சாலைகளில் உடனடியான பயிற்சியும் மாறி மாறி இந்த நான்கு வருடங்களில் அளிக்கப்படுகின்றன. படித்து டிப்ளமா வாங்கி வெளி வருபவர்கள் தொழிற்சாலை மேற்பார்வையாளர்களாகவும், போர்மேன்களாகவும் போக நிறைய வாய்ப்பு உண்டு.

நூல் ஆலைகள் மிகுந்திருப்பதன் காரணமாக 'இந்தியாவின் மான்செஸ்டர்' என்று அழைக்கப்படும் கோவை நகரத்தில், பொறியியல் துறை நாளுக்கு நாள் பெருகிக்கொண்டு வருகிறது. அந்தத் துறையை நிர்வகிக்கப் பயிற்சி பெற்ற இளைஞர்கள் தேவைப்படுகிறார்கள். இதை உத்தேசித்துத்தான் நாட்டின் மற்றப் பகுதிகளில் கிடைக்கும் பொறியியல் கல்வி வசதியைவிட கோவையில் அதிகமாகவே கிடைக்கிறது. நாட்டின் வளத்தைத் தங்கள் கல்வி ஸ்தாபனங்கள்மூலம் பெருக்கி மகிழத் திரு ரங்கசாமி நாயுடு அவர்களும் அவருடைய குமாரர்களும் காத்திருக்கிறார்கள்.



# வளரும் குடும்பம்



## திட்டமிட்ட எதிர்காலம்

குறைந்த வருமானம், நடுத்தர வருமானம் உள்ளவர்களுக்கு தங்கள் சக்திக்கும் தேவைக்கும் தகுந்தபடி சிறு மாதாந்திர சேமிப்பின் மூலம் குழந்தைகள் படிப்பு, கல்யாணம் மற்றும் வீடு கட்டுதல் போன்ற குறிப்பிட்ட திட்டங்கள் நிறைவேற எங்கள் ரிக்கரிங்டிபாசிட் திட்டம் பெரிதும் உதவுகிறது.

*எங்களது திட்டங்கள் உங்கள் சௌகரியத்துக்கு ஏற்றதாக அமைக்கப்பட்டுள்ளன.*




கட்டாய டெபாஸிட்டு நிதியின் கணக்குகளை ஏற்றுக் கொள்ள மத்திய சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்டுள்ளோம்.

## இந்தியன் பாங்க் லிட்.

பதிவு அலுவலகம்:

**இந்தியன் சேம்பர் பில்டிங், எஸ்பிளனேட், சென்னை-1**

**இந்தியா முழுவதும் கிளைகள் உண்டு.**

செக்ரடரி G. S. சுந்தரம்.

ELEGANT-J8 J

### அத்தியாயம் பத்தொன்பது

## விநயாதித்தனின் கோபம்




வீங்கிச் சுருளும் வெண்ணுரைகளுடன் சீறிச் சுழன்றோடிய சிற்ருற்றின் நீர்ப் பரப்பையே வெறித்துப் பார்த்தவாறு கரை மேட்டின் சரிவில் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மன் தனக்குப் பின்னுல் எமகிங்கரர்கள் போல் வந்து நின்றவர்களையும் அறியாமல் தன் குழப்பச் சிந்தனைகளிலேயே மேலும் மேலும் மூழ்கிப் போய்க் கொண்டிருந்தான்.

" பெருமழையின் வெள்ளப் பெருக்கு இந்தப் புதர்க் குடிலையே இப்படி அழித்துச் சிதைத்துவிட்டதென்ருல், அதில் தங்கியிருந்த ஆந்திர இளவரசியின் கதி என்ன ஆகியிருக்கும்? முன்னெச்சரிக்கையுடன் அவள் வேறெங்கேனும் புறப்பட்டுச் சென்றிருப்பாளா? அல்லது?...."

நெஞ்சிலே நெருப்புச் சுட்டாற் போல் நெளிந்து குமைந்தவன் வேகமாகத் தலையை ஆட்டிக் கொண்டே விருட்டென்று துள்ளி எழுந்தான். அளவுக்கு மீறிய குழப்பத்தால் அவன் உடல் தொய்ந்து கால்கள் தடகடவென்று நடுங்கின. நிமிர்ந்து நிற்கவோ, அங்கிருந்து பெயர்ந்து செல்லவோ முடியாமல் தவிப்படைந்து நின்ற அவன் தன்னை மீறிய தளர்ச்சியினுல் முன் போலவே மணற் சரிவில் உட்கார்ந்து முழங்காலில் முட்டிக் கையை ஊன்றி முகத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

சந்தனப் பலகையில் முத்துக்களைப் பதிப்பினுற்போல் வியர்வைத் துளிகள் அரும்பியிருந்த அவனது அகன்ற முதுகுக்கு நேர் பின்னுக — ஆற்றங்கரை மேட்டின் மறுபக்கச் சரிவுக்கு அப்பால், சுமார் இரண்டு பாடகம் தொலைவில் பச்சைத் தேர்போல் வளர்ந்திருந்த எட்டி மரமொன்றின் அடியில் மறைந்து நின்றுகொண்டிருந்த சளுக்கிய விநயாதித்தன், கொலை வெறியால் கொவ்வைப் பழமாகச் சிவந்த தன் பெரிய விழிகளை உருட்டிப் புரட்டி, பக்கத்தில் நின்ற வில்வேலியை விறைத்துப்




பார்த்து. ''தயங்க வேண்டாம், தளபதியாரே! மான்களை வேட்டையாட வந்த நமக்கு வரிப் புலியே கிடைத்துவிட்டது. இந்த அரிய சந்தர்ப்பத்துக்காக நாம் எத்தனை நாட்கள் அலைந்து திரிந்தோம்! இது போன்ற வாய்ப்பு இனி கிடைக்கவே கிடைக்காது! விநாடிகளை வீணாக்காமல் அவனை வெட்டி வீழ்த்துங்கள்! அவனுடைய செங்குருதியிலே நீந்திப் புரள என் உடலும் உள்ளமும் துடிதுடிக்கின்றன! ஊம், சீக்கிரம் ஆகட்டும்!'' என்று அடக்கிக் குறுக்கிய இரகசியக் குரலில் படபடத்தான்.

ஆனால் வில்வேலியோ, காணக் கிடைக்காத தெய்வமாக் காட்சியொன்றைக் கண்டுவிட்டாற் போன்ற மெய்ச் சிலிர்ப்புடன், கண்களில் மகிழ்ச்சியொளி வீச, முகம் மலர்ந்து விரிய, ஆடாமல் அசையாமல் அப்படியே சிலைபோல் நின்று தொலைவிலே அமர்ந்திருந்த பரமேசுவரவர்மனையே பார்த்துக்கொண்டிருந்தார்.

விநயாதித்தன் அவரை வெடிப்பும் துடிப்புமாக ஏறிட்டு நோக்கினான். அவன் முகம் விகாரமடைந்து கறுத்தது. விழிகளிலே கோபக் கனல் கொப்புளித்தது. ''என்ன ஐயா! பேசாமல் நிற்கிறீர்களே! யோசனைக்கே இனி இடமில்லை; உருவி எடுங்கள் குறுவாளை! நம் ஜன்மப் பகைவனின் முதுகைக் குறி வைத்து வீசியெறிந்து, என் நெஞ்சத்தின் வஞ்சப் பசியுணர்ச்சிக்குச் சாந்தி அளியுங்கள்! நேரம் தேய்கிறது; நடத்துங்கள், ஐயா!'' என்று தணிந்த குரலில் சிடுசிடுத்துக் கூறிக் கொண்டே அவருடைய புஜங்களைப் பற்றிக் குலுக்கினான் அவன்.

அன்றொரு நாள் — நெல்வேலிப் போர் முனைக்குப் புறப்படுமுன் — பரமேசுவரவர்மனின் உதார குணத்தையும் கருணை மனத்தையும் எண்ணிக் கசிந்து உருகி உள்ளொளி பெற்றவராய்ப் பல்லவபுரம் அரண்மனை முன்றிலிலே காவியாடையும் கையுமாக ஒரு துறவிபோல் நின்று கொண்டிருந்தாரே, அதே போன்ற நிலையில் இப்போது தோற்றமளித்த வில்வேலி விரக்திப் புன்முறுவலுடன் திரும்பி, ''இளவரசே! தாங்கள் விரும்பினால் அந்தக் காரியத்தைத் தங்கள் கையாலேயே செய்து கொள்ளுங்கள். தயவுசெய்து என் உதவியை எதிர்பார்க்காதீர்கள்'' என்றார் அமைதியாக.

நிலை மிதித்தவன் போல் துடித்துப் பதறி நிமிர்ந்த விநயாதித்தன், ''என்ன சொன்னீர்கள், ஐயா? நானே செய்வதா! நீங்கள் ஏன் செய்யக் கூடாது? எதற்காக இப்படிப் பயந்து பின்னடைகிறீர்கள்?'' என்று குரலை அடக்கிக்கொண்டு வினவினான்.

''மன்னியுங்கள், இளவரசே! அதற்கு மேல் என்னை எதுவும் கேட்காதீர்கள்!'' என்று அதே அமைதியுடன் பதிலிறுத்தார் வில்வேலி.

பரபரப்பு அடைந்த விநயாதித்தன் அவருடைய முதுகுப் பக்கம் போய் உராய்ந்தபடி நின்றுகொண்டு, ''நான் சொல்வதைக் கேளுங்கள், ஐயா! எனக்கு அத்தனை குறிப்பாகக் கத்தியை வீசி எறியத் தெரியாது. குறி தப்பினால் நமக்கே உயிராபத்தாகி விடும். தூங்கும் சிங்கத்தைத் தட்டியெழுப்பிய கதையாகி விடும். முன்னொரு முறை இப்படித்தான் சோழ இளவரசியைக் குறி பார்த்து நான் எறிந்த கத்தி, அவளுடைய பணிப் பெண்ணான அநந்தமதி என்பவளின் உயிரைக் குடித்து, என் முயற்சியைத் தோல்வியுறச் செய்துவிட்டது. அதனால்தான் உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். மறுக்காதீர்கள். இந்த நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள்'' என்று அடித் தொண்டையில் கரகரத்தான்.

வில்வேலி அமைதியாகத் தலையசைத்தார். 'தம்மால் முடியாது' என்பதுபோல் உறுதியாகத் தலையாட்டினார் அவர்.

விநயாதித்தனின் மனம் எரிமலையாகக் குமுறியது. ''முடியாதெனச் சொல்லும் நீங்கள் என்னோடு ஏன் புறப்பட்டு வந்தீர்களாம்?'' என்று கடுகடுப்புடன் கேட்டான்.

''பல்லவ மன்னனைக் கொல்வதற்காக நான் இங்கு வரவில்லை, இளவரசே!''

''அப்படியானால் உத்தமசீலியோ, இளங்கோப்பிச்சியோ இருந்திருந்தால் அவர்களைக் கொன்றிருப்பீர்களோ?''

''சென்ற சில விநாடிகளுக்கு முன் வரையில் மிருகமாயிருந்த நான் அந்தப் பாதகச் செயலைச் செய்தாலும் செய்திருப்பேன்!''

''இப்போது மட்டும் உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டதாம்?''

''நான் மனிதனாக மாறியிருக்கிறேன்! அதோ, அங்கே சத்தியத்தின் வடிவமாய், அன்பின் மறு உருவமாய் வீற்றிருக்கும் அந்த மகா புருஷரின் தரிசனமே என்னை அப்படி மாற்றி விட்டது!'' என்று உணர்ச்சிப் பெருக்குடன் முணுமுணுத்துக் கொண்டே தம் குதிகாலை உயர்த்தி நிமிர்ந்து, தொலைவில் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மனைப் பக்தி பூர்வமான ஆவலுடன் எட்டிப் பார்த்த வில்வேலி, அடைத்த குரலில் மேலும் சொன்னார்: ''முன்னொரு முறை இந்த மகாபுருஷனை மனத்தால் எண்ணிப் பார்த்தபோதே இது போன்ற மாற்றத்தை என்னுள் நான் கண்டிருக்கிறேன். அதன் உத்வேகத்தால் எனது இழிந்த பதவிகளையும், படுகொலைப் போர்த் தொழிலையும் விட்டொழித்துத் துறவியாகவும் துடித்திருக்கிறேன். ஆனால் அந்த ஒளி பொருந்திய புது மனத்தைப் பல காலம் இருட்டில் கிடந்தே வளர்ந்து உரம் பெற்ற மிருக மனம் எளிதில் வென்று அடக்கி விட்டது. அதனாலேயே நான் நெல்வேலிப் போர்முனைக்குப் புறப்பட்டுப் போனேன். ஆயினும் அந்தப் புதிய மனம் என்னுள் அடிக்கடி தலைதூக்கி என்னை அலைக்கழித்துக் கொண்டேதான் இருந்தது. போர்க்களத்தில் என் வீரார்ந்த திறனை வெளிப்படுத்த விடாமல் அது இடறி விட்டுக் கொண்டே யிருந்தது. நெல்வேலியிலும், பெருவளநல்லூரிலும் நான் முழு மூச்சுடன் போரிடாமல் கோழைபோல் பின்னடைந்ததற்கும், என்னுடைய தலைமையில் தோல்வியே கண்டறியாத சளுக்கியப் படைகள் தோல்விக்குமேல் தோல்வியாகச் சுமந்து கொண்டு ஓட நேரிட்டதற்கும் இதுதான் காரணம். இதைப் பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. இப்போது அதற்காகப் பெருமையே கொள்கிறேன். ஏனென்றால், நான் மனிதனாக மாறியிருக்கிறேன். அன்பையும், சத்தியத்தையும், தர்மத்தையும் உணர்ந்த ஓர் எளிய மனிதனாகி விட்டிருக்கிறேன்.''

அக்கினிக் குழம்பில் புரட்டியெடுக்கப்பட்டவன்போல் துடிதுடித்து நின்ற விநயாதித்தன் குரூரமாக அவரை விழித்துப் பார்த்துப் பற்களை நறநறவெனக் கடித்தான். ''பச்சைத் துரோகம்! நன்றி கொன்ற நயவஞ்சகம்!'' என்று குமுறிப் பொருமிய அவன், அவரது தோளை வெடுக்கெனப் பற்றி ஒரு குலுக்குக் குலுக்கி விட்டு அடக்கியொடுக்கிய குரலில் உறுமினான்: ''ஹூம்! உள்ளொளி பெற்றாராம்; மனிதனாக மாறிவிட்டாராம்! எல்லாம் வெறும் பொய்! கட்டுக் கதை! இத்தனை காலமாக எங்களுக்குச் செய்து வந்த துரோகங்களை மறைப்பதற்காகப் போடப்படும் ஏமாற்று வேஷம்!''

எவ்விதச் சலனமுமின்றி அமைதியாக நின்ற வில்வேலி புன்முறுவல் பூத்துக் கொண்டார். வெற்றியாவேசப் பதற்றத்துடன் மேலும் கரகரத்தான் விநயாதித்தன்: ''ஆதி நாள் முதலே சளுக்கிய சாம்ராஜ்யத்தின் அழிவுக்கும், மாவீர மகா சக்கரவர்த்தி விக்கிரமாதித்தரின் வீழ்ச்சிக்கும் அடிகோலி வந்த உட்பகைவர் இருவரில் நீங்களும் ஒருவர் என்பதை நான் நன்கு அறிவேன். இன்னொருவன் ஆந்திர மன்னன் விஷ்ணுவர்த்தனன். அவன் தன் துரோகச்

# ஆக்ஸிஜனால் சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பு!



நீங்கள் போலிப் பற்களை அணிந்திருந்தால் 'ஸ்டெரடென்ட்' உபயோகித்து ஆக்ஸிஜனால் சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பைப் பெறுங்கள். அது, போலிப் பற்களை நன்றாகத் துலக்குகின்றது. 'ஸ்டெரடென்ட்' தண்ணீரில் கரைத்ததும் ஆக்ஸிஜன் கலந்த திராவகமாகி, சீக்கிரத்திலே போலிப் பற்களின் மிகச்சிறிய இடைவெளிகளுக்குள் புகுந்து உணவுப் பருக்கைகளை அப்புறப் படுத்துகிறது. பற்களில் படிந்துள்ள கறைகளையும் அழுக்குகளையும் கழுவி விடுவதுடன், தொத்து நோய் வராமலும் துர்நாற்றம் அடிக்காமலும் இருக்கச் செய்கின்றது. இதன் விளைவு, 'ஆக்ஸிஜனால்' சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பு-ஒளி மிகுந்த போலிப் பற்கள்!




பழைய வல்கனைட் போலிப் பற்களுக்கும் புதியதான ப்ளாஸ்டிக் வகைகளுக்கும் 'ஸ்டெரடென்ட்' சமமாகவே பயன்படுகிறது.



## ஸ்டெரடென்ட் ஆக்ஸிஜன் முறை போலிப்பல் துலக்கி

செயலைப் பகிரங்கமாகவே நடத்தி முடித்துக் கொண்டான். ஆனால் நீங்களோ, அகந்தையான பேச்சாலும், ஆணவத் திமிரான உத்தரவுகளாலும், அதிகாரப் போதையால் தீர ஆலோசியாமல் செய்த முடிவுகளாலும், முட்டாள்தனமான செயல்களாலுமே எங்கள் அழிவுக்கு வழி வகுத்து வந்திருக்கிறீர்கள். அதை மூடி மறைக்கவே இந்தப் பகல் வேஷம் போட்டு நடிக்கிறீர்கள்.''

வில்வேலியின் முகத்தில் ஓர் அலட்சியப் புன்னகை நெளிந்தது. விநயாதித்தனோ பொங்கிப் புளித்த சினத்துடன் மேலும் படபடத்தான்:

''சிரிக்கிறீர்களா? சிரித்துச் சிரித்தே எங்களைச் சீரழித்த உங்களின் மூடச் செயல்களை ஒவ்வொன்றாகச் சொல்கிறேன், கேளுங்கள், ஐயா! பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த கோவிந்த வர்மன் தப்பியோடும்படி விட்டது மல்லாமல் அவனை நேருக்கு நேர் பார்க்க நேர்ந்த போதும் அவனுடைய பொய் வேஷத்தைக் கண்டு ஏமாந்து அவனைச் சிறைப் பிடிக்காமல் விட்டு விட்டீர்கள். அந்த மாபெரும் தவறுதான் நமது அழிவுக்கெல்லாம் அஸ்திவாரமாக அமைந்தது. பிறகு பல்லவ நாட்டில் சளுக்கியர் ஆட்சிக்கு எதிராகச் சைவர்கள் கொதித்தெழும்படியான ஒரு விவேகமற்ற காரியம் செய்தீர்கள்; அதாவது, ஆந்திர இளவரசி உத்தமசீலியைச் சமண சமயப் பிரசாரம் செய்வதற்காகப் பல்லவ நாட்டுக்கு வரவழைக்கும்படி விக்கிரமாதித்தருக்குத் துர்ப்புத்தி சொல்லிக் கொடுத்தீர்கள். அவள் வந்தபின் அவளுடைய நடத்தைகளில் போதிய கவனம் செலுத்தாமல், எதிரிகளின் கையாளான சேதியக் கலைஞனின் இல்லத்துக்கு அந்த நாசகாரியை அழைத்துப் போய் அங்கு தலைமறைவாகத் தங்கியிருந்த பல்லவ மன்னனைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தீர்கள். அதன் பிறகு அவ்விருவருக்குமிடையே பிறந்த காதலை உறுதிப்படுத்தும் விதமாக அவனைப் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளிக்கு வரும்படி செய்து, அங்கே அவன் தன்னையே ஓவியமாக வரைந்து கொடுத்ததையும் கவனியாமல் அவனைத் தப்பிச் செல்ல விட்டு விட்டீர்கள்....''

அமைதி பூத்து வெளுத்திருந்த வில்வேலியின் முகத்தில் சிறிதளவு கருமை படர்ந்தது. இதைக் கவனித்துக் கொண்ட விநயாதித்தன் அவருடைய தோளுக்கு மேல் தலையை நீட்டிச் செவியருகில் வாயை வைத்துக் கொண்டு குரலை வெளிப்படுத்தாமல் வெறும் காற்றுக் குதப்பலிலேயே சொற்களைக் கலக்கி விசினான்: ''உங்களுடைய அறிவற்ற செயல்களால் எங்களுக்கு ஏற்பட்ட பாதகங்கள் இன்னும் பல உண்டு. ஆந்திர இளவரசிக்கும், என் தந்தையார் விக்கிரமாதித்தருக்கும் வன்மப் பகை ஏற்படும்படியாக அவளுடைய சிவிகை தூக்கி நாகோதரனை நீங்கள் சித்திர வதை செய்ததாலும், அவளுக்குத் தெரியும்படியாக நம் திட்டங்களைப் பேசியதாலுமேதான் ஆந்திர மன்னன் நமக்கு எதிராக மாறும்படி ஆயிற்று. எங்கள் சாம்ராஜ்யச் சரிவுக்கு இதுவே அடிப்படைக் காரணம் என்று நான் சொல்வேன். இதுவுமல்லாமல் இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவரை நீங்கள் மிரட்டி உருட்டி விக்கிரமாதித்தரின் மேல் அவருக்கு வெறுப்பு ஏற்படும்படி செய்து விட்டீர்கள். அதை மேலும் வளர்ப்பதே போல் சிரவணபெள் குளத்து அகளங்க அடிகளை வீணாக வரப் பண்ணி, காஞ்சிக் கோட்டையைக் காவல் காத்துக் கொண்டிருந்த என்மூலம் அவரை வழிமடக்கிக் கொல்ல முயன்றீர்கள். இதனால் நமக்கு எதிராகப் பல்லவ நாட்டுச் சமணர்கள் பொங்கியெழும்படியான ஒரு சூழ்நிலை ஏற்பட்டது. இத்துடன், எதிரிகளுக்கு அநுசரணையாகக் காஞ்சிக் கோட்டையைப் பாதுகாப்பின்றியும் விட்டு விட்டீர்கள்.....''

வில்வேலியின் முகம் பாறையாக இறுகிக் கறுத்தது. தம் இடைக் கச்சையில் செருகி வைத்திருந்த குறுவாளின் கைப்பிடியை மெல்லத் தொட்டுத் தடவினார் அவர்.

## அத்தியாயம் இருபது

# வில்வேலியின் முடிவு

கோபத்தால் கொதிப்படைந்து நின்ற விநயாதித்தன் அவரைக் கொத்திக் குதறி விடத் துடிப்பவன்போல் முறைத்துப் பார்த்துக் கொண்டே தன் குற்றச்சாட்டுகளைத் தொடர்ந்து சொன்னான்: ''இன்னும் கேளுங்கள், தளபதியாரே! உங்களை ஒரு பெரிய இராஜதந்திர மேதாவி என்று எங்களுக்குக் காட்டிக் கொள்வதற்காக நீங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; பலப்

பல தவறுகள் செய்திருக்கிறீர்கள். அவற்றில் முழு முட்டாள்தனமான தவறு என்னவென்றால், பழையாறைச் சோழனோடு தொடர்பு கொண்டதும், அவனுடைய சதித் தூண்டுதலை நம்பிப் பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்ததுமே ஆகும். இத்துடன் இன்னோர் இமயத் தவற்றையும் நீங்கள் செய்தீர்கள்; அதாவது, சளுக்கியச் சக்கரவர்த்தியின் அனுமதியின்றி அவரது தம்பி மகளான ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பல்லவனின் பட்டத்து யானை மீது ஏற்றி அனுப்பிக் கொல்ல முயன்றதுதான். இம் முப்பெரும் தவறுகளே, இன்று சளுக்கிய சாம்ராஜ்யத்தைச் சரித்துச் சீரழித்து விட்டன. இவ்வளவுக்கும் காரணமான நீங்களோ, இவற்றை யெல்லாம் மறைப்பதற்காக இப்போது, உள்ளொளி பெற்று விட்டேன் என்றும், மனிதனாக மாறி விட்டேன் என்றும் கதை அளக்கிறீர்கள். இப்படி யெல்லாம் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை? இவ்வாறெல்லாம் வேஷம் போட நீங்கள் நாணப்பட வில்லை? அவமானம்! அவமானம்!''

வில்வேலி தம் மலைபோன்ற உடலைப் பயங்கரமாக ஓர் உலுக்கு உலுக்கிக் கொண்டு வலக் கையால் தமது குறுவாளை இறுகப் பற்றியவாறு முன்னோக்கி ஓரடி எடுத்து வைத்தார்.

''வீரப் பரம்பரையில் உதித்த மாவீரரே! உங்கள் உடலில் உண்மையாகவே சளுக்கிய இரத்தம் ஓடுமானால், நீங்கள் இதுவரை செய்த தவறுகளுக்கெல்லாம் பிராயச்சித்தமாக, இதோ இந்த நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வதுதான் ஒரே வழி! இது ஒன்றே நீங்கள் இனி எங்களுக்குச் செய்யக்கூடிய பேருபகாரமாகும்!'' என்று ஆத்திரச் செருமலுடன் கடுகடுத்துக் கொண்டே பின்னால் நகர்ந்தான் விநயாதித்தன்.

வில்வேலியின் உடல் அதிர்ந்தது. அவர் தம் குறுவாளை வெடுக்கெனப் பிடுங்கி உறுதியாகப் பற்றிக்கொண்டு மேலும் இரண்டடி முன்னால் சென்றார்.

சிற்றாற்றின் கரை மேட்டில் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மனோ இன்னமும் தன் சிந்தனை மோனத்திலேயே ஆழ்ந்து கிடந்தான்.

''வீரப் பெருங்குடியில் பிறந்த வில்வேலியாரே! சளுக்கிய மண்ணைத் தாயாகவும், அதன் கொற்றத்தைத் தந்தையாகவும் நீங்கள் நேசித்து வழிபட்டது உண்மையானால், நமது ஜன்மப் பகைவனை வெட்டி வீழ்த்தி, நலிந்து போன சளுக்கிய வராகக் கொடிக்குப் புத்துயிர் அளியுங்கள்!'' என்று குமுறிக் கமறிக் கொண்டே மேலும் பின்னால் நகர்ந்தான் விநயாதித்தன்.

வில்வேலியின் முகத்தில் சவக் களை படர்ந்தது. கண்களில் அருவியென நீர் வழிந்தது. உடலோ நிலைகொள்ளாமல் நடுங்கிப் பதறியது. ஓங்கிப் பற்றிய குறுவாளுடன், பரமேசுவரவர்மனையே இமைக்காமல் பார்த்தவாறு அடி மேல் அடி வைத்து நடந்தார் அவர்.

அடுத்த கணம், 'சதக்' என்ற ஒலி! 'ஹா' என்னும் பயங்கர அலறல்!

சிந்தனையில் ஆழ்ந்தவனாய்ச் சிலை போல் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மன் இவ்வொலி கேட்டுப் பேரதிர்ச்சி அடைந்தவனாய்த் துள்ளி யெழுந்து திரும்பினான். அதே சமயம், அந்தச் சிற்றாற்றின் கரை மேட்டிலிருந்து சளுக்கியத் தளபதி வில்வேலியின் அதிகாயமான உடல் கடகடவென உருண்டு வந்து அவனது காலடியில் வீழ்ந்தது! தமது குறுவாளைத் தாமே தம் விலாப்புறத்தில் பாய்ச்சிக்கொண்ட நிலையிலே, குருதி கொப்புளிக்கத் துடிதுடித்தார் அவர்!

இந்தக் காட்சியைக் கண்டு பெரும் பீதிக்குள்ளான விநயாதித்தனும், அவனுக்குத் துணையாக நின்ற சளுக்கிய வீரனும் அங்கிருந்து விழுந்தடித்துக் கொண்டு தலை தெறிக்க ஓடலாயினர். (தொடரும்)

## அடுத்த இதழில்

கோமதி சுவாமிநாதன் எழுதும்
ஹாஸ்ய நாடகம்
**பஞ்சாமிர்தம் பம்பாய் போகிறார்!**

நாடாண்ட நங்கையர்:
**சீனத்தரசி யெஹோனலா**

கலை வளர்க்கும் கோயில்கள்:
**போலீஸ் பயிற்சிக் கல்லூரி**

நவம்பர் மாதத்திய நெடுங்கதை
**தூங்கும் நினைவுகள்**
பொன்முடி எழுதுகிறார்

## மாதர் உலகம்

# சந்திரிப்பருப்பு பர்பி

''இந்தப் புருஷர்களுக்கு ஒன்றுமே தெரிகிறதில்லை'' என்று சில ஸ்திரீகள் பச்சையாகவே சொல்வதுண்டு. அப்படிக் கூறும்போது 'ஒன்று' என்பதை அழுத்தத் திருத்தமாகக் கூறி 'மே'க்குக் கார்வை கொடுப்பார்கள்.

சிற்சில விஷயங்களில் புருஷர்களுக்கு ஒன்றுமே தெரிவதில்லை தான். முக்கியமாக ஸ்திரீகளின் பரிபாஷையைப் பற்றி அதிகம் அறிய மாட்டார்கள்.

மாலினியும் அவள் புருஷன் நாராயணனும் எங்கேயோ வெளியில் போய்விட்டு வருகிறார்கள். வரும் வழியில் அவர்களுக்குப் பழக்கமான சந்திராவின் வீடு இருக்கிறது. வாசற்பக்கம் நின்றுகொண்டிருந்த சந்திரா அவர்கள் வருவதைக் கவனிக்கிறாள். வீட்டுக்குள்ளே போய்விட முயற்சி செய்வதற்குள் மாலினியின் கண்ணில் பட்டு விடுகிறாள்.

வேறு வழியில்லாமல் அவர்கள் வீட்டு வாசற் பக்கமாக வந்ததும், ''வாருங்களேன்!'' என்று வரவேற்கிறாள்.

'ரொம்ப அவசரமாகப் போகிறாய் போலிருக்கிறது. காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகக் கூடாதோ?'' என்கிறாள்.

மாலினி இதற்குப் பதில் சொல்வதற்குள் நாராயணன் ''அதற்கென்ன? சாப்பிட்டு விட்டுப் போகிறோம். எங்களுக்கு அப்படி ஒன்றும் அவசரமாகப் போக வேண்டிய காரியமில்லை'' என்கிறார்.

கணவனும், மனைவியும் வீட்டிற்குள் செல்கிறார்கள். பழைய டிகாக்ஷனும், தண்ணீர்ப் பாலும் கலந்த வெல்ல வாசனை வீசிக் கொண்டிருக்கும் காப்பி மாதிரித் தோன்றும் ஆறிப்போன ஒரு பானத்தை வாய் வழியாக வயிற்றுக்குள் செலுத்தி விட்டு வருகிறார்கள். அவர்கள் அதை மனமாரக் குடிக்கவில்லை; குடிக்க முடியாது.

நாராயணன் முதலில் தலையிட்டுப் பேசா திருந்திருந்தால், மாலினி அநேகமாகக்காப்பி சாப்பிட்டு விட்டுப் போக ஒப்புக் கொண்டிருக்க மாட்டாள். ''எங்களுக்கு ஏறப் பட்ட வேலையிருக்கிறது. இன்னொரு நாள் சாவகாசமாக வருகிறோம்'' என்று கூறியிருப்பாள்.

ஏனென்றால் அவளுக்குச் சந்திரா ஏதோ பேருக்கு அழைத்து வைத்தாள், மரியாதைக்காகக் காப்பி சாப்பிடச் சொன்னாள் என்பது தெரியும். ''வாருங்கள், காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்!'' என்று பாத்தியதையுடனும் சற்று அதிகாரத்துடனும் சந்திரா கூப்பிடவில்லை என்பதை அவள் அறிவாள். வேறு வார்த்தைகளைக் கூறி, அழைத்த போதிலும் அவற்றில் உள்ளன்புத் தொனியில்லை என்பது அவள் காதுகளுக்குத் தெரியும்.

கனகமும், அவள் கணவன் வேணுவும் ஒரு கல்யாண வீட்டுக்குச் செல்கிறார்கள். போனதும் காப்பியோ வேறு ஏதோ பானமோ அருந்துகிறார்கள். சாப்பிட இலை போட இன்னும் அரை மணி நேரம் ஆகலாம். வீட்டுக்காரர் வேணுவைப் பலமாக உபசரித்துச் சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டுமென்கிறார். வெளுத்த தெல்லாம் பால் என்று நம்பும் அந்த ஆண்பிள்ளை அப்பாவி நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து கொள்கிறார். சாப்பிடப் போகும்போது மேலே போட்டிருக்கும் கோட்டைக் கழற்றி வைத்துவிடலாமா அல்லது அப்படியே சாப்பிடலாமா என்பதைப் பற்றி யோசனை செய்து கொண்டிருக்கிறார்.

இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் கனகம் வருகிறாள்.

''புறப்படலாம்!'' என்கிறாள்.

''ஏன், சாப்பிட்டுவிட்டுப். போகலாமே!'' என்று வேணு கூறி மேலும் நன்றாகச் சாய்ந்து கொள்கிறார்.

''கிளம்புங்கள்!''

''சாப்பிடாமல் போனால் கோபித்துக்கொள்வார்...''

''வாருங்கள் போகலாம்!'' என்று கனகம் அவர் கையைப் பிடித்து இழுக்கிறாள். நாலு பேர் பார்த்துக் கொண்டிருப்பார்களே என்பதைப் பற்றி அவள் கவலைப்படுவதில்லை.

கனகத்துக்கும், கல்யாண வீட்டு அம்மாளுக்கும் சண்டை, கிண்டை ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை. அந்த அம்மாள் சாப்பிடு வதற்குக் கூட்டம் நிறைய இருப்பதைப் பார்த்து முணுமுணுத் துக் கொண்டிருந்தாள்.

''நான் போய்விட்டு வருகிறேன்'' என்று கனகம் அவளிடம் கூறினாள்.

''ஏன் சாப்பிடவில்லையா?'' என்றாள் அம்மாள்.

''கொஞ்சம் காரியமிருக்கிறது.''

''காப்பி சாப்பிட்டாயோ இல்லையோ?''

''சாப்பிட்டேன்.''

''வெற்றிலை பாக்குப் பை வாங்கிக்கொண்டு போ! மறந்து விடாதே!'' என்றாள் அந்த அம்மாள். 'போகிறது கொஞ்சம் முன்னாலேயே போய்விடு. நீ சாப்பிடவில்லை என்று நான் கவலைப்பட மாட்டேன்' என்று அதற்கு அர்த்தம்.

கௌசல்யா தனக்குப் பழக்கமான பார்வதியை டெலிபோனில் கூப்பிடுகிறாள்.

''பார்வதியா? நான் அந்தப் பக்கம் வரப்போகிறேன். அப்படியே அங்கேயும் வரலாமென்றிருக்கிறேன்'' என்கிறாள்.

பார்வதி உடனே பதிலளிக்கவில்லை. பத்து பதினைந்து விநாடி பேசாதிருந்துவிட்டுப் பிறகு ''வாயேன்!'' என்கிறாள்.

கௌசல்யா கட்டாயம் அவள் வீட்டுக்குப் போக மாட்டாள். முதலில் தாமதித்துப் பதில் சொன்னது, அதுவும் வேண்டு மென்றே மெலிந்த குரலில், சிறிதும் உணர்ச்சி தோன்றாதபடி பாடம் ஒப்புவிப்பது போல் கூறியது எல்லாம் சேர்ந்து 'வாயேன்' என்பதற்கு 'வந்து தொலையாதே' என்ற இரகசிய அர்த்தத்தைக் கொடுத்துவிட்டன. சில சமயம் வார்த்தைகளில் தெரிவிக்க முடியாததைக் கண்ணடித்தும், கண் புருவங்களை உயர்த்தியும் தாழ்த்தியும், உதடுகளின் ஓரங்களை ஒரு விதமாக அசைத்தும் தெரிவிப்ப (ன்?). மூக்கு ஒன்றினால் மட்டும்தான் சைகைகள் காட்ட முடியாது.

உபயோகிக்கும் வார்த்தைகள், பேசும் தொனி, சைகைகள் இவற்றிலிருந்தே ஒரு ஸ்திரீயின் மனப்போக்கைத் தெரிந்து கொள்ளக் கூடிய அந்தத் தனித் திறமை ஸ்திரீகளுக்கு மட்டும் தான் உண்டு. புருஷர்கள் தலைகீழாக நின்றாலும் அவர்களுக்கு அந்தத் திறமை வராது.

ஃ ஃ ஃ

ஒரு நாள் பங்கஜம் வந்து பேசிக்கொண்டிருந்தாள். அப்போது அவள் இடது கையைக் கெட்டியாக மூடிக் கொண்டிருந்தாள். வேறு யார் வீட்டிலோ வெற்றிலை பாக்குக் கொடுத்ததை வைத்துக் கொண்டிருக்கிறாளாக்கும் என்று நினைத்தேன்.

அவள் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுக் கிளம்பும் போது மூடிக்கொண்டிருந்த கையைத் திறந்து அதிலிருந்த ஒன்றை எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள்; எனக்கும் ஒன்று எடுத்துக் கொடுத்தாள்.








சிறுமி: அம்மா! அம்மா! எங்கள் டீச்சர் பெயிலாயிட்டாங்க!
அம்மா: எப்படி?
சிறுமி: நாங்கள் எல்லாம் மூணும் கிளாசுக்கு வந்துவிட்டோம். அவங்க இரண்டாம் கிளாசிலேயே தங்கி விட்டாங்க!

அது ஒரு முந்திரிப் பருப்பு. ''ஒரு பார்ட்டிக்குப் போயிருந்தேன். அங்கே கொடுத்தார்கள். அப்படியே நானு கையில் எடுத்துக்கொண்டு வந்தேன்'' என்று கூறிவிட்டு இன்னொரு பருப்பை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு கிளம்பிப் போய் விட்டான். நான் ஏமாற்றமடைந்தேன். அவன் இரண்டாந்தரம் எனக்கு ஒன்றும் கொடுக்கவில்லை.

இந்த முந்திரிப் பருப்புப் பைத்தியம் இல்லாதவர்கள் அபூர்வம். சில 'பார்ட்டி'களில் பெரிய தட்டுக்களில் அதை நிறைய வைத்திருப்பார்கள். ''எனக்கு உடம்புக்கு ஆகாது என்று ஒருவர் முதலில் ஒன்றே ஒன்று எடுத்து வாயில் போட்டுக் கொள்வார். பிறகு இன்னொன்றை எடுப்பார். அப்புறம் இன்னொன்று..... சிலர் முந்திரிப் பருப்பை எடுப்பதற்கு இரண்டு மூன்று விரல்களை மட்டும் உபயோகிப்பது அகௌரவம், மகா பாபம் என்று கருதுவார்கள்; கைநிறைய அள்ளிக் கொள்வார்கள்.

உலகத்தின் பெரிய சர்வாதிகாரி ரஷ்யா தேசத்தின் பிரதம மந்திரி குருஷேவ். அவரே முந்திரிப் பருப்புக்கு அடிமையாகி விட்டார். அவர் மாஸ்கோவில் நடைபெற்ற இந்தியப் பொருட்காட்சி சாலைக்கு வந்திருந்தார். முந்திரிப் பருப்பைப் பார்த்ததும் ஒன்றை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். கூட வந்திருந்த டாக்டர்கள் அவர் அதைத் தின்னக் கூடாது. அவர் உடம்புக்கு அது ஒத்துக் கொள்ளாது என்று தடுத்தார்கள். ''நான் தின்னத்தான் தின்பேன்'' என்று சிறு பையனைப் போல் கூறிவிட்டுப் பின்னும் தின்னத் தொடங்கினராம்.

இப்படித் தன்னை மனிதர்கள் தின்னும்படி தூண்டும் அந்த முந்திரியை ஒரு காலத்தில் யாரும் லட்சியமே செய்ததில்லை.

போர்த்துகல் தேசத்தினருக்குச் செடி கொடிகள் என்றால் ஆசை. அவர்கள் இந்தியாவுக்கு முந்திரி மரக் கன்றுகளைக் கொண்டு வந்து பயிரிட்டுப் பார்த்தார்கள். ஆற்று நீர் கரையை அரித்து விடாதிருப்பதற்காக ஆற்றங்கரை ஓரம் பயிரிட்டார்கள்.

முந்திரிப் பழமும் அதன் கொட்டையும் அமைந்திருக்கும் விதம் பார்ப்பதற்கு மிகவும் வேடிக்கையாக இருக்கும். எல்லாப் பழங்களிலும் அவற்றின் கொட்டை உட்பக்கமாக வல்லவா இருக்கும்? முந்திரிப் பழத்தில் மட்டும் அது மேலே நீட்டிக்கொண்டிருக்கும். சில பெண்கள் பெரியவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது நடுவில் 'புசுக்'கென்று ஏதாவது சொல்லி வைக்கும்போது 'முந்திரிக் கொட்டை மாதிரி கிளம்பாதே' என்று சொல்வது வழக்கம். முந்திரியை எப்படி உபயோகிப்பதென்று முதலில் தெரியவில்லை. பண்டிகைகளின்போது பழங்களை ஆற்றுத் தண்ணீரில் மிதக்க விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். நாளடைவில்தான் முந்திரிக் கொட்டையை உடைத்து அதற்குள்ளிருக்கும் பருப்பைத் தின்னத் தொடங்கினார்கள். அமெரிக்கர்களுக்கு இந்தப் பருப்பு மிகவும் பிடிக்கும். வருஷத்தில் பத்தொன்பது கோடி ரூபாய் பெறுமான பருப்பை வெளி நாடுகளுக்கு அனுப்புகிறோம்.

முந்திரிப் பருப்பு உருண்டை, அதனுடன் 'பருப்புத் தேங்காய்' முதலியன சீர் வைப்பது ஒரு காலத்தில் பாஷனாக இருந்தது. இப்போது பல ஹோட்டல்காரர்கள் பாதங்கீர் செய்வதற்கு, வேர்க்கடலையையும் முந்திரிப் பருப்பையும்தான் பெரிதும் நம்பி யிருக்கிறார்கள். இது சிறுவர்களுக்கும் பால் கொடுக்கும் தாய்க்கும் ஒத்துக்கொள்ளாது.

முந்திரிப் பருப்பின் பெருமையை எடுத்துச் சொல்வதற்காக 'முந்திரிப் பருப்பு பத்திரிகை' (Cashewnut Magazine) என்று ஒன்று வெளிவருகிறது. அதில் அந்தப் பருப்பை உபயோகித்துப் பட்சண வகைகள் செய்வதைப் பற்றி அடிக்கடி எழுதுகிறார்கள். முந்திரிப் பருப்பு பர்பி செய்யும் முறையைப் பற்றிப் படித்தேன். அது மிகவும் சுலபமாக இருக்கிறது:

| | |
|---|---|
| முந்திரிப் பருப்பு மா | 1 ஆழாக்கு |
| அஸ்கா | 3 ஆழாக்கு |
| மைதா மா | 1 ஆழாக்கு |
| நெய் | 2 ஆழாக்கு |

இந்தச் சாமான்கள்தான் தேவை. முந்திரிப் பருப்பைச் சூடு காட்டி நன்றாகப் பொடியாக அரைத்து அல்லது இடித்துக் கொள்ளவும். அதில் சர்க்கரையைப் போட்டுக் கால் ஆழாக்குத் தண்ணீர் விட்டு நன்றாகக் கலந்து அடுப்பில் வைக்கவும். சிறிது கொதித்த பின் மைதா மாவைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தூவி நன்றாகக் கிளறவும். பிறகு நெய்யையும் சிறிது சிறிதாக ஊற்றிக் கிளறவும். பர்பி பாத்திரத்தில் பிடித்துக்கொள்ளாமல் இருக்கும் பக்குவத்தில் இறக்கிவிடவும். நெய் தடவின தாம்பாளத்தில் கொட்டி ஆறிய பிறகு வில்லைகளாகப் போட்டு எடுத்துக் கொள்ளலாம்.

நான் கொடுத்திருக்கும் அளவு சாமான்களுக்கு சுமார் 75 பர்பிகள் வரலாம். வேண்டியதற்கேற்றவாறு அளவைக் குறைத்துக்கொள்ளவும். செய்து பார்த்தேன். பர்பி கமகமவென்று வாசனை அடித்துக்கொண்டு நன்றாக இருக்கிறது.

புதியது

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு விருப்பமானது. ஏனெனில் அது எங்கள் குடும்பத்திற்கும் ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுடனிருக்க நான் ப்ரோடெக்ஸையே விரும்புகிறேன்"

"எனது மிருதுவான சருமத்தைப் பாதுகாப்பதால் அம்மா ப்ரோடெக்ஸையே விரும்புகிறாள்"

ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்—மிக மிகப்பெரிய டப்பா—மிகமிகக் குறைந்த விலை.




# ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-0-7-TAM.




மரியாதைப் பிள்ளைவாளைக் கண்டால் எங்களூரில் கதிகலக்கம். அவர் எதிரே நடக்கப் பலர் பயப்படுவார்கள். யாராவது தலைநிமிர்ந்து நடந்து சென்று விட்டால் அவன் பாடு திண்டாட்டம்தான்.

'யாருலே இவரு? மரியாதைப் பிள்ளைக்கு எதிரே இப்படித் தலை குப்புறப் போகிறாரு? நம்மைப் பற்றித் தெரிஞ்சுக்கலை போலிருக்கு!' என்று அதிகாரத் தோரணையில் அவர் கூறுவதைக் கேட்ட பிறகு அப்புறம் தலை நிமிர்ந்து நடக்க யாருக்குத் தைரியம் இருக்கும்?

அன்று மரியாதைப் பிள்ளைவாள் சில்க் சர்ட் அணிந்து கொண்டு வீதி பவனி புறப்பட்ட போது முன்பின் தெரியாதவன் ஒருவன் வீதியில் நடந்து சென்றான். அவன் அவருக்கு மரியாதை கொடுக்காமல் சென்றது மட்டுமல்ல; அவன் தூக்கிச் சென்ற தலைச் சுமையிலிருந்த விறகுக் கட்டிலுள்ள ஒரு சுள்ளி அவர் சில்க் சட்டையைக் கிழித்து விட்டதென்றால் பிள்ளை அவனைச் சும்மா விடுவாரா?

''எலே! ஊருக்குப் புதுசோ? இந்த மரியாதைப் பிள்ளையை அவமானப்படுத்திட்ட பயலே! வா, கிராமமுன்சீப் பிள்ளைகிட்டே! உன்னை ஒரு கை பார்த்துப்பிடறேன்!'' என்று சொல்லி அவனை எங்களூர்க் கிராமமுன்சீப்பிடம் இழுத்துச் சென்றார்.

கிராம முன்சீப் பிள்ளைவாள் நெற்றியில் விபூதியணிந்து தெருத் திண்ணையில் அமர்ந்திருந்தார். மரியாதைப் பிள்ளை பெருங் கூட்டம் பின்தொடர அவரிடம் வருவதைக் கண்டார். மரியாதைப் பிள்ளைவாள் இப்படி அடிக்கடி அவரிடம் ஏதாவது வம்பு தும்புகளை எடுத்துச் சென்று தம் மரியாதையை நிலை நாட்டிக் கொண்டு வருபவர். அவரைக் கண்டு அவர் அதிசயப்படவில்லை!

''என்ன! மரியாதைப் பிள்ளைவாள்! வாங்க! என்ன விசயம்?'' என்றார் கிராம முன்சீப் பிள்ளை.

''கிராமமுன்சீப் பிள்ளைவாள்! ஊரிலே இன்னிக்குப் பெரிய அக்கிரமம் நடந்து போச்சு! நம்மைக் கண்டால் எல்லாரும் ஒதுங்கிப் போவாங்க! ஆனால் இந்தத் தறுதலைப் பய தலை நிமிர்ந்து நம்ம சில்க் சட்டையைக் கிழிச்சுப் போட்டுட்டான்னா அது அடுக்குமா? இவனைத் தூணிலே கட்டிப் போட்டுத் தோலை உரிச்சால்தான் என் மனசு ஆறும்!'' என்று கத்தினார் மரியாதைப் பிள்ளை.

''அப்படிங்களா? யாரு பையன் புதிசல்ல போலிருக்கு!''

''புதிசானால் என்ன? பழசானால் என்ன? நம்ம மரியாதையைக் கெடுத்துப்பட்ட பயலைச் சும்மா விட்டுடப் படாது!''

மரியாதைப் பிள்ளையின் குற்றச்சாட்டுக்கு உரித்தான அந்த ஆள் வாய் மூடி மௌனியாக நின்றான். அவன் எதுவும் பேசவில்லை.

''என்னப்பா! இப்படிச் செய்யலாமா? ஊருக்குப் புதுசானாலும் இப்படி நடந்துக்கலாமா?'' என்று கேட்டார் கிராமமுன்சீப்.

அவன் பதிலே சொல்லவில்லை.

''ஐயா! இவன் ஊமை போலிருக்கு! என்ன கேட்டாலும் பதில் சொல்ல மாட்டான் போலிருக்கே?'' என்றார் ஒருவர்.

''வே! குத்தம் செய்ஞ்ச பய எங்காவது வாயைத் திறப்பானா? எங்கிட்ட அந்தப் பய முதல்லே பேசினான். இப்ப வாயைத் திறக்கலேயே?'' என்றார் மரியாதைப் பிள்ளை.

''உம்மகிட்டே முதல்லே பேசினானா? என்ன பேசினான்? ஊமை மாதிரியில்லே இருக்கான்?''

''ஊமையா? நல்லா பய பேசறான்; 'ஐயா! கொஞ்சம் ஒதுங்கிக்கிடுங்க!' என்று என்னிடம் சொன்ன பயலாச்சே இவன்! இப்ப மௌனச்சாமி வேஷம் போடறான்!'' என்றார் மரியாதைப் பிள்ளை.

''ஆமாம்! அப்படிப் பேசினானா?'' என்று திகைப்புடன் கேட்டார் கிராம முன்சீப்.

''ஆமாம்! நான் பொய்யா சொல்றேன்? அப்படியேதான் சொன்னான் இந்தப் பய!''

''மரியாதைப் பிள்ளைவாள்! அப்படின்னா இவன் பேரிலே குத்தமில்லே! இவன் உங்களுக்கு எச்சரிக்கை பண்ணிப்புட்டுத்தானே வந்திருக்கான்?'' என்றார் கிராம முன்சீப்.

மரியாதைப் பிள்ளைவாள் தம் வாயாலேயே அந்த வழக்குக்கு ஒரு முடிவு ஏற்பட வழி வகுத்து விட்டார். ஆனாலும் அவர், ''வே, கிராமமுன்சீப் பிள்ளை! அந்தப் பய மரியாதை தெரிஞ்சவன். மௌனமாயிருந்துவிட்டான். நீர்தான்லே நம்ப மரியாதையைப் புரிஞ்சிக்கிடலை!'' என்று கூறிவிட்டு, இனிமேல் அங்கு நின்றால் மானம் கப்பலேறி விடும் என்று கருதி அங்கிருந்து நடையைக் கட்டினார்.

---

''இந்தக்கழுதையின் விலையென்ன?''
''நூற்றைம்பது ரூபாய்.''
''குதிரை விலை சொல்றியே ஒரு கழுதைக்கு!''



''இதன் விலை ஐம்பது ரூபாய்தான். ஆனால் இது ஒரு நூறு ரூபாய் காகிதத்தைத் தின்று விட்டதே!''

## 'அசௌகரியமான நாட்களின்' போது இனி சாந்தி அவதிப்பட வேண்டியதில்லை

இந்த மாதிரி நாட்களில் எனக்கு ரொம்ப கஷ்டமாயிருக்கிறது !

இந்த ஸாரிடான் சாப்பிட்டுப்பார். விரைவிலேயே சுகமேற்படும்.

சாந்தி ஸாரிடான் சாப்பிடுகிறாள்

பிறகு : அப்பா ! என்ன ஆசுவாசம்! மாமி ஸாரிடான் பற்றி சொன்னது எவ்வளவு உண்மை!

# ஸாரிடான்

ரோஷ்'

நிவாரணம் அளிக்கிறது, ஆசுவாசப் படுத்துகிறது, புத்துணர்ச்சி யூட்டுகிறது




ஒரே வில்லை ஸாரிடான் போதும்
ஒரு வில்லை 13 நயா பைசா

'அசௌகரியமான நாட்களின்' போது நீங்கள் அவதிப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஸாரிடான் சாப்பிட்டால் விரைவில், அபாயமின்றி, நிச்சயமாக நிவாரணம் பெறுவீர்கள். தலைவலி, பல்வலி, உடல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, சாதாரண உடற்கோளாறுகள், இவற்றிலிருந்து நிவாரணம் பெறுவதற்கும் ஸாரிடான் இணையற்றது.

'ரோஷ்' தயாரிப்பு ஸோல் டிஸ்ட்ரிபூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

JWT-VT-4798

ராமகிருஷ்ணருக்காகவே பிறந்த தூயவர்களைப் பற்றிப் படித்தோம். ஆனால் ராமகிருஷ்ணர் இவர்களுக்காகப் பிறக்கவில்லை. எந்த அவதாரமுமே தூயோருக்காக நிகழுவதில்லை. நெறி தவறியவர்களை நன்னெறிப் படுத்துவதற்காகவே அல்லவோ இறைவன் இறங்கி வருகிறான்! பாவிகளைப் பாவனப்படுத்தவே அல்லவோ பரமன் பூமியில் தோன்றுகிறான்! அப்படித் தீமை தேய்ந்து தூய்மை பெறுவதற்காகவும் பலர் ராமகிருஷ்ணரை அடைந்தனர்.



கிரீஷ் சந்திர கோஷ் அவர்களில் ஒருவர்.

கவியும், நாடக ஆசிரியருமான கிரீசர்போகாத வழியில்லை; ஆடாத ஆட்டம் இல்லை. எப்படியோ ஓர் அலை அவரை ராமகிருஷ்ணரிடம் கொண்டு வந்து தள்ளிற்று. கரை சேர்ந்தார் அவர். தன்னிலிருந்து கிரீசர் விடுபடாதவாறு அந்தக் கரையே அவரைத் தன்னுள் உறிஞ்சிக் கொண்டு அவரில் படிந்திருந்த கறையைக் கரைத்தது.

# அறிவுக் கனலே, அருட் புனலே!

38

ரா. கணபதி

கிரீசரிடம் கடைத்தேற மார்க்கம் சொன்னார் ராமகிருஷ்ணர். ''உலகை உன்னால் திடீரென்று விடத்தான் முடியாது. உலகையும் வைத்துக் கொள். அதோடு ஈசுவரன் நினைவையும் வைத்துக் கொள்'' என்றார்.

''ஈசுவரனையா, நினைக்கவா? என்னால் முடியவில்லையே!'' என்றார் கிரீசர். அவருடைய சத்திய வாக்கு ராமகிருஷ்ணரைத் தொட்டது.

''சரி, அனவரதமும் பகவத் தியானம் செய்ய வேண்டாம். காலையிலும் மாலையிலும் மட்டும் அவனைக் குறித்து தியானம் செய்'' என்றார் ராமகிருஷ்ணர்.

''அது....அதுவும்கூட என்னால்.... முடியாது போலிருக்கிறதே ஸ்வாமி'' என்று உண்மையைக் கூறினார் கிரீசர்.

''என்னுடைய வாழ்க்கை ஒரே அலையெற்கிற ஏரியாக இருக்கிறது. அதன் போக்கில்தான் நான் செல்கிறேனே ஒழிய, என்னால் அதனை இயக்க முடியாது. என் வாழ்வில் எதற்குமே இடம் ஒதுக்குவதற்கு என்னால் இயலாது'' என்று வியக்தமாக ஒப்புக் கொண்டார்.

''அப்படியானால் உண்ணும்போதும், உறங்கப் போகும்போதும் ஒரே முறை

அவனை நினைப்பாய்" என்றார் ராம கிருஷ்ணர்.

'ஸ்வாமி! தாங்கள் மிகவும் எளிய சாதுனு மார்க்கத்தை எனக்குக் காட்டி யிருக்கிறீர்கள். ஆனால் பூம்பாதையில் கூட நடக்கத் திராணியற்றவன் நான். மனசு முடங்கிப் போன முடவனாகிய என்னால் நடக்கவே முடியாது. நான் கிடக்கிற இடத்திலேயேதான் கிடப் பேன்' என்று கிரீசரின் உள்ளம் அலறியது. ஆனால் அவரது வாய் மௌனம் சாதித்தது.

ராமகிருஷ்ணரும் வாய் திறவா மலே அவரிடம் பேசினார்: 'உன்னால் சுய முயற்சியில் நகர முடியாது. அவ் வளவுதானே? நானே உன்னைத் தூக் கிக் கொண்டு ஆத்ம மார்க்கத்தில் செல்கிறேன்' என்று தாமாக முன் வந்தார் அவர்.

இப்படி விகவிதமாக அவர் பேச வில்லை. விளையாட்டாகவே பேசினார்.

கட்சிக்காரன் விவகாரத்தை வக் கிலிடம் தள்ளிவிட்டு நிம்மதியாயிருக் கிறான். அவரே சாட்சிகள் அமர்த்து கிறார்; வழக்காடுகிறார். ஆனால் பிரதியை எதிர்பார்த்துச் செய்கிறார். பிரதியை எதிர்பாராமலே ஒரு வக்கீல் இருந்தால்? கிரீசருக்கு அப்படிப்பட்ட ஒரு வக்கீலாகத் தாம் இருந்து அவரது வாழ்க்கை வழக்கை வென்று தருவ தாகக் கூறினார் ராமகிருஷ்ணர். வேடிக் கைபோல் அவர் இப்படிக் கூறினாலும் அப்போது அவர் அரை சமாதி நிலை யில் இருந்தார். ஆண்டவனையோ, அவனது அவதாரத்தையோ அன்றி வேறு யார் இவ்வளவு உறுதியுடன் பிறர் வாழ்க்கையைத் தாம் நடத்தி வைப்பதாகக் கூற முடியும்?

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் இரண்டு மார்க்கங்கள் உண்டு—மார்க் கட நியாயம், மார்ஜார நியாயம் என்று. குரங்குக் குட்டி தாயைப் பிடித்துக் கொள்வது போல் ஜீவன் பகவானைப் பற்றிக் கொள்ள வேண்டு மென்பது மர்க்கட நியாயம். அந்த சுய முயற்சியும் ஜீவனுக்கு வேண்டியதில்லை; பூனை தனது குட்டியை வாயில் கவ்விக் கொள்வது போல் பரமாத்மாவே ஜீவனைக் கவ்விக் கொண்டு முக்தி நிலைக்கு இட்டுச் செல் வான் என்பது மார்ஜார நியாயம். கிரீசர் விஷயத்தில் ராமகிருஷ்ணர் மார் ஜார நியாயத்தைக் கடைப்பிடித்தார். கிரீசரும் சமர்த்துப் பூனைக் குட்டியாக இருந்தார். அம்மா தனது நலனுக்குத் தான் தன்னைக் கவ்வியிருக்கிறாள் என்று உணர்ந்து, அந்தப் பற்களின் பிடியிலிருந்து விடுபட யத்தனியாமல் பரிபூரண நம்பிக்கையோடிருந்தார்.

ராமகிருஷ்ணர் கிரீசரின் உள்ளத் துக்குத் 'தர்மகர்த்தா'வான உடன்—அவருடைய வாழ்க்கையே தாம் 'மேடோவர்' செய்து கொண்டவுடன்—கிரீசரிடம் ஓர் அற்புத மாறுதல் நிகழ்ந் தது. கடவுளைக் கணமும் நினைக்க இய லாது என்று முன்பு கூறியவர் இப் போது ராமகிருஷ்ணரின் கருணையையே கணந்தோறும் நினைக்கலானார். ''ஆஹா, பாபி என் வாழ்க்கையை அவரேயல் லவா 'நான் ஏற்று நடத்தி வைக்கிறேன்' என்றார்!'' என்று நினைந்து நினைந்து அதிசயித்தார். இப்படி அனவரதமும் ராமகிருஷ்ணரின் நினைவைப் பெற்ற ஒருவர் எப்படித் தவறான வழியில் செல்ல முடியும்? கிரீசர் பிழைக்கும் வழி தொட்டு விட்டார். தமது முயற்சி யாக இல்லாமலே, தமது முயற்சியாலும் முடியாத காரியத்தைச் சாதிக்கத் தொடங்கி விட்டார்! அவர் சாதித் தாரா? அவரை ஆட்கொண்ட ஆசான் சாதித்தாரா?

எத்தனையோ துர்ச் சம்பவங்கள் கிரீசருடைய வாழ்க்கையில் நேர்ந்தன. மனைவி மாண்டாள்; மகன் மறைந் தான். 'இதனையெல்லாம் என்ன? ராம கிருஷ்ணர் இப்படி நடத்தி வைக்கிறார் என்றால் அது ஏதோ ஒரு நலனுக்கா கத்தான் இருக்க வேண்டும்' என்று மனத் தெளிவுடனேயே இருந்தார் கிரீசர். குருவின் கிருபைதான் என்ன வெல்லாம் செய்து விடுகிறது?

பூஜை, தியானம், பஜனை என்று கிரீசரின் உள்ளம் திரும்பியது. நாடக வாழ்க்கையின் ஆவேசம் இப்போது நடிப் பாக இல்லாமல் இயல்பாகவே இவற் றில் திரும்பியது. ராமகிருஷ்ணரே பல படித்தாகப் பாராட்டும் அளவுக்கு உயர்ந்து விட்டார் கிரீசர்.

''ஈசுவரனின் பைரவ கணங்களில் ஒருவர் கிரீஷ்'' என்று ஒரு முறை கூறினார் ராமகிருஷ்ணர்.

இன்னொரு சமயம், ''கிரீஷுக்கு நூறு சதவிகிதம் நம்பிக்கை இருக்கிறது'' என்று கூறி, ''இவ்விடத்தில் * இப்படி நம்பிக்கை வைக்கும்படி அப்படி நீ என்ன கண்டு விட்டாய்?'' என்று வினவினார்.

''அதை யெல்லாம் நான் எப்படிச் சொல்ல முடியும்?'' என்று கேட்ட கிரீசரின் வாக்குகள் ஆனந்தபாஷ்பத்தில்

---

* ராமகிருஷ்ணர் தம்மை 'நான்' என்று சொல்லிக்கொள்ள மாட்டார். 'இவ்விடம்' என்றே குறிப்பிடுவார்.

# வாழ்க்கை ஒளிகளின் வனப்பான அழகு



ஸான்போரைஸ்ட் பாப்ளின்ஸ் :
கோல்ட் ட்ரிங்க், ப்ளுபர்ட், எவர் ப்ரைட்,
குட் ஷைன்,

ஷர்ட்டிங்ஸ் : ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமா

தோதீஸ் : ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல்,
ப்ளாடினம், காம்ராஜ்





ஸூட்டிங்ஸ் :
காபர்டின்

நெசவான கலர் புட்டாக்கள் :

ப்ரிண்ட்ஸ் :

ப்ரிண்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்ளின்ஸ்,
ஸ்கிரீன் ப்ரிண்ட் ஸாரீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—லினோவிலும்
புட்டாக்களிலும்

·SANFORIZED·




## அரவிந்த்

மில்ஸ் லிமிடெட் அஹமதாபாத்



## இசை மன்னர்

'வெண்கலக் கடைக்குள் யானை நுழைந்தாற்போல்' என்று கேள்விப்பட்டிருக்கிறோம்; ஆனால் பார்த்ததில்லை. அமெரிக்காவிலிருந்து சென்னைக்கு வந்த ஜாஸ் குழுவினரின் இசையைக் கேட்டதும் முதலில் அந்தப் பழமொழிதான் நினைவு வந்திருக்கும் பலருக்கு. ஆனால் பத்து நிமிஷங்கள் அந்த இசை காதுக்குப் பழக்கமான பிறகு அந்தப் பொல்லாத இசையில் தாங்கள் கட்டுண்டுவிட்டதை உணர்ந்திருப்பார்கள்.

தற்கால ஜாஸ் இசையை உருவாக்கி ஒழுங்குபடுத்தியவர்களில் டியூக் எலிங்டனுக்குத் தனிச் சிறப்பான இடம் உண்டு. டியூக் என்கிற பட்டப் பெயரை அவருடைய எட்டாவது வயதில் நண்பன் ஒருவன் சூட்டினானாம், அவருடைய ராஜ நடையையும் உடையையும் பார்த்துவிட்டு. அதனால்தானோ என்னவோ ஜாஸ் இசை மன்னராகத் திகழ்கிறார் அவர். துரதிர்ஷ்டவசமாக இந்தியா வந்து சேர்ந்த சில நாட்களில் அவர் உடல் நலக்குறைவினால் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார். அவர் இல்லாத குறை தெரியாதவாறு ஜாஸ் ஆர்க்கெஸ்ட்ராவைத் திறம்பட நடத்தினார் பில்லி ஸ்ட்ரேஹார்ன்.

''ஜாஸ் இசை என்றோ வேறு இசை என்றோ ஏதும் இல்லை; இசை என்பது மட்டும்தான் இருக்கிறது'' என்றார் டியூக் எலிங்டன் ஒரு தருணத்தில். சென்னை மக்கள் ஜாஸ் இசையைப் பரவசமாகி அனுபவித்ததைப் பார்த்ததும் அவர் கூறியதில் உண்மை இருப்பதாகவே தோன்றியது.

சிக்கிக் கொண்டன. ''ஐயனே, வால்மீகியாலும் வியாஸராலும் கூறவொண்ணாத தங்கள் பிரபாவத்தை நான் எப்படிக் கூற முடியும்?'' என்று கேவினார்.

உடனே ராமகிருஷ்ணர் வால்மீகியும், வியாஸரும் துதித்த ராம-கிருஷ்ணரியராகவே பாவசமாதியில் ஆழ்ந்து விட்டார். அவரது பாததூளியை எடுத்துச் சிரஸில் தரித்துக் கொண்டார் கிரீசர்.

நூறு சத விகிதம் நம்பிக்கை கொண்ட கிரீசரும் சில சமயங்களில் மனசு தளர்ந்து விடுவார். தமக்கு விமோசனம் உண்டா என்று கலங்கி விடுவார். அப்போது ராமகிருஷ்ணர் தான் அன்பொழுக அவருக்கு ஆறுதல் கூறுவார்: ''நான்தான் உன்னைப் பிடித்துக் கொண்டு விட்டேனே! இன்னும் ஏன் பயம்? நான் ஏதோ சாதாரண நீர்ப் பாம்பு அல்ல. நல்ல பாம்பு. சுற்றிக் கொண்டால் விடவே மாட்டேன். கடித்துத்தான் தீருவேன். என்னிடம் மாட்டிக் கொண்டவர் செத்துத்தானாக வேண்டும்'' என்பார்.

ஆனால் இவர் விஷமுள்ள நல்ல பாம்பல்ல. அமிருதம் நிறைந்த வெகு நல்ல பாம்பு. இவர் கடித்தால் சாகிற சாவும் சாதாரணமானதல்ல. சாவே செத்துப் போய் அமரத்துவம் கிடைக்கும் சாவு அல்லவா அது?

சில சமயங்களில் கிரீசர் மன உளைச்சல் தாளாது ராமகிருஷ்ணரையே வாயில் வந்தபடி பேசி விடுவதும் உண்டு.

''அதனால் பரவாயில்லை. அவன் என்னைத்தானே தூஷித்தான்? என் அம்மாவைத் தூஷிக்கவில்லையே!'' என்பார் ராமகிருஷ்ணர்.

நாளடைவில் அந்த அம்மாவும் அவரும் ஒருவரே என்பதைக் கண்டு கொள்ளும் பாக்கியம் கிரீசருக்குக் கிடைத்தது. சாரதையைப் பரதேவதையாகக் கண்டு ராமகிருஷ்ணர் பூஜித்தார் எனில் கிரீசரோ ராமகிருஷ்ணரையே அம்பிகையாகக் கண்டு வழிபட்டார்.

கொடிய புற்றுநோயுடன் ராமகிருஷ்ணர் சியாம்புகுரில் வாழ்ந்த போது ஒரு நாள் காளி பூஜைக்கான திரவியங்களையெல்லாம் தயார் செய்யச் சொன்னார். அப்படியே சீடர்கள் சித்தம் செய்தார்கள். ஆனால் பூஜை பெற வேண்டிய காளி எங்கே என்று தெரியாமல் திகைத்தார்கள். அப்போது கிரீசர்தான் ராமகிருஷ்ணரின் உள்ளக் கருத்தைப் புரிந்து கொண்டார். 'இன்று அவர் பூஜை செய்யப் போவதில்லை; பூஜை பெறப் போகிறார்! அன்னையை வழிபடும் ஆனந்தத்தைச் சீடர்களுக்கே அளிக்கப் போகிறார்' என்று தெரிந்து கொண்டார்.

புஷ்பங்களை எடுத்து ராமகிருஷ்ணரின் புஷ்பப் பாதங்களில் அர்ப்பித்த கிரீசர், 'ஜயஜய மாதா' என்று தீர்க்கமாகக் கோஷித்தார்.

பல கண்டங்கள் அந்தக் கோஷத்தை எதிரொலித்தன.

பல கரங்கள் ராமகிருஷ்ணரது அடியிணைகளுக்கு மலரிட்டன.

ராம கிருஷ்ணர் பாவ சமாதியில் மூழ்கினர்.

அவரது ஒரு கரம் தானகவே வர முத்திரையைத் தாங்க, மற்றது அபயம் கூற, அம்பிகையின் பொலிவாக, அழகின் பொழிலாக அவர் விளங்கினர்.

அந்தக் காட்சி கிரீசரின் மனத் திரையில் ஆழப் பதிந்து விட்டது. பிறிதொரு சமயம் அவர் ராமகிருஷ்ணரிடம் "நீங்கள் உண்மையில் ஆணு, பெண்ணு?" என்று கேட்டார்.

"நான் என்ன கண்டேன்?" என்று கூறிச் சிரித்தார் ராமகிருஷ்ணர்.

**தாயாய் எனக்குந்தான் எழுந்தருளி...**
**குருவடிவாகிக் குவலயம் தன்னில்**
**திருவடி வைத்து**

என்று அவ்வையார் அன்னையையும் ஆசானையும் இணைத்துப் பாடியது அநுபவ உண்மையையே அல்லவா ?

ஃ ஃ ஃ

**சா**ரதையை ராமகிருஷ்ணர் பூஜித்துப் பெண் உருவத்தில் உள்ளவர் எல்லோரும் அன்னையே என்ற 'சண்டீ' வாக்கியத்தை நிரூபித்ததோடு தமது சாதனைகள் நிறைவு பெற்றதாகக் கருதியதைக் கண்டோம். அதன்பின் இனி இந்த உலகில் அநுபவிக்க வேண்டிய ஆத்ம சாதனை எதுவுமே இல்லை என்னும்படியாக, சகல சம்பிரதாயங்களாலும் சத்தியத்தை சாக்ஷாத்கரித்த ராமகிருஷ்ணருக்கு ஸ்புரித்த பல உண்மைகளை அறிந்தோம். இவற்றில் ஒன்ருகத் தம்மைச் சீடர்கள் நாடி வரப் போகிருர்கள் என்று உணர்ந்து அவர்களுடைய வருகைக்காக அவர் தவியாய்த் தவித்ததாக அறிந்தோம். இதைத் தொடர்ந்து அவரது அதிமுக்கியமான சீடர்களில் ஒருவர் நீங்கலாக மற்றவர்களைப் பற்றி யெல்லாம் தெரிந்து கொண்டோம். அந்த ஒருவருக்கு வரவேற்பு அளிக்கும் தருணம் நெருங்கி விட்டது! மற்ற சீடர்களைத் தமது தாசராகவும், பாலராகவும் ராமகிருஷ்ணர் கருதினர் எனில் இவரையோ தம்மையே இட்டு நிரப்பும் இன்னெரு கூருக எண்ணினர்! சக்தியாகிய தம்மை நிறைவிக்க வேண்டிய சிவப் பரம் பொருளே இச் சீடர் என உணர்ந்தார். மண்ணுலகில் பிறக்க நேரும் காலங்களில் தேவி எப்படி ஈசனுக்காக ஏங்கி ஏங்கிக் காத்திருப்பாளோ அப்படியே இந்த சிஷ்யருக்காகக் காத்திருந்தார் ராமகிருஷ்ணர். இந்த அற்புத சிஷ்யருக்கும் குருவுக்குமிடையே நிகழ்ந்த சந்திப்பைக் கூறுமுன், ராமகிருஷ்ணர் சாரதையைப் பூஜித்ததிலிருந்து இடைக் காலத்தில் நேர்ந்த சில சம்பவங்களைக் கூறலாம்.

ஃ ஃ ஃ

**ரா**மகிருஷ்ணர் சாராதா மணியை ஷோடசியாக ஆராதித்த சிறிது காலத்துக்குப்பின் ராமகிருஷ்ணருடைய தமையனர் ராமேசுவரர் பரகதி அடைந்தார்.

ராமேசுவரர் தமது மரணத்துக்கு முன்பே அதனை அறிந்து, யாருக்கோ ஏதோ நேரப் போவது போல்தான் தொடர்பில்லாமலிருந்தாராம். வீட்டு வாயிலில் உள்ள மாமரம் ஏதோ காரணத்துக்காக வெட்டப்படுவதைக்கண்ட அவர், "வாழ்நாளிலெல்லாம் இதன் நிழலில் இருந்தேன். இதன் கட்டையையே என் தகனத்துக்குப் பயன் செய்யுங்கள்" என்று கலக்கமில்லாமல் கூறினராம்.

உடனேயே, "தகனமா? வேண்டாம். என் உடம்பை எரித்து விடாதீர்கள். ருத்ர பூமிக்குப் பக்கத்திலுள்ள சாலையோரத்தில் என்னைப் புதைத்து விடுங்கள். சாலையில் செல்லும் சாதுக்களின் பாத தூளியெல்லாம் என்னை இட்ட இடத்துக்கு மேல் படிந்துகொண்டிருக்கும். நான் புண்ணிய லோகம் செல்வேன்" என்ருராம்.

மரணச் செய்தியைச் சந்திரமணியிடம் எப்படித் தெரிவிப்பது என்று குழம்பிக் கொண்டிருந்தார் ராமகிருஷ்ணர். ஏற்கனவே ஒரு பிள்ளையைப் பறிகொடுத்துப் புத்திரசோகப்பட்டவளல்லவா அவள்? பேரன் அக்ஷயனும் சமீபத்தில்தானே 'நான் போகிறேன்' என்று திரும்பி வராத இடத்துக்குச் சென்று விட்டான்?

அம்மாவிடம் செல்லு முன் அம்பிகையின் சந்நிதிக்குச் சென்ருர் ராமகிருஷ்ணர். "என்னைப் பெற்றவளுக்கு நீதான் மனத் தெளிவு தர வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டார்.

நஹபவத்துக்குச் சென்ருர்.

"அம்மா, அம்மா! ராமேசுவர் வந்து....." என்று தேம்பினர்.

சந்திரமணி ராமகிருஷ்ணரைச் சாவதானமாகத் தேற்றினள் :

"உலகம் அப்படித்தான் அப்பனே! உனக்குத் தெரியாததற்கா நான் சொல்ல வேண்டும்? இங்கே எல்லாம் அநித்தியம்தானே ? சாவைத் தலையில் சூட்டிக் கொண்டுதானே பிறக்கிறோம்? இதற்குத் துக்கிப்பார்களா?" என்று கூறினள் சந்திரமணி.

தேசீய பாதுகாப்பு பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்

ஆறுதல் கூற வந்தவருக்கு ஆறுதல் கூறும்படியாயிற்று.

கண்ணில் நிறைந்த நீருடன் அன்னையைப் பார்த்தார் ராமகிருஷ்ணர்.

மானுட ஸ்திரீயா அவள்? தேவியின் கையில் உள்ள தம்பூராவாகவே ராமகிருஷ்ணருக்குத் தோன்றினாள் சந்திரா தேவி. உச்சமான சுருதிக்கு அதனை முடுக்கியிருந்தாள் அம்பிகை. பிசிர் இல்லாமல் இழையும் அதன் இசைக்குத் தொடர்பில்லாமல் உலக வாழ்வின் அபஸ்வரங்கள் எங்கோ ஓடின!

சந்திரமணியின் சித்தம் பேதலித்து விட்டதாக ஊரார் சொன்னார்கள். பக்தி என்பது பைத்தியமாகத்தானே தோன்றும்? அலம்பஜார் சணல் ஆலையில் நடுப் பகலில் சங்கு ஊதும். தொழிலாளிகள் உண்ணச் செல்வார்கள். அரை மணி கழித்து மறுபடியும் சங்கு ஊதும். தொழிலாளிகள் வேலைக்குத் திரும்புவார்கள். சந்திரமணிக்கு அது சணல் ஆலைச் சங்காகத் தோன்ற வில்லை. வைகுண்ட நாதனின் பாஞ்ச ஜன்ய சங்கமாகவே அதுஒலித்தது. அந்தச் சங்கொலி பரமன் உட்கொண்டு விட்டான் என அறிவிப்பதாகப் பொருள் கொண்டாள் அவள். தான் அதன் பின்பே உண்பாள். ஆலையின் விடுமுறை நாட்களில் சங்கு ஒலிக்காதல்லவா! அப்போதெல்லாம் சந்திரா உண்ணவே மாட்டாள். "என் ஸ்வாமி ஆகாரம் செய்யாதபோது எனக்கென்ன வேண்டிக் கிடந்தது?" என்பாள் பிடிவாதமாக. ராமகிருஷ்ணர்தான் அவளுக்குச் சமாதானங்கள் சொல்லி உண்ண வைப்பார்.

ஒரு நாள் மாலை அன்னையைக் காணச் சென்றார் ராமகிருஷ்ணர். அன்னையும் மகனுமாக நள்ளிரவு வரையில் ஏதேதோ கொட்டியளந்தார்கள். அவர்களது வாழ்க்கைச் சம்பவங்கள் அவ்வளவும் அன்று அற்றுப்படியாயின.

அன்னையிடம் பிரியாவிடை பெற்றுத் திரும்பினார் ராமகிருஷ்ணர்.

மறு நாள் காலை வேலைக்காரி நஹபத்தின் கதவைத் தட்டினாள்.

கதவு திறக்க வில்லை.

ஃ ஃ ஃ

"நான் சந்நியாசி; கர்மம் செய்வதற்கில்லை" என்று கூறினார் ராமகிருஷ்ணர்.

அனலை வாரி அன்னை மீது இட மனசு இல்லாமலே இப்படி ஒரு காரணம் கூறியவர் போல, குளிர்ந்த சந்தனக் குழம்பை எடுத்து அவளுடைய பாதங்களில் பூசினார். துளஸி இலைகளையும் அவற்றுக்கு அர்ப்பணம் செய்தார்.

அவதார புருஷரை உடம்பில் தாங்கும் பேறு பெற்றவளுக்கு எந்த கதி உண்டோ அந்த உத்தம கதியை அடைந்தாள் சந்திரா.

அன்று சரியாக ராமகிருஷ்ணரின் நாற்பதாவது பிறந்த தினமாகும்.

ஃ ஃ ஃ

ஆதி சங்கரரும், பட்டினத்துப்பிள்ளைகளும் அன்னைக்கு சம்ஸ்காரம் செய்தார்களல்லவா? ராமகிருஷ்ணருக்கு இப்படித் தாம் செய்ய வில்லையே என்ற தாபம் இருந்தது.

யாரும் அறியாமல் கங்கையை நோக்கி நடந்தார் — தாய்க்குத் தர்ப்பணம் செய்வதற்காக.

கை நிறைய நீரை எடுத்துக் கொண்டார். உடனே அவரது உணர்வுகள்

எங்கோ பறந்தன. அவருடைய கை அப்படியே மரத்து விட்டது. விரல்களை இயக்க முடியவில்லை. மந்திரம் சொல்லவும் இயலவில்லை. கரத்திலிருந்த நீர் தானாகவே கங்கையில் சிந்தி மறைந்தது. மீண்டும் மீண்டும் இப்படியே நடந்தது.

அவர் சந்நியாச தர்மத்தை விட முயன்றாலும், சந்நியாச தர்மம் அவரை விடவில்லை. அதற்கு ஆசிரயமாக வேறு யார் கிடைப்பார்கள்?

தேவியின் திருவுள்ளத்தைப் புரிந்து கொண்டு திரும்பினார் ராமகிருஷ்ணர்.

''அம்பிகை நான் ஒருபோதும் தர்மத்தை மீற அனுமதித்ததில்லை'' என்று பிற்காலத்தில் ராமகிருஷ்ணர் அடிக்கடி கூறுவார்.

''எல்லாச் செடிகளும் முதலில் புஷ்பிக்கும்; பிறகு காய்த்துப் பழுக்கும். நானோ முதலில் பழுத்தேன். பிறகு புஷ்பித்தேன்'' என்பார் ராமகிருஷ்ணர். குழந்தைப் பருவத்திலேயே தம் முயற்சியில்லாது பரம்பொருளை நுகர்ந்து சமாதியில் இருந்த ராமகிருஷ்ணர் யௌவன தசையில் தமது பழைய அநுபவங்களை சாஸ்திரபூர்வமாகப் பரீட்சை செய்து பார்க்கவிரும்பினார். அதன் பின் பன்னிரண்டாண்டுகள் சத்திய தரிசனத்துக்காக அவர் அநுஷ்டிக்காத அநுஷ்டானமில்லை. இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் அவரது உடம்பும், உள்ளமும் உற்ற சோதனைகள் கொஞ்ச நஞ்சமில்லை. வியர்வைக்குப் பதில் உடலெல்லாம் ரத்தம் துளித்த நாட்கள் எத்தனையோ! அகோரப் பசியெடுத்து அந்த உடலுக்கு விசைக்கணக்கில் தின்பண்டங்களை அவர் கொடுத்துக் கொண்ட நாட்கள் எத்தனையோ! இதே போல் நீரும் பருகாமல் அவர் நினைவின்றிக் கிடந்த நாட்கள் எத்தனை எத்தனையோ! உடலில் பட்ட இன்னலுக்குச் சிறிதும் குறைந்ததல்ல அவரது உள்ளம் உற்ற இன்னல். தெய்வாநுபவத்துக்காக மனசு பாளம் பாளமாக வெடிக்க அவர் பொருமிப் பொருமிப் புலம்பிய இரவுகள் ஆயிரமாயிரம்! தேவியைக் காண முடியாமல் உயிரையேவிட்டுவிடும் அளவுக்கு உள்ளம் கனன்று கொதித்த தினங்கள் பலப் பல.

இவ்வளவுக்கும் ஈடு செய்யும் முறையில் பலன்களைப் பெற்றார் ராமகிருஷ்ணர். இதன் பயனாகப் பன்னிரண்டு ஆண்டுகளில் சாமானிய வாலிபன் பக்தனானான்; பக்தன் ஞானியானான்; ஞானி அநுபூதிமான் ஆனான்.

இதோடாவது அவரின் இதய தாபம் ஓய்ந்திருக்க வேண்டுமல்லவா? இல்லை;

அநுபூதிமான் ஆசாரியனாகத் துடித்தார். தமது அநுபூதிகளை உலகுக்கு ஆக்கத் துடித்தார். ஆசாரியனாக வேண்டும் என்ற அவரது ஆசை உலகின் பாக்யெம். தமது அநுபவங்களைத் தம்மோடு வைத்துக் கொண்டு அவர் உலகை விட்டுச் சென்றிருந்தால் உலகம் எப்பேர்ப்பட்ட ஆத்மிக தனத்தை இழந்திருக்கும்? ஆனால் அவதார புருஷரான அவர் தமது அவதாரப் பணி நிறைவுறவே இப்படி ஓர் ஆசையை ஏற்றுக் கொண்டார்.

அவரது துடிப்பைத் தணிக்க ஒவ்வொரு சீடராக வந்து சேர்ந்தார்கள்.

அவரை குருமகராஜ் என்றார்கள்; பரமஹம்ஸர் என்றார்கள். ஆனால் அவர்களெல்லாம் அவருக்குப் போதவில்லை. யாருக்குத் தாம் குருவாக இருக்க வேண்டுமோ அவன் வரவில்லையே என்று விம்மினார். 'அவன் நானே' (அஹம் ஸ:) என்பதை அறிந்தால் பரமஹம்ஸராகக் கருதப்பட்டவர் ராமகிருஷ்ணர். பாலையும் நீரையும் ஹம்ஸம் பிரிப்பதுபோல் ஆத்ம வஸ்துக்களிலிருந்து அநாத்ம வஸ்துக்களைப் பிரிக்கும் 'விவேகம்' என்ற குணத்தைப் பெற்ற விவேகாநந்த ஹம்ஸத்துக்காகப் பரமஹம்ஸம் வாடிற்று.

''அவன் எங்கே, எங்கே?'' என்று ஏக்கமாக ஏங்கினார் ராமகிருஷ்ணர்.

1881-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் சுரேந்திர நாத மித்ராவின் வீட்டுக்கு அவர் சென்ற போது நரேந்திரநாதன் என்ற ஒரு வாலிபன் அங்கு பிரார்த்தனை கீதங்கள் பாடினான். 'இவன் அவன்தானோ?' என்று எண்ணலானார் ராமகிருஷ்ணர்.

மற்றச் சீடர்களைக் கண்டவுடனேயே தம்முடையவர் என்று புரிந்துகொண்ட ராமகிருஷ்ணர் தமது முக்கியமான சீடரை அவ்வாறு புரிந்து கொள்ளாதது வியப்பாகத் தோன்றும். ஆனால் நமக்கு அதிகமாகப் பிரியம் இல்லாதவர்களைவிட, மிகவும் வேண்டியவர்களின் முகம் மறந்து போய் விடும் அதிசயத்தை நடைமுறையில் காண்கிறோம் அல்லவா? இப்படி ஆசை முகம் மறந்து போனவராகத்தான் இருந்தார் ராமகிருஷ்ணர்.

நரேந்திரனின் இசையில் லயித்த ராமகிருஷ்ணர், அவனது லயத்தில் இசைந்த ராமகிருஷ்ணர் அவனை தக்ஷிணேசுவரத்துக்கு வருமாறு அழைத்தார்.

சில காலம் கழித்து அவனும் தக்ஷிணேசுவரத்து வந்து சேர்ந்தான்.

ராமகிருஷ்ணருக்கு ஆசை முகம் நினைவு வந்து விட்டது! (தொடரும்)




ஒரு புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்த லலிதாவின் உதடுகளில் புன்னகை அரும்பிற்று.

"என்ன சிரிக்கிறாய்?" என்று அவள் எதிரில் உட்கார்ந்திருந்த அவள் கணவன் பாலகோபால் கேட்டார்.

"போலீஸ்காரர்களை நம்பவே கூடாது" என்று இதில் போட்டிருக்கிறது" என்றாள்.

"நான் உன்னை எப்போது ஏமாற்றியிருக்கிறேன்?"




"நம்பக் கூடாது என்றால் ஏமாற்றுவது என்று அர்த்தமில்லை. இந்தப் போலீஸ்காரர் நமக்கு உறவாயிற்றே என்றோ, நமது நண்பராயிற்றே என்றோ, அல்லது நமது அண்ணன் ஆயிற்றே என்றோ எண்ணி நம்மை வழக்கில் மாட்டி வைக்க மாட்டார் என்று நம்பியிருப்பதற்கில்லையாம்" என்று கூறினாள் லலிதா.

"அயோக்கியர்களும் சட்ட விரோதமாக நடந்துகொள்பவர்களும், உறவினர்களானாலும் சரி, என்னை நம்பவே வேண்டியதில்லை" என்று பாலகோபால் அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்.

"மற்றவர்களாவது சிறிது தயாதாட்சிண்யத்துடன் நடந்து கொள்வார்கள். நீங்கள் வேண்டியவர்கள் விஷயத்தில் இன்னும் கடுமையாக நடந்துகொள்வீர்கள். முன்னே ஒரு நாள் காலையில் தெருவிலே ஒரு நாறு

# போலீஸ்காரர் மனைவி

என்.ராஜன்




ரூபாய் நோட்டுக் கிடந்தது. எடுத்து வைத்திருந்தேன். அதைப்பற்றி அப்பொழுது சொல்லச் சந்தர்ப்பப் படவில்லை. சாயங்காலம் சொன்னேன். 'உடனேயே ஏன் சொல்ல வில்லை?' என்று கேட்டு அதை வாங்கிக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினீர்களே?''

''அதற்காக என்மேல் கோபமா?''

''கோபமா? போலீஸ் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் பாலகோபாலின் மனைவி நான் என்று பெருமைப்பட்டேன்'' என்றாள் லலிதா.

''லல்லி!'' என்று ஆசை பொங்க அழைத்துக் கொண்டே பாலகோபால் அவளை நோக்கி வந்தார். அப்பொழுது டெலிபோன் மணி அடிக்கவே அவர் மனைவியைக் கொஞ்சுவதை மறந்து விட்டு ரிஸீவரை எடுத்துக் கேட்டார்.

''என்னப்பா, சௌக்கியமா?'' என்று யாரோ விசாரித்தார்கள்.

அந்தக் குரலைக் கேட்டபோது பாலகோபாலுக்குச் சட்டென்று பதில் சொல்லத் தோன்றவில்லை.

''என்ன பேசவே யில்லையே?'' என்றது அந்தக் குரல்.

''ஊம்!''

''அது பாலகோபால்தானே?''

''அட, சிதம்பரமா? எனக்குக் குரல் முதலில் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. பார்த்து ஏழெட்டு வருஷங்களாகி விட்டதல்லவா? நீ இங்கே எத்தனை நாட்களாக இருக்கிறாய்?''

''இப்போதுதான் பம்பாய் எக்ஸ்பிரஸில் வந்து இறங்கினேன். ஸெண்டிரல் ஸ்டேஷனிலிருந்து பேசிக் கொண்டிருக்கிறேன். ஒரு விலாசத்துக்காக டெலிபோன் கைடைப் புரட்டினேன். உன் பெயர் கண்ணில் பட்டது. ஆனால் நீதானா அல்லது வேறு யாரோவா என்று சந்தேகம். இருந்தாலும் டெலிபோன் செய்து வைத்தேன். நீ இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''வயிறு பிழைக்க வேண்டாமா? ஏதோ வேலை பார்க்கிறேன்!''

''என்ன கோபால்! டெலிபோன் வைத்துக் கொண்டிருக்கிறாய். ஏதோ வேலையாவது? கலியாணம் செய்து கொண்டு விட்டாயா?''

''ஓ!''

''பேஷ்! எனக்கு இன்று ராத்திரி உன் வீட்டில் விருந்து! இதோ கிளம்பி வந்து விடுகிறேன்!''

மறுகணம் டெலிபோன் பேச்சு நின்றுவிட்டது. பாலகோபால் தமது கையிலிருந்த குழலை வைத்து விட்டுப் பிறகு டெலிபோன் கருவியையே பார்த்த வண்ணம் நின்றிருந்தார்.

''அடிக்கடி 'சிதம்பரம்' என்று சொல்வீர்களே, அவரா?'' என்று லலிதா கேட்டாள். அவள், தன் கணவன் டெலிபோனில் பதில் அளித்த விதத்திலிருந்து அதில் பேசியது யார் என்று ஊகித்துக் கொண்டிருந்தாள்.

''ஆமாம்!''

"அவர் தலைமறைவாக இருக்கிறார் என்றீர்களே! அவர் மேல் இப்போது கொலை, கொள்ளை குற்ற வழக்கு ஒன்றும் இல்லையோ என்னவோ?"

"இன்னும் அவனைத் தேடிக் கொண்டு தான் இருக்கிறார்கள். நேற்றுக் கூடத் தோத்தாத்திரி அவனைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார்" என்று பாலகோபால் கூறி விட்டுப் போலீஸ் தலைமைக் காரியாலயத்துக்கு டெலிபோன் செய்தார்.

"பாலகோபால் பேசுகிறேன். மிஸ்டர் தோத்தாத்திரிக்குப் போடு!" என்றார்.

"அவர் வெளியில் போயிருக்கிறார். அவர் அறையில் நந்தகுமார்தான் இருக்கிறார். அவருக்குப் போடுகிறேன்."

"சரி!"

"யாரு, நந்தகுமாரா? நேற்று ஓர் ஆளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோமே, அவன் என் வீட்டுக்கு டாக்ஸியில் வந்து கொண்டிருக்கிறான். தோத்தாத்திரியிடம் சொல்லி உடனே நாலு பேரை அனுப்பச் சொல். அவர்கள் போலீஸ் உடையில் வரவேண்டாம். இரண்டு பேர் வீட்டின் முன் பக்கமாகவும் இரண்டு பேர் பின் பக்கமாகவும் இருக்கட்டும். அவர்கள் வருகிற மோட்டார் சைக்கிள், அல்லது வான் வண்டி ஒன்றின் சத்தமும் கேட்கக் கூடாது. அவை கண்ணிலும் படக் கூடாது. நான் போலீஸ்காரன் என்று அந்த ஆளுக்குத் தெரியாது. உடனேயே அனுப்பி வைக்கவும்" என்று கூறி முடித்து ரிஸீவரைக் கீழே வைத்தார்.

பாலகோபாலும், சிதம்பரமும் பால்ய நண்பர்கள்; பல வருட காலம் சேர்ந்து படித்தவர்கள். அவர்கள் உடல் அமைப்பு பார்ப்பதற்குக் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாயிருக்கும். சிதம்பரம் நல்ல பலசாலி; முரட்டு சுபாவமும் உள்ளவன். நாளடைவில் குடிப் பழக்கமேற்பட்டு அதற்கேற்றவாறு நண்பர்களும் அமைந்தார்கள். சிறுகச் சிறுகத் தீய செய்கைகளில் ஈடுபடலானான். பிறகு வட இந்தியாப் பக்கம் போனான். அங்கே அவன் ஒரு பாங்குக் கொள்ளையில் சம்பந்தப்பட்ட விஷயம் பாலகோபாலுக்குத் தெரிய வந்தது. கடைசியாக ஒரு கொலை செய்து விட்டுத் தலைமறைவாக இருந்து வந்தான்.

பாலகோபால் ஒன்றிரண்டு காரியாலயங்களில் குமாஸ்தா வேலை பார்த்து விட்டுப் பிறகு போலீஸ் இலாகாவில் சேர்ந்து இன்ஸ்பெக்டரானார். அவர் சில வருஷங்கள் வெளியூர்களிலிருந்து விட்டு அப்போதுதான் முதன் முதலாகச் சென்னைக்கு வந்திருந்தார். வந்து பத்து நாட்கள் கூட ஆகியிராது.

"அவன் எதற்கும் துணிந்தவன் என்று சொல்லியிருக்கிறீர்களே! எனக்குப் பயமாயிருக்கிறதே! நீங்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்" என்று லலிதா தன் கணவரைக் கேட்டுக் கொண்டாள்.




"நீ என்னைப் பற்றிப் பயப்படாதே லலி! நீதான் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். உன் பேச்சிலிருந்தோ, பார்வையிலிருந்தோ நீ கலவரப்பட்டுக் கொண்டிருக்கிறாய் என்று தெரியக் கூடாது. உதவிக்குப் போலீஸ்காரர்கள் வந்திருக்கிறார்களா என்று வண்டி வரும் சத்தத்தைக் கவனிப்பது போல் இருக்கக் கூடாது. அவர்கள் வந்து விட்டார்களா என்று ஜன்னல் பக்கம் போய்ப் பார்க்கக் கூடாது. நான் போலீஸ் சம்பந்தப்பட்டவன் என்று சந்தேகப்படும்படி ஒரு வார்த்தை கூட உன் வாயினின்றும் வரக் கூடாது...."

வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அதற்கு அடுத்த நிமிடம் படிகளில் ஒருவர் 'டக், டக்' என்று ஏறி வரும் பூட்ஸ் காலடிச் சத்தம் எழுந்தது. சிதம்பரம் வந்து விட்டான்.

"வாருங்கள்" என்று லலிதா மலர்ந்த புன்னகையுடன் அவனை வரவேற்றாள்.

சிதம்பரம் அவளை மேலும் கீழும் உற்றுப் பார்த்தான். "ஏய்! பஸ்ட் கிளாஸ் பெண்ணாகத்தான் பிடித்திருக்கிறாய்" என்றான். அவளிடம், "இவன், தான் கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தான். ஏன் அந்த விரதத்தை மீறினான் என்று தெரிகிறது" என்று கூறி அவளைப் புகழ்ந்தான்.

லலிதா இருவருக்கும் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். சமையலறைப் பக்கம் ஜன்னல் வழியாக வெளியே கவனித்தாள். போலீஸ்காரர் யாரும் வந்திருப்பது கண்ணில் படவில்லை. அவள் என்னதான் தைரியமாக இருக்க முயன்றாலும் தன் கணவனுக்கு என்ன ஆபத்து நேருமோ என்ற பீதி மேலோங்கிக் கொண்டிருந்தது. போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் செய்து கால் மணி நேரத்துக்கு மேலாகியும் அவர்கள் வருவதற்கான அறிகுறிகள் ஒன்றும் காணோம். சிதம்பரத்திடம் கட்டாயம் துப்பாக்கி இருக்கும்; அல்லது குத்துவாள் இருக்கும். தன் கணவனிடம் துப்பாக்கி இல்லை யென்றும் அதை முதல் தினம்தான் பழுது பார்க்க அனுப்பியிருந்தார் என்றும் அவளுக்குத் தெரியும். சிதம்பரம் அவர் மீது சந்தேகப்பட்டு அவரைத் தாக்கினால் என்ன செய்வதென்று திகிலடைந்தாள். பின்பக்க வழியாகக் கீழிறங்கிச் சென்று பக்கத்தில் இருந்த டெலிபோன் 'பூத்'துக்குப் போய்த் தோத்தாத்திரிக்கு டெலிபோன் செய்தாள்.

"நான் இப்போதுதான் வந்தேன். கிளம்பிக் கொண்டிருக்கிறேன். பத்தே நிமிஷத்தில் அங்கே வந்து விடுகிறோம்" என்றார் அவர்.

வீட்டுக்குள் தன் நண்பனுடன் பேசிக் கொண்டிருந்த சிதம்பரம், "இந்த வீடு எப்பொழுது கட்டினாய்?" என்று விசாரித்தான்.

"வீடாவது, கட்டவாவது! குடிதான் இருக்கிறேன்" என்றார் பாலகோபால். "இந்த வீட்டில் முன்பு குடியிருந்தவருடைய டெலிபோனை ரொம்பவும் சிபாரிசு செய்து தன் பேரில் அப்படியே எனக்கு மாற்றிக் கொடுத்து விட்டார்கள். இல்லாவிட்டால் சென்னைக்கு வந்த பத்து நாட்களுக்குள் டெலிபோன் எப்படிக் கிடைக்கும்? இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் எனக்கும் இந்த




உடல் வளைவுகளுக்கேற்றப்போல் அமுக்கப்பட்ட ஆசனமும், முதுகுச்சாய்மானமும் மகிழ்ச்சியூட்டும் வசதியை அளிக்கக்கூடிய உறுதியான எஃகு குழாயினால் செய்யப்பட்ட உலோகப் பாகங்களெல்லாம் வெட்டி பெருக்கும் முறையில் எனாமல் பூசப்பட்டுத் துருப்பிடிக்காமல் செய்யப்பட்ட நாற்காலியை வாங்குங்கள்.

## சிறந்த தரத்தில் அடுக்கடுக்காக

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பரைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் வாட்டி எனாமல் பூசப்பட்டது.
- ஆசனம் மற்றும் முதுகுச் சாய்மானத்தின் அமைப்பு அதிக வசதியை அளிக்கிறது.
- ஈரத் துணியைக்கொண்டே துடைத்து எளிதில் சுத்தமாக வைத்துக்கொள்ளலாம்.
- மடக்குவதற்கு விசேஷ அமைப்பு.
- வழுக்கிவிடாத, தரையைக் கீறாத, ரப்பர் அடிகள் கொண்டது.
- பல்வேறு வண்ணங்களில் கிடைக்கக்கூடியது.




ஆயிரம் காலம்
ஆள்வதற்கு



தயாரிப்போர்:
க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.
பி-35 இந்தியா எக்ஸ்சேன்ஜ் ப்ளேஸ், கல்கத்தா-1

வீட்டில் முன்பு குடியிருந்தவருக்கும் பெயர் ஒன்றுதான்: 'இனிஷிய'லில் மட்டும் வித்தியாசம் இருக்கிறது. ஆனால் அதெல்லாம் உனக்கு ஞாபகமிருந்திருக்காது. டெலிபோன் புத்தகத்தில் பெயரைப் பார்த்ததும் நானாக இருக்கலாமோ என்று சந்தேகித்து டெலிபோன் செய்தாய். அப்படித்தானே?''

''ஆமாம்!'' என்ற சிதம்பரம் படுக்கை அறைப் பக்கம் சென்று உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டே, ''நீ என்ன வேலையில் இருக்கிறாய்? அதைச் சொல்லவே யில்லையே!'' என்று விசாரித்தான்.

அப்போது அறைக்குள்ளிருந்த துணி வைக்கும் பீரோவின் கதவு காற்றில் திறந்துகொண்டது. அது பூட்டப்பட்டிருக்கவில்லை.

தன் வேலையைப் பற்றிய பேச்சு எழுந்தால் என்ன சொல்வது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த பாலகோபால் அவன் கேள்வி காதில் விழுந்ததும் திடுக்கிட்டார். ஆனால் அவன் கேட்டது காதில் விழாதது போல், ''லல்லி! தண்ணீர் கொண்டு வா!'' என்று கூறி விட்டுப் பேசாதிருந்தார்.

சிதம்பரம் ஹாலிலிருந்த ஜன்னல் பக்கம் சென்று, திரையைச் சற்று விலக்கி வெளியே கவனித்துப் பார்த்து விட்டு, நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டான். தன் கைத் துப்பாக்கியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டே, ''நீ ஒரு போலீஸ்காரன். அதை எனக்குச் சொல்லவில்லையே!'' என்று சிறிதும் கோபத்தைக் காண்பிக்காமல் நிதானமாகப் பாலகோபாலைக் கேட்டான்.




''போலீஸ்காரனா? யாரு சொன்னது?'' என்றார் பாலகோபால்.

''உன் பக்கம் எட்டிப் பார்த்த போது, பீரோக் கதவு காற்றில் திறந்து கொண்டது. உன் போலீஸ் உடை கண்ணில் பட்டது.''

'ஏதாவது வேலை பார்க்க வேண்டும் அல்லவா?''

''நீ அந்த வேலையில் இருப்பதில் எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை. ஆனால் இப்போது இந்த வீட்டின் தோட்டத்துக்கப்பால் இரண்டு போலீஸ்காரர்கள் துப்பாக்கியும் கையுமாக நின்று கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் யோசனை செய்ய வேண்டியிருக்கிறது'' என்று கூறித் துப்பாக்கியை மேசை மீது வைத்தான்.

''சிதம்பரம்! முதலில் நீ சென்னைக்கு வந்ததே தப்பு. நான் உன் நண்பன் என்று அதிகாரிகளுக்குத் தெரியும். நான் என் கடமையைச் செய்ய வேண்டுமல்லவா?''

''அது சரிதான். எத்தனை பேர்கள் வந்திருக்கிறார்கள், தெரியுமா?

''எனக்குத் தெரியாது. ஆனால் நீ பேசாமல் சரணடைந்து விடுவதுதான் சரி. அவர்களிடமிருந்து நீ தப்ப முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை.''







**வேலைக்காரன்:** என்னைத் திட்டுவதற்கு உங்களுக்கு வார்த்தையே அகப்படவில்லை என்றீர்களே. அதுக்குத்தான் ஒரு அகராதி வாங்கி வந்திருக்கிறேன்.

அப்பொழுது அங்கே வந்த லலிதா அவர்கள் பேச்சைக் கேட்டும், மேஜை மீது கைத் துப்பாக்கி யிருப்பதைக் கண்டும் உள்ளம் நடுங்கினாள். தான் பீதியுற்றிருப்பதை முகத்தில் காண்பித்துக் கொள்ளாதிருக்க முயற்சி செய்தாள்.

''என்னை மாட்டிக் கொள்ளும்படி செய்து விட்டீர்களல்லவா?'' என்று சிதம்பரம் அவளைக் கேட்டான்.

''அவர் ஒரு போலீஸ்காரர். தம் கடமையைச் செய்பவர். அதனால் இப்படி நேர்ந்து விட்டது'' என்றாள் லலிதா.

''நான் இதை விட்டுத் தப்பிச் சென்றாக வேண்டும். வெளியில் சென்றால் ஆபத்து. இங்கேயே இருந்தால் ஒன்றும் நேராது. அந்தப் போலீஸ்காரர்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தால் இத்தனை நாழி வந்திருப்பார்களே!''

பாலகோபால் தலையை அசைத்து வைத்தார்.

''ஆனால், நான் இங்கேயே இருந்து கொண்டிருக்கவும் முடியாதே'' என்று கூறிச் சிதம்பரம், லலிதாவை உற்றுக் கவனித்தான்.

''பாலகோபால் உன்னைத் தண்ணீர் கொண்டு வரச் சொன்னானே. அப்போது நீ வரவில்லை; பதிலும் சொல்லவில்லை. வெளியில் போயிருந்தாயாக்கும். போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் செய்யப் போனாய்! என் எதிரே இந்த டெலிபோனை உன்னால் உபயோகிக்க முடியவில்லை.''

லலிதா, 'ஆம்' என்று தலையை ஆட்டினாள்.

''நான் இதை விட்டுத் தப்பிச் செல்வதற்கு நீங்கள்தான் எனக்கு ஒரு வழி சொல்லியாக வேண்டும்.''

''நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. வெளியில் பலத்த ஏற்பாடுகள் செய்திருப்பார்கள்.''




''அப்படியானால் நான் ஒரு யோசனை சொல்கிறேன், பாலகோபால். பாவம், உன் மனைவியையும் இதில் இழுக்க வேண்டியிருக்கிறதே என்று பார்க்கிறேன். ஆனால் வேறு வழியில்லை....

''ஏனென்றால், அவன் இங்கே இருப்பதனால்தான் அவர்கள் உள்ளே நுழையத் தயங்கிக் கொண்டிருக்கிறார்கள். துப்பாக்கியால் சுடுகிறது என்று ஆரம்பித்தால் அவனுக்கும் ஆபத்து ஏற்படுமல்லவா? அவன் இருப்பதுதான் எனக்குப் பாதுகாப்பு. அவனை என்னோடுகூட அழைத்துச் செல்லப் போகிறேன். யாராவது என்னைத் தாக்க முயன்றால் அடுத்த கணம் அவனைச் சுட்டு விடுவேன்.''

சிதம்பரம் இவ்வாறு கூறி விட்டு, ''லலிதா! நீ என் மேல் வருத்தப் படக்கூடாது. என் நிலைமையிலிருந்தால் நீ இப்படித்தான் செய்வாய். என்னைப் போல் இவ்வளவு மரியாதையாகவும், ஆத்திரமின்றியும் உங்களால் பேசிக்கொண் டிருக்கக் கூட முடியாது'' என்றான்.

''அப்படிச் செய்வதால் உனக்கென்ன லாபம்! என்றாவது உன்னை எப்படியும் பிடித்துக்கொண்டு வருவார்கள்'' என்றார் பாலகோபால்.

''முயற்சி செய்து பார்க்கலாமே. ஒரு வேளை அவர்கள் ஒரு ஸ்திரீ இருக்கிறாளே என்று தயங்கலாம். அப்போது நான் தப்பித்துக்கொள்ள ஒரு சந்தர்ப்பம் ஏற்படும்.''

அவர்கள் இப்படி அமைதியாகப் பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கேட்டு வந்த லலிதாவுக்குத் தனக்கேற்பட விருக்கும் ஆபத்தைப் பற்றிப் பய உணர்ச்சியே இல்லாமற் போய் விட்டது.

''நாம் இங்கேயே இருக்கும் வரை அவர்கள் ஒன்றும் செய்ய மாட்டார்கள். இங்கேயே தங்கியிருந்துதான் பாருங்களேன்!'' என்றாள்.

''இல்லை. நீயும் நானும் சேர்ந்துதான் வெளியில் போக வேண்டும். போகப் போகிறோம்'' என்று சிதம்பரம் கூறி விட்டு, ''பாலகோபால்! இங்கே வந்திருப்பவர்களில் எத்தனை பேரை உனக்குத் தெரியும்?'' என்று விசாரித்தான்.

''நான் இந்த ஊருக்கு வந்து ஒரு வாரம் கூட ஆகவில்லை. சில பேரைத்தான் எனக்குத் தெரியும். அவர்களும் என்னை அதிகம் பார்த்ததில்லை.''

''நல்லதாகப் போயிற்று. உனக்குத் தெரிந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா, பார்த்துச் சொல்!'' என்றான் சிதம்பரம்.

பாலகோபால் சன்னல் பக்கம் சென்ற போது, சிதம்பரம் பின்னால் நின்று கொண்டு துப்பாக்கியைத் தயாராய்க் கையில் வைத்திருந்தான்.

பாலகோபால் திரைகளை நன்றாக விலக்கி வெளியே பார்த்து விட்டுத் திரும்பினார்.

''எனக்குத் தெரிந்தவர்கள் யாருமில்லை'' என்று கூறினார்.

''அப்படியானால் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நாமிரண்டு பேரும் ஒரே பருமன், ஒரே உயரம் உள்ளவர்கள். எத்தனையோ தரம் ஒருவர் உடையை இன்னொருவர் போட்டுக் கொண்டிருக்கிறோம். உன்

போலீஸ் உடையை எடுத்துக்கொண்டு வந்து கொடு!'' என்றான் சிதம்பரம்.

பாலகோபால் அப்படியே செய்தார். சிதம்பரம் அந்த உடைகளைத் தரித்துக் கொண்டான். பிறகு ''லலிதா! நீ முன்னால் போ, நான் உன் பின்னாலேயே வந்துகொண்டிருப்பேன். நான் தப்பி வெகு தூரத்துக்கு அப்பால் சென்றுவிடும்வரை நீ அவசரப்பட்டுக்கொண்டு உன் நண்பர்களைக் கூப்பிட்டுவிடாதே. உன் மீதுதான் முதலில் என் துப்பாக்கிக் குண்டு பாயும். நீ அடிக்கடி சிரித்துக் கொண்டும் என்னுடன் ஏதாவது பேசிக் கொண்டும் வரவேண்டும்'' என்று லலிதா நடந்து கொள்ள வேண்டிய விதத்தைப் பற்றிக் கூறினான்.

''அவளுக்கு ஆபத்து ஏற்படாமல் பார்த்துக்கொள்'' என்றார் பாலகோபால்.

''எல்லாம் எனக்குத் தெரியும்'' என்று பதில் வந்தது.

''கவலைப்படாதிர்கள்; சரியாய்ப் போய் விடும்!'' என்று லலிதா கூறித் தன் கணவனைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள்.

''நல்லவேளை உன்னிடம் துப்பாக்கி இல்லை போலிருக்கிறது. இருந்தால் இப்படி நான் போகும்படி விட்டு விடுவாயா? நாங்கள் வருகிறோம்!'' என்று சிதம்பரம் ஏளனச் சிரிப்புடன் கூறிவிட்டுக் கிளம்பினான்.

பலி கொடுக்கப்படும் ஆடு போல் லலிதா அவன் முன்னால் சென்றாள். இருவரும் மாடியின் பின் பக்கமுள்ள படிகள் வழியாகக் கீழிறங்கிப் போனார்கள்.

இரண்டு மூன்று நிமிடங்கள் ஆகியிருக்கும். பாலகோபாலுக்கு யுகங்களாகத் தோன்றின அந்த நிமிடங்கள். வீட்டுக்கு வெளியே அடிதடி சத்தமும், கூச்சல் சத்தமும் கேட்டன. பாலகோபால் கீழே ஓடிச் சென்றார்.

லலிதா தன் கணவனை அணைத்துக் கொண்டு கண்ணீருகுத்தாள். அங்கே மற்றவர்கள் இருப்பது அப்போது படவில்லை. அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தர்களும் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தனர்.

மண்டையில் பலமாக அடிபட்டதனால் சிதம்பரம் மூர்ச்சித்துப் போயிருந்தான். விலங்கு மாட்டி, அவனைப் போலீஸ் வானில் தூக்கிப் போட்டுக்கொண்டு சென்றனர்.

ஃ ஃ ஃ

''நீ எப்படி அம்மா அவ்வளவு தைரியமாய் நிதானமாய் அந்தக் கொலைகாரனோடு வெளியே வந்தாய்?'' என்று தோத்தாத்திரி லலிதாவைக் கேட்டார். அவர் பால கோபாலின் வீட்டுக்குள் வந்திருந்தார்.

''அவர் எப்படியும் என்னைக் காப்பாற்றாமல் விடமாட்டார் என்ற நம்பிக்கைதான். அவசியமாயிருந்தால் அவன் துப்பாக்கி வைத்திருப்பதையும் லட்சியம் செய்யாமல் அவனைத் தாக்கி விருப்பார்'' என்றாள் லலிதா.

''நீங்கள் அவளை எப்படி அவனுடன் அனுப்பத் துணிந்தீர்கள்?'' என்று தோத்தாத்திரி பாலகோபாலைக் கேட்டார்.



'' நம் ஆபீஸ் ரிக்ரியேஷன் கிளப் செக்ரடரியாக இந்தத் தடவை நீங்கள்தான் வர வேண்டு மென்கிறீர்களே! அப்படி என்ன திடீரென்று உமக்கு ஆசை ?''

'' எனக்கும் ராஜினுமா பண்ண வேண்டும் போல ஆசையாக இருக்கு !''

---

''நான் ஒரு போலீஸ்காரன் என்பது சிதம்பரத்துக்குத் தெரியாது. அதை வைத்துக்கொண்டுதானே நான் உங்களுக்கு டெலிபோன் செய்தது. ஆனால் அவன் தற்செயலாக நான் போலீஸ்காரன் என்பதைக் கண்டு கொண்டு விட்டான். ஆனால், இந்த விஷயம் உங்களுக்குத் தெரியாது. நான் ஜன்னல் திரையை விலக்கிக்கொண்டு உங்களைப் பார்த்தபோது நான் இப்போது அணிந்திருக்கும் இதே உடையுடன்தான் இருந்தேன். அதையும் நீங்கள் கவனித்திருப்பீர்கள். அவனெதிரில் போலீஸ் உடையை மாட்டிக் கொண்டு வெளியே வருவேன் என்று நீங்கள் நினைக்கவே மாட்டீர்கள்.. ஆகையினால், அவன் என்னைத் தாக்கிவிட்டு என் உடைகளை எடுத்துப் போட்டுக்கொண்டு தப்பிச் செல்ல வருகிறான் என்று சந்தேகப்பட்டிருப்பீர்கள். மிஸ்டர் தோத்தாத்திரி! நீங்கள் இந்த முறையில்தான் சிந்தித்துப் பார்த்துக் காரியங்கள் செய்வீர்களென்ற நம்பிக்கை எனக்கு உண்டு'' என்றார் பாலகோபால்.

தோத்தாத்திரி கூறினார் : '' நீங்களும் நானும் ஒருவரையொருவர் புகழ்ந்து கொள்ள வேண்டியதில்லை. மிஸஸ் லலிதா அவ்வளவு நிதானமாகவும் கலவரமில்லாமலும், தைரியமாகவும் நடந்து கொண்டிரா விட்டால் நாம் ஒன்றுமே செய்திருக்க முடியாது. அவள்தான் சரியான போலீஸ்காரர் மனைவி!''




---

அடுத்த இதழில்: '' நெஞ்சு பொறுக்குதில்லை'' — குமரன் எழுதும் மர்மக்கதை

# அண்ணாவுடன் இரண்டு நாள்

ஸ்தல யாத்திரைக்கும், தீர்த்த யாத்திரைக்கும் செல்லுபவர்கள் தங்களுடைய ஆன்ம சுத்திக்காகச் செல்லுவார்கள். ஆனால் காந்தி மகான் மனித குலம் அழிவுப் பாதையை நோக்கிச் செல்லுவதைத் தடுக்க, பாவச் செயல்களின் மாசைத் துடைக்க மேற்கொண்ட யாத்திரை, நவகாளி யாத்திரை. மனிதர்கள் அரக்கர்களாக மாறி, வகுப்பு மாத்சரியம் என்னும் வெறியினால் சொல்லவும் நினைக்கவும் கூசும் கோரக் கிருத்தியங்களைப் புரியத் தொடங்கியபோது அதைத் தடுத்துநிறுத்த மகாத்மா மேற்கொண்ட அன்பு யாத்திரை அது.

அந்தப் புனித யாத்திரையை நேரில் காணப் பல பத்திரிகை நிருபர்கள் உடன் சென்றனர். ''கல்கி'' பத்திரிகையின் சார்பில் ''சாவி'' நவகாளிக்குப் போனார்.

நவகாளி யாத்திரையைப் பற்றிச் சுவாரஸ்யமாக என்னத்தை எழுதிவிட முடியும்? உருக்கமாக வேண்டுமானால் எழுதலாம் என்றுதான் யாரும் நினைப்பார்கள். ஆனால் ''சாவி''யின் பிரயாணக் கட்டுரை எழுதும் திறன் தனிப்பட்டது. அதை அறிந்தவர்கள் அவ்விதம் நினைக்க மாட்டார்கள்.




இத்தனைக்கும் ''சாவி'' நவகாளி முழுவதும் காந்தி மகாத்மாவுடன் பிரயாணம் செய்யவில்லை. இரண்டு தினங்கள்தான் காந்திஜியுடன் இருந்தார். ஆனால் யாத்திரை முழுவதையும் அற்புதமாக விளக்கி விட்டார்.

''நவகாளி யாத்திரை'' நூலுக்குப் பேராசிரியர் ''கல்கி'' அவர்கள் எழுதியிருக்கும் முன்னுரையில் இதைப் பற்றி வெகு ரஸமாகக் குறிப்பிட்டிருக்கிறார் :

''வீட்டுக்குள்ளே இருந்து ஒரு பலகணி வழியாகப் பார்த்தால், அந்தப் பலகணி வழி அளவுதான் வெளியே தெரியும் என்பது கிடையாது; சின்னப் பலகணியின் வழியே வெகு தூரம் பார்க்கலாம்.

''அதுபோலவே 'சாவி' இரண்டு தினங்களே காந்திஜியுடன் இருந்தபோதிலும் பலகணி வழியாகப் பார்ப்பது போல் பார்த்து மகாத்மாவின் நவகாளி யாத்திரை முழுவதையுமே கண்ணோட்டம் விட்டு எழுதியிருக்கிறார். அவர் வெகு ரஸமாகவும் எழுதியிருக்கிறார்.'',

இந் நூலில் 'சாவி' காந்திஜியின் நவகாளி யாத்திரையைப் பற்றி மாத்திரம் எழுதவில்லை. காந்தி மகாத்மா—சென்னைக்கு வந்து சில நாட்கள் தங்கி யிருந்தபோது ஹிந்திப் பிரசார சபையின் வெள்ளி விழா வைபவம் நடந்தது. அப்போது சென்னை மாம்பலத்தில் மகாமகக் கூட்டம் கூடியிருந்தது. மகாத்மா அங்கு தங்கியிருந்ததுதான் காரணம். அப்பொழுது நடந்த சுவையான நிகழ்ச்சிகளைச் 'சாவி' சுவாரஸ்யமாகத் தந்திருக்கிறார். பிறகு மகாத்மாவுடன் மதுரை, பழனி முதலிய ஊர்களுக்குச் சென்று அந்தப் பிரயாணத்தைப் பற்றியும் எழுதியிருக்கிறார்.

'சாவி'யின் எழுத்தில் கலந்து நிற்கும் நகைச்சுவை, புத்தகத்தைப் படிப்பதற்கு இணையற்ற தூண்டுகோலாக உதவுகிறது. உதாரணமாகக் கீழே காணும் வரிகளைப் படியுங்கள்:

''மகாத்மாஜியின் விஜயத்தினால் மாம்பலம் சில தினங்களாகத் தேர்த் திருவிழா பட்ட பாடாயிருந்து கொண்டிருக்கிறது. காப்பி ஹோட்டல்களில் கொடுக்கப்படும் காப்பியிலிருந்தே மாம்பலத்தில் கூடும் அன்றாடக் கூட்டத்தின் கணக்கைச் சுலபமாக அறிந்து விடலாம்.

காப்பி கறுப்பு வர்ணமா? சரி, ஐம்பதினாயிரம் பேர்! கொஞ்சம் தண்ணீர் கலந்து வெண்மை நிறமா? எழுபத்தையாயிரம் பேர்! நீர் நிறைந்த வெறும் திரவ பதார்த்தமா? சரி, லட்சம் பேர்! இப்படியே கணக்கிட்டுவிடலாம்.''

காந்தி மகானைத் தாம் சந்தித்ததையும், அப்பொழுது நடந்த சுவையான நிகழ்ச்சிகளையும் மற்றும் பல நிகழ்ச்சிகளையும் உருக்கமாகவும் சுருக்கமாகவும் எழுதியிருக்கிறார் சாவி.

பக்கத்துக்குப் பக்கம் ''கோபுலு''வின் அழகான சித்திரங்கள் காணப்படுகின்றன. எளிமையாகத் தோன்றினாலும் எடுப்பாக அமைந்திருக்கின்றன. உயர்ந்த காகிதத்தில் நூலை வெளியிட்டவர்கள் குறைந்த விலைக்குக் கொடுத்திருப்பதைப் பாராட்ட வேண்டும்.

பிரசுரம்: மங்கள நூலகம், சென்னை—34; விலை ரூ. 1.50.



## படித்துப் பாருங்கள்

# கவர்ச்சி மிக்க பின்னி துணி அணிந்து



குழந்தைகளுக்கு, வண்ணமிக்க பியஸ்டா



ட்ரிப்-டிரை ஸ்பயர்—
உல்லாசமாய் அணிய உகந்தது

ஒவ்வொரு ஆண்டும் பின்னி ஸ்தாபனத்தைச் சேர்ந்த மில்கள் 8½ கோடி மீட்டருக்கு மேல் தயாரித்து விற்பனை செய்யும் துணி ரகங்கள்:

| | |
|---|---|
| பருத்தி சூட்டிங்குகள் | சேபேர், காஸ்கார், கிராண்டெல்லா, ஸிம்பனி, கோல்ட் ஸ்டாண்டர்ட், கொரோலின், மொஹோலின், ஸிநூ செல்லா |
| பருத்தி ஷர்ட்டிங்குகள் | காஸ்லைக், டீபெர்ட்டின் டிரில், பொப்லெஸ்டா, மீடியம் மற்றும் ஸைன் டஸ்ஸாக்கள் |
| சாகசாதத்தனமை ரகத்தில் பெண்கள் உடைகள் மற்றும் ஷர்ட்டிங் | பியஸ்டா, ஹாஜ்லா, லெவிபரிடி |
| 'பக்கிள்' ட்ரிப்-ட்ரை துணிகள் | ஸ்பயர், ஸ்பாரி |
| கம்பளி-பருத்தி கலந்த துணிகள் | காட்ஸ்வைல், அங்கோரா |
| 'டெரிலின்' பருத்தி கலந்த துணிகள் | ஷர்ட்டிங் |
| 'டெரிலின்' கம்பளி கலந்த துணிகள் | வாசரிடி சூட்டிங் |
| ரேயான்-பருத்தி கலந்த துணிகள் | ஆர்ட்லின், பெடிகிரி ஷர்ட்டிங்குகள் |
| தூய பட்டுகள் | ஜார்ஜெட், ஷிப்பான், மென்பட்டு புடவைகள், ஷர்ட்டிங்குகள், வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள் |
| வீட்டில் உபயோகப்படும் துணிகள் | பெட்ஷீட்கள், டெர்ரி டவல்கள், 'ஹக்கபாக்' டவல்கள், சர்விபெட்டுகள் |
| பல உபயோகங்களுக்கான துணிகள் | டிரில்களில் வெளுத்தது, சாயம் தோய்த்தது மற்றும் காக்கி ரகங்கள், செல்லுலர் மற்றும் டாபி ஷர்ட்டிங், கேன்வென்ட் துணி, கேபிள் காட், பெட்போர்ட் காட், நூல் லாங்கிளாத், H7 போர்வைகள், கான்வாஸ் |
| பின்டெக்ஸ் கைத்தறித் துணிகள் | ஷர்ட்டிங்குகள், புடவைகள், லுங்கிகள், ஸ்பன் ஸில்க், டவல்கள், படுக்கை விரிப்புகள், திரைகளுக்கும் பர்னிச்சர் உறைகளுக்குமான துணிகள், நாப்கின், கேன்வென்ட் துணி முதலியன |

## பின்னி




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளையும், பின்டெக்ஸ் கைநெசவுத் துணிகளையும் இந்த அடையாளம் காணும் அனுமதி பெற்ற விற்பனையாளரிடமிருந்தே வாங்குங்கள்.



## நாற்பத்திரண்டாவது அத்தியாயம்

சத்தியமூர்த்தி திகைத்துப்போனான். மோகினியின் 'ஸ்பெஷல் வார்டில்' இருந்த அந்த நர்ஸ் எங்காவது தென்பட்டால் அவளையாவது விசாரிக்கலாமென்று பார்த்தால் அவளையும் அங்கே காண முடியவில்லை. வேறு வார்டுக்காவது, வேறு அறைக்காவது அவள் மாறியிருக்கவாமோ என்ற சந்தேகமும் அப்போது அவனுக்கு ஏற்பட்டது. எதற்கும் பக்கத்தில் யாரையாவது விசாரிக்கலாம் என்று அங்கே விசாரித்ததில் மோகினியை 'டிஸ்சார்ஜ்' செய்து வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் விட்டதாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. ஏமாற்றத்தோடு அந்தப் பூவை—அவளுக்காக வாங்கிய மல்லிகைப் பூவை எப்படியும் அவளிடம் சேர்த்து விட வேண்டுமென்ற ஆவலோடு சங்கீத விநாயகர் கோயில் தெருவுக்குத் திரும்பிப் போனான் அவன். அங்கேயும் அவளுடைய வீடு பூட்டியிருந்தது. பூட்டிக் கிடந்த வீட்டைப் பார்த்து அவன் அப்படியே மலைத்துப் போய் நின்று விட்டான். பக்கத்து வீட்டுப் பையனை விசாரித்ததில் காலையில் ஜமீன்தாருடைய கார் வந்து அந்த வீட்டில் இருந்த தம்புரா, வீணை முதலிய வாத்தியங்களையெல்லாம் ஒழித்து எடுத்துக்கொண்டு போனது மட்டும் தனக்குத் தெரியும் என்று பையன் சொன்னான். சத்தியமூர்த்தி, உடலும், மனமும் சோர்ந்து வீடு திரும்பினான். அப்போது அவன் இதயத்தைப் போலவே கையில் அவளுக்காகக் கொண்டு போய் இருந்த அந்த மல்லிகைப் பூவும் வாடியிருந்தது.




'அந்த வீட்டில் இருந்த மங்கலமான வாத்தியங்களையெல்லாம் அங்கிருந்து ஒழித்து எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்! ஆம்! அவனுக்கு - அவன் வாசிப்பதற்காகச் சமர்ப்பிக்கப்பட்ட பரிசுத்தமான வாத்தியத்தையும் சேர்த்துத்தான்! நினைக்கவும் வேதனை தருவதாக இருந்தது அந்த உண்மை! 'ஹெர் லைஃப் இஸ் எ ரிவால்விங் ட்ரீம்'—(அவளுடைய வாழ்க்கை மேலும் மேலும் சுழன்று வளரும் ஒரு கனவாயிருக்கிறது) என்று கவிக் குயில் சரோஜினி நாயுடு பாடியிருக்கிற ஆங்கிலப் பாடல் வரி ஒன்றை நினைவு கூர்ந்தான் சத்திய மூர்த்தி. 'ஸாரோ லுக்ஸ் இன்டு ஹெர் ஃபேஸ்' (சொல்லிலடங்காத சோகங்கள் அவள் முகத்தில் தென்படுகின்றன) என்று அதே பாடலில் வருகிற இன்னொரு வாக்கியத்தையும் மோகினியைப் பற்றி நினைக்கும்போது அவளோடு சேர்த்து நினைக்காமல் இருக்க முடியவில்லை. அவனுடைய எல்லா விதமான அவநம்பிக்கைகளுக்கும் நடுவே அவள் மட்டும் ஒரு நிச்சயமாகியிருந்தாள். ஆனால் அவள் வாழ்கிற சூழ்நிலையோ எந்த விதத்திலும் நிச்சயமில்லாமல் இருந்தது. மனம் ஒப்பி—மறுக்காமல்—தவிர்க்காமல் அவள் ஜமீன்தாருடைய வீட்டுக்குப் போய்விட்டாள்—என்பதை நினைக்கவும் — பொறுத்துக் கொள்ளவும் நம்பவும் முடியாமல்—தவித்தான் அவன். அவள்மேல் கோபப்படுவதா —பரிதாபப்படுவதா — என்று நினைத்து நெடுநேரம் ஒரு முடிவும் கிடைக்காமல் மனம் குழம்பினான். அவள் மேல் எந்தக் காரணத்துக்காகக் கோபித்துக் கொள்ளத் தொடங்கினாலும் கூட அந்தக் கோபம் தானாகவே தளர்ந்து நெகிழ்ந்துவெறும் பரிதாபத்திலோ, அநுதாபத்திலோ போய் முடிந்தது.

'அவள் என்ன செய்வாள்? பாவம்! பேதைப்

பெண். ஜமீன்தாரையும், கண்ணுயிரத்தையும் அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் என்னைப் போலவோ, குமரப்பனைப் போலவோ அவர்களை வெளிப்படையாக வெறுக்கவோ பகைத்துக் கொள்ளவோ அவளுக்கு வலிமை இல்லை. அது அவளுடைய குற்றமாகாது' என்று நினைத்து அவன் மன அமைதி பெற முயன்றாலும் முடியவில்லை. 'பூபதியைச் சந்திப்பதற்காக மஞ்சள்பட்டி ஜமீன்தாருடைய மாளிகைக்குச் சென்றபோதே அங்கு கால்கள் பொருந்தாமல் நின்றேன் நான். பூபதி எனக்கு எழுதியிருந்த கடிதத்தில் 'வைகைக்கரை மாளிகை' - என்ற பொருளில் 'ரிவர்காஸில்' - கோச்சடை - மதுரை என்று மட்டுமே மதுரையில் தாம் தங்கப் போகிற இடத்து முகவரி கொடுத்திருந்தார். அதுதான் ஜமீன் மாளிகை என்று தெரிந்திருந்தால் ஒருவேளை நான் போயே இருக்க மாட்டேன். இப்போது மோகினியைச் சந்திப்பதற்காக இன்னொரு முறையும் அங்கே எப்படிப் போவேன்?' என்று தயங்கியது அவன் உள்ளம்.

முதல் நாள் பகலில் தன்னைத் தேடி வந்திருந்த நண்பர்களில் ஒருவன் இன்று பகல் உணவிற்குத் தன்னை அவன் வீட்டுக்கு அழைத்து விட்டுப் போயிருந்தது இப்போது சத்தியமூர்த்திக்கு ஞாபகம் வந்தது. நண்பனுடைய வீட்டுக்குச் சாப்பிடப் போவதா — வேண்டாமா என்று நீண்ட நேரம் மனம் குழம்பி ஒரு முடிவுக்கும் வராமல் இருந்த பின் — கடைசியாகப் போவது என்று முடிவு செய்தான். அந்த நண்பனுடைய வீடு— நன்மை தருவார் கோயில் தெருவில் இருந்தது. அங்கே போய்ப் பகல் உணவை முடித்துக் கொண்டு நண்பனோடு சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு அப்படியே கோச்சடைக்குப் போய் ஜமீன்தார் மாளிகையில் மோகினியைச் சந்திக்கலாம் என்று எண்ணிக் கொண்டு புறப்பட்டிருந்தான் சத்தியமூர்த்தி.

அந்த நண்பனுக்கு — வாசலில்



திரைப்பட இசை கேட்பதென்றால் உயிர். பக்கத்தில் நான்கு வீடுகளுக்குக் கேட்கிற மாதிரி ஒசை வைத்து அவனும் அவனுடைய தங்கையுமாக வானொலி இசை வெள்ளத்தில் மெய்ம் மறந்து மூழ்கியிருந்த போது சத்தியமூர்த்தி உள்ளே நுழைந்தான். எங்கே சத்திய மூர்த்தி சாப்பிட வராமல் ஏமாற்றி விடுவானோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த அவர்களுக்கு அவனைப் பார்த்ததும்தான் நிம்மதி பிறந்தது.

''இன்றைக்கு மட்டும் உன்னுடைய கொள்கைகளை எல்லாம் மூட்டை கட்டி வைத்து விடு! நீ நம் வீட்டில் கண்டிப்பாக இன்று பாயசம் சாப்பிட்டாக வேண்டும் சத்தியம்! மாட்டேனென்று பிடிவாதம் பிடித்தால் சும்மா விடமாட்டேன். இன்று என்னுடைய பிறந்த நாள்'' என்று நண்பன் வற்புறுத்திய போது, ''இலை போடுவதற்கு முன்பே சொல்லி விடுகிறேன். நிச்சயமாக நான் பாயசம் சாப்பிட முடியாது'' என்று மறுத்தான் சத்தியமூர்த்தி. ஒரு மணிக்கு மேல் இலை போட்டுப் பரிமாறிச் சத்திய மூர்த்தியும், நண்பனும், அவனுடைய தங்கையும் சாப்பிட உட்கார்ந்தார்கள். இலையில் உட்காருவதற்கு முன் வானொலியை இலங்கையிலிருந்து பகல் நேரத்துச் செய்தி கேட்பதற்காகத் திருச்சிக்கு மாற்றி விட்டு உட்கார்ந்தான் நண்பன்.

**பொன் விலங்கு**

'செய்கிற பாவங்களுக்காகச் சில சமயங்களில் சிலர் மன்னிக்கப்படுகிறார்கள். செய்யாத புண்ணியங்களுக்காகவும் சில வேளைகளில் சிலர் மன்னிக்கப்படுகிறார்கள். சிலர் எதற்காகவும் எப்போதுமே நிச்சயமாக மன்னிக்கப்படுவதில்லை'

வானொலியில் பகல் நேரத்துச் செய்திகள் சொல்லப்பட்டுக் கொண்டிருந்த போது அவர்கள் சாப்பிடத் தொடங்கியிருந்தார்கள். பாதிச் சாப்பாட்டின் போது அவர்கள் கவனத்தை இழுத்து எதிர்பாராத அதிர்ச்சியளிப்பதாக அந்தத் துயரச் செய்தி வானொலியிலிருந்து ஒலித்தது.

''நேற்றிரவு சென்னையிலிருந்து புறப்பட்ட இந்தியன் ஏர் லைன்ஸ் வைகவுண்ட் விமானம் நாகபுரியிலிருந்து டில்லிக்குச் செல்லும் போது இயந்திரக் கோளாறு காரணமாக விபத்துக்குள்ளாகியதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. பதினைந்து பிரயாணிகளும், ஐந்து விமான ஊழியர்களும் இந்த விமான விபத்தில் மாண்டு போனார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். நீங்கள் கேட்பது அகில இந்திய ரேடியோவின் செய்தி அறிக்கை.''—திடீரென்று இருந்தாற் போலிருந்து இடி விழுந்த மாதிரி ஒலித்தது இந்தச் செய்தி.

நடுச் சாப்பாட்டில் வானொலிச் செய்தியைக் கேட்டுச் சத்தியமூர்த்தி அப்படியே அதிர்ந்து போய்ச் சிலையாய் அமர்ந்து விட்டான். பூபதி மதுரையிலிருந்து சென்னைக்குப் புறப்பட்ட நேரம், சென்னையிலிருந்து டில்லிக்குப் புறப்படும் இரவு விமானத்தின் நேரம் எல்லாவற்றையும் கவனக் குறைவின்றி நன்றாக நினைவுபடுத்திக் கொண்டு சிந்தித்தும் அதே இரவு விமானத்தில் அவர் டில்லிக்குப் போகாமல் தவற விட்டிருக்க முடியும் என்பதற்கு ஒரு நிரூபணமும் கிடைக்கவில்லை. 'அந்த விமானத்தில் அவர் போகாமல் இருந்திருக்கக் கூடாதா' என்று அவன் இதயம் நினைத்து நினைத்துப் பரிதாபப் பட்டது. சிந்திக்கச் சிந்திக்க அந்த விமானத்திலேயே அவர் போய் இருக்கக் கூடும் என்பதற்குத்தான் அதிக நிரூபணங்கள் கிடைத்தனவே தவிர அவர் அதில் போகாமல் தவற விட்டிருக்கக் கூடும் என்பதற்கு ஒரு நிரூபணமும் கிடைக்கவில்லை. மேலே ஒன்றும் ஓடாமல் பாதிச் சாப்பாட்டிலேயே எழுந்து கைகழுவி விட்டான் அவன். என்ன நடந்திருக்கிறது என்பதை ஒரு சில கேள்விகளின் மூலமே நண்பனால் அப்போது சத்தியமூர்த்தியிடமிருந்து புரிந்து கொள்ள முடிந்தது. சத்திய மூர்த்திக்கோ வார்த்தைகளால் சொல்ல முடியாத அவ்வளவு வேதனையோடு நெஞ்சம் பதறித் துடித்தது. 'மனித வாழ்க்கை எவ்வளவுக்குப் பாதுகாப்பில்லாததாகவும் அபாயங்கள் நிறைந்ததாகவும் இருக்கிறது?' என்று எண்ணி எண்ணி நெக்குருகினான் அவன்.

விபத்தைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்காக மேலமாசி வீதியிலிருந்த பெரிய ஓட்டல் ஒன்றில் நுழைந்து விமானத் துறை அலுவலகத்துக்கும் பத்திரிகை அலுவலகங்களுக்கும் டெலிபோன் செய்து விசாரித்தான் சத்திய மூர்த்தியின் நண்பன். சத்தியமூர்த்தியும் அப்போது உடன் இருந்தான். விபத்துக்கு ஆளானவர்களின் பெயர்ப் பட்டியலில் 'மல்லிகைப்

உங்கள்
அலுவல்களை
அஜீரணம்
பாதிக்கிறதா?

# ஹ்யூலெட்ஸ் மிக்சர்

## அஜீரணத்தை விரைவில் அகற்றுகிறது




கட்டிப்போட்டாற்போல், ஒரே இடத்தில் அமர்ந்த வாறே உங்கள் அலுவல்களைக் கவனிக்க வேண்டி யிருக்கிறது. ஏனெனில் உங்கள் வேலை அப்படி யானது. இக்காரணத்தினால் உங்களைப் போன்ற வர்கள் அடிக்கடி அஜீரணத்தினால் அவஸ்தைப்பட நேரிடுகிறது. ஆனால் நீங்கள் அவ்வாறு கஷ்டப்படத் தேவையில்லை. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபா தையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக் கிறது; வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற் கேற்ப பாதுகாப்பளிக்கிறது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட உத்தமமானது. வயிற்றுப் போக்குக்கு அபினி சேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது**

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86/A, நைனியப்ப நாயக் தெரு, மதராஸ்-3

JWT/CJH-1928



இம்மாதம் பதின்மூன்றும் தேதியன்று சென்னை கோடம்பாக்கத்தில் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் மகாநாட்டில் மத்திய அரசினரின் ஆட்சி மொழிக் கொள்கையைக் கண்டித்துத் தலைவர்கள் பேசினார்கள். ஆட்சி மொழி விஷயத்தில் மாநில சர்க்கார் மத்திய அரசினருக்கு வளைந்து கொடுக்காமல் தமிழர்களின் உண்மை அபிப்பிராயங்களைப் பிரதிபலிக்கும் வகையில் உறுதியாக நிற்க வேண்டும் என்று கோரினார்கள். பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்த இந்தக் கூட்டத்தில் தி.மு.க தலைவர்கள் தாங்கள் மேற்கொள்ளவிருக்கும் நேரடி நடவடிக்கைகள் தி. மு. க. கட்சியைப் பிரபலப்படுத்துவதற்காக அல்ல வென்றும்; ஆங்கிலத்தை ஒதுக்கி, ஹிந்தியைப் பெருவாரியான மக்களுடைய விருப்பத்துக்கு மாறாக ஆட்சி மொழியாகத் திணிப்பதை எதிர்ப்பதற்காகவே என்றும் தெளிவு படுத்தினர்.

---

பந்தல் இண்டஸ்ட்ரியலிஸ்ட் பூபதி' என்ற பெயரும் இருக்கிறது என்பதைத் தெளிவாகவும் வருத்தத்தோடும் விமானத் துறை அலுவலகத்திலிருந்து அறிவித்தார்கள். மாலைப் பத்திரிகையில் எல்லா விவரங்களும் வெளி வந்து விடும் என்று பத்திரிகை அலுவலகத்தில் தெரிவித்தார்கள். முந்திய தினம் இரவு இரண்டரை மணி சுமாருக்கு விபத்து நடந்தது என்றும் விடிந்ததும் ஐந்து ஐந்தரை மணிக்குள் சம்பந்தப்பட்டவர்கள் எல்லாருக்கும் டெலிபோனில் தகவல் தெரிவித்து விட்டோம் என்றும் விமானத் துறை அலுவலகத்திலிருந்து தெரிவித்தார்கள். டெலிபோன் டைரக்டரியில் மஞ்சள்பட்டி ஜமீன்தாருடைய பங்களாவின் தொலைபேசி எண்ணைத் தேடிக் கண்டுபிடித்து விசாரிக்க எண்ணினான் சத்தியமூர்த்தி. ஆனால் அந்த முயற்சியும் பயன்படவில்லை. அந்த எண்ணில் யாருமே டெலிபோனை எடுக்கவே இல்லை. நீண்ட நேரமாக மணி அடித்துக் கொண்டேதான் இருந்தது. நேரில் அங்கேயே போய்விடலாம் என்ற தீர்மானத்துக்கு வந்தவனாகச் சத்தியமூர்த்தி டெலிபோனை வைத்து விட்டான். அவன் மனம் ஒரு நிலை கொள்ளாமல் பரபரப்பு அடைந்திருந்தது.

''இந்த நூற்றுண்டில் கார் விபத்துக்களும், விமான விபத்துக்களும், இரயில் விபத்துக்களுமே முக்கால் பங்கு மனிதர்களைக் கொன்றுவிடும் போலிருக்கிறது சத்தியம்! ஏதோ விஜயதசமியன்று பத்மஸ்ரீ விருது வாங்குவதற்காக டில்லிக்குப் போகிருர் என்று உங்கள் கல்லூரி அதிபர் பூபதியைப்பற்றிப் பத்திரிகைகளில் எல்லாம் பிரமாதமாக வந்திருந்ததே? என்ன பரிதாபம்! இப்படி ஒரு பெருமையும் கிடைத்து, அதை அடைவதற்குள்ளேயே சாகிற மனிதன் எவ்வளவு பெரிய துர்ப்பாக்கியமுள்ளவனுக இருக்க வேண்டும்'' என்று நண்பன் வருத்தப்பட்டுக்கொண்டே உடன் வந்தான். நண்பனை அப்புறம் சந்திப்பதாகச் சொல்லி அவனுக்கு விடை கொடுத்து அனுப்பிய பின் ஒரு சைக்கிள் ரிக்ஷா வாடகைக்குப் பேசிக்கொண்டு மஞ்சள்பட்டி பங்களாவுக்கு விரைந்தான் அவன். பூபதியின் மகள் பாரதியும் முதலில் இதே விமானத்தில் அவரோடு கூட டில்லிக்குச் செல்வதற்கு இருந்ததும் அப்புறம் கடைசி விநாடியில் தன் பயணத்தை நிறுத்தி விட்டதையும் ரிக்ஷாவில் போய்க் கொண்டிருந்த போது சத்தியமூர்த்தி நினைத்தான். அவரை மரணத்தின் பாதையில் இழுத்துக்கொண்டு போன அதே விதி அவருடைய மகளை மிகவும் நல்லெண்ணத்தோடு கடைசி விநாடியில் அந்தப் பாதையிலிருந்து திருப்பி அழைத்துக் கொண்டு வந்துவிட்ட விந்தையை அவன் மனம் வியந்தது. இரயில்வே மேற்பாலத்தின் ஏற்றத்தில் கீழே இறங்கி ரிக்ஷாவைக் கையில் தள்ளிக்கொண்டு போகத் தொடங்கியிருந்தான் ரிக்ஷாக்காரன். ரிக்ஷா மிக மிக மெல்ல நகர்ந்தது. அப்போதிருந்த பரபரப்பான மன நிலையில் அந்த வேகக் குறைவைக் கூடச் சத்தியமூர்த்தியால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. பூபதியைத் தான் மதுரை விமான நிலையத்தில் கடைசியாகப் பார்த்த கோலத்தை நினைவு கூர்ந்தான் அவன்:

''என்னம்மா?.... நான் வரட்டுமா? கடைசிப் படி ஏறுவதற்குள் மறுபடி நானும் உங்களோடு 'டில்லிக்கு வருவேன்' என்று மாறிவிட மாட்டாயே? நிச்சயமாக நீ வரவில்லைதானே?'' என்பதாக விமானப் படிக்கட்டை நோக்கி நடப்பதற்கு முன் தம் மகளிடம் சிரித்துக்கொண்டே கேட்ட பூபதியின் தோற்றம் இப்போதுதான் பார்த்து விட்டு வந்ததுபோல் சத்தியமூர்த்திக்கு ஞாபகம் வந்தது.

ஊருக்குப் போய் விட்டுத் திரும்புவதற்காக அவர் அப்படிச் சொல்லிக் கொண்டு போனுரா? அல்லது இந்த உலகத்தை விட்டே போய்விடப் போகிறேமென்றுதான் அத்தனை கனிவாகவும் அவ்வளவு பாசத்தோடும் சொல்லிக் கொண்டு போனுரா என்று எண்ணியபோது சத்தியமூர்த்திக்குக் கண் கலங்கியது.

'பூபதியின் அருமை மகள் பாரதி இந்தப் பேரிடி போன்ற துயரச் செய்தியை அறிந்து எவ்வாறு கதறித் துடித்து அழுதிருப்பாள்?' என்று அவனுல் அவளுடைய துயரத்தைக் கற்பனை செய்யவும் முடியாமலிருந்தது.

எல்லாப் பெரிய மனிதர்களிடமும், பிரமுகர்களிடமும் இருந்த சில பொதுவான குறைபாடுகள் பூபதியிடமும் இருப்பதைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் கடந்த சில தினங்களில் அவரை 'ஜெகில் அண்ட் ஹைடாக' எண்ணித் தான் மனம் கொதித்ததையும் இப்போது சத்தியமூர்த்தி நினைத்தான். பலரிடம் இருந்த அந்தச் சில குறைபாடுகளோடு பலரிடம் இல்லாத சில நிறைவான நல்ல குணங்களும் பூபதியிடம் இருந்ததை அவனுல் மறந்துவிட முடியவில்லை. 'தங்களுக்கு எதிரே பிறர் உட்கார்ந்து பேசுவதுகூட மரியாதைக் குறைவு' என்று அற்பத்தனமாக நினைக்கிற பல போலிப் பெரிய மனிதர்கள் நிறைந்திருக்கிற இந்த உலகில் தம்முடைய கல்லூரியில் விரிவுரையாளராக வந்திருக்கிற ஓர் இளைஞரை அன்போடு வரவேற்று எதிரே அமரச் செய்து விட்டு விருந்தாளியை உபசரிப்பது போல் பெருந்தன்மையாகப் பழகிய பூபதியையும், வகுப்பில் அதே இளைஞரின் விரிவுரையைக் கேட்டுப் பாராட்டிய பூபதியையும் அந்த இளைஞரையே உதவி வார்டனுக நியமித்துப் பெருமைப்பட்ட பூபதியையும் போற்ருமலிருக்க முடியுமென்று தோன்றவில்லை. அதே பூபதியிடம் சொந்தப் பலவீனங்கள் காரணமாக இருந்த சில குற்றங் குறைகளை அவன் வெறுத்தாலும் பலருக்கு நிழல் தந்து கொண்டிருந்த பெரிய ஆலமரத்தில் இடிவிழுந்து எரிந்ததைப் போல் அவருடைய இந்த மரணத்தை அவனுல் பொறுத்துக்கொள்ள முடியாமலிருந்தது. குணக் குற்றங்களில் ஒன்றே முழுமையாக நிறைந்த மனிதர்கள் உலகில் எங்குமே இல்லைதான். பல நல்ல குணங்களுக்காகச் சில குற்றங்களையாவது மன்னிக்கிற சுபாவம் பொது வாழ்க்கைக்கு அவசியம் வேண்டும் போலும்

"நான் அப்பவே சொன்னேனே, அது சாஸ்திரி கடையிது என்று"
என்று எல்லோரும் வியந்து சொல்ல

**சம்பூர்ண சாஸ்திரியார் & சன்ஸ்**
பட்டு ஜவுளி உற்பத்தியாளர் & வியாபாரிகள்
வடக்கு மாட வீதி-மயிலாப்பூர்- மதராஸ்-4

நவராத்திரி - தீபாவளிக்காக

கல்கத்தா : கேசவன் லாட்ஜ், நெ. 34, Dr. சரத்பானர்ஜி ரோடு
கல்கத்தா - 29 (போன் : 46-6305)
டெல்லி : 4/76, கிருஷ்ணு மார்க்கெட், W E A., கரோல்பாக், புது டில்லி-5

தீபாவளிக்காக 3-11-63 ஞாயிறன்று விற்பனை உண்டு

---

# மெட்ரிக் நீட்டலளவுகளில்

## மட்டுமே வியாபாரம் செய்யுங்கள்



மெட்ரிக் முறை எடைகள், அளவுகள் மட்டுமே நாடு முழுதும் சட்டப்படி அமுலிலிருக்கும் எடை, அளவுகளாகும்.

ஷர்ட், கோட்டுபோன்ற ஆடைகளுக்குத் தேவையான துணிகளின் அளவுகள் மீட்டர் கணக்கில் தரப்பட்டுள்ளன :

| | |
|---|---|
| புஷ் ஷர்ட் : | 1.85 மீட்டர் |
| ஷர்ட் : (முழுக்கை) கோட்டு : கால்சட்டைகள் : | ஒவ்வொன்றும் 2.75 மீட்டர் |
| ரவிக்கை : | 0.90 மீட்டர் |

துரிதமான சேவைக்கும், நேர்மையான வர்த்தகத்திற்கும்

## மீட்டர் அளவுகளில் வாங்குங்கள்

DA 63/245

---

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.,
மதராஸ்-17

என்ற பலவீனமான சிந்தனை ஒன்றும் அவனுடைய தளர்ந்த மனத்தில் இப்போது எழுந்தது. 'செய்கிற பாவங்களுக்காகச் சில சமயங்களில் சிலர் மன்னிக்கப்படுகிறார்கள். செய்யாத புண்ணியங்களுக்காகவும் சில வேளைகளில் சிலர் மன்னிக்கப்படுகிறார்கள். சிலர் எதற்காகவும் எப்பொழுதுமே மன்னிக்கப் படுவதில்லை' என்று எந்த நாட்டுப் பழமொழியோ ஒன்று உண்டு. இந்தப் பழமொழியின்படி ஜமீன்தாரையும், கண்ணாயிரத்தையும் எதற்காகவும் எப்போதும் மன்னிக்க முடியாது. ஆனால் பூபதி அப்படிப்பட்டவரில்லை. அவரை எதற்காகவோ நிறையப் பாராட்டவும் வேண்டும்! எதற்காகவோ கொஞ்சம் மன்னிக்கவும் வேண்டும் என்றுதான் தோன்றியது. கல்வி வளர்ச்சியில் ஆர்வமும், பெரிய இலட்சியங்களும் கொண்டு பூபதி நிறுவிய மல்லிகைப் பந்தல் கல்லூரி எதிர் காலத்தில் சரியாகப் பேணுவார் இல்லாமல் எடுப்பார் கைப் பிள்ளையாகவும், நிராதரவாகவும் போய்விடுமோ என்றெண்ணியபோதே ஒரு நல்ல கனவு கலைவது போல் துயரமாயிருந்தது. கல்வித் துறையில் தாம் சாதித்த சாதனைகளுக்காகத் தகுந்த பாராட்டுப் பெறச் சென்றுகொண்டிருந்த வேளை பார்த்துப் பூபதியைக் காலன் கவர்ந்து கொண்டு விட்டானே என்று அந்த விமான விபத்தை நினைப்பதற்கும் நம்புவதற்கும் கூட முடியாமல் சத்தியமூர்த்தி மனம் கலங்கினான். மஞ்சள்பட்டி ஜமீன் பங்களாவுக்குள் அவன் நுழையும்போது பகல் மூன்று மணிக்கு மேலாகிவிட்டது. முன்புறத்துத் தோட்டத்தைக் கடந்து அவன் அந்த மாளிகைக்குள் நுழைந்தபோது அது சாவு வீடு போல் களையற்றிருந்தது. எடுப்பதற்கு ஆளில்லாமல் டெலிபோன் மணி கதறிக் கதறி ஓய்ந்த வண்ணமிருப்பதையும் சத்தியமூர்த்தி அங்கே கண்டான்.

சத்தியமூர்த்தியைப் பார்த்ததும் முன்புறத்துப் புல்வெளியில் எங்கோ இருந்த தோட்டக்காரன் ஓடிவந்து விவரம் சொன்னான். ''காலையில் அஞ்சு மணிக்கே ஏரோப்ளேன் கம்பெனியிலேருந்து டெலிபோன் வந்திருச்சிங்க... ஜமீன்தார் ஐயா, கண்ணாயிரம் எசமான், மல்லிகைப் பந்தல் பெரிய ஐயாவோட மகள் எல்லாருமாப் புறப்பட்டு உடனே போயிட்டாங்க.. ப்ளேன்லே அவங்களும் அங்கே போவாங்க.... போயிருக்குதுங்க... ஏரோப்ளேன்லே விழுந்து போயிட்டாரே... அந்த ஐயாவோட மகள்.... அதுதான் இன்னைக்குக் காலையிலே மணியடிச்சதும் ஓடிவந்து டெலிபோனை எடுத்திச்சு. சமாசாரத்தைக் காதிலே கேட்டுச்சோ இல்லியோ.... அப்படியே டெலிபோனடியிலே மூர்ச்சையாகி விழுந்துட்டுதுங்க... ரொம்பக் கண்றாவி....... அந்தப் பொண்ணைப் பார்க்கச் சகிக்கலே. நான் பெரிய திடமனசுக்காரனின்னு... பேரு ... எனக்கே கண் கலங்கிப் போச்சன்னாப் பார்த்துக்குங்களேன்...''

''இங்கே யாருமே இப்போது இல்லையா?'' என்று சத்தியமூர்த்தி தோட்டக்காரனைக் கேட்டான்.

''டைப் அடிக்கிற அம்மா - அதாங்க அந்தச் சட்டைக்காரப் பொண்ணு—உடம்பு சௌகரியமில்லேன்னு ரெண்டு நாளா வரவேயில்லே. புதிசா வந்திருக்கிற கணக்குப்பிள்ளைக் கிழவனாரு.... ஜமீன்தாரோட இன்கம்டாக்ஸ் ஆடிட்டர் ஏதோ அவசரமா வரச் சொன்னாருன்னு சிட்டை, பேரேடு வரவு செலவுப் புத்தகம் எல்லாத்தையும் கட்டி எடுத்துக்கிட்டுப் போனாரு. அவரும் இன்னும் வரக் காணலே....''

''அது யாரு கணக்குப்பிள்ளைக் கிழவர்?'' என்று தெரிந்தும் தெரியாமலும் பாதி சந்தேகத்துடனே தோட்டக்காரனைக் கேட்டான் சத்தியமூர்த்தி.

''அதுதாங்க... பழைய பள்ளிக்கூடத்து வாத்தியாரு. பேச்சியம்மன் படித்துறையிலேருந்து வருவாரே; அந்தக் கிழவருதாங்க...'' என்று சத்தியமூர்த்திக்குப் பதில் கூறினான் தோட்டக்காரன். தன்னுடைய சந்தேகப்படியே அவன் குறிப்பிட்ட கிழவர் தன் தந்தைதான் என்பதைச் சத்தியமூர்த்தி விளங்கிக் கொள்ள முடிந்தது. சத்தியமூர்த்தி அங்கிருந்து திரும்பி விடும் எண்ணத்தோடு தயங்கி நின்றபோது அந்த மாளிகையின் முன் கூடத்து அறையில் அவனுக்குப் பழக்கமான குரல் மெல்ல விசும்பி அழுகிற ஒலி கேட்டது. 'மோகினி அங்கேதான் இருக்கிறாளா?' என்பதை அந்தத் தோட்டக்காரனிடம் எப்படி விசாரிப்பது என்றெண்ணித் தயங்கிக் கொண்டிருந்த சத்தியமூர்த்தி இந்த அழுகை ஒலியைக் காரணமாக வைத்தே தான் நினைத்த கேள்வியைத் தோட்டக்காரனிடம் சுலபமாகக் கேட்க முடிந்தது.

''யாரோ உள்ளே ரொம்ப நேரமா அழுது கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறதே? யார் அது?'' என்று கேட்டான் சத்தியமூர்த்தி.

(தொடரும்)

புதிய நறுமணம் இன்றுமுதல் பாக்கெட்டுகளில் கிடைக்கிறது —

# மூடிஸ் டீ

நீங்கள் விரும்பி அனுபவிக்கும்

மிகுந்த
நறுமணம்...







உண்மையிலேயே கடைசித்துளிவரை

நல்ல ருசியுள்ளதா
யிருக்கிறது...




ருசி, நிறம், சக்தி

இவற்றில்
இணையற்றது...




உங்கள் பணத்தை
மிச்சப்படுத்தும்
வகையில்,

கூடுதலான கோப்பைத் தேனீர் பெறுகிறீர்கள்...

மூடிஸ் டீ — நாற்பது வருஷங்களுக்கு மேலாக புகழ் வாய்ந்தது...

# பொன் மலர்

## 'எல்லார்வி'



கோமதி வெளி வராந்தா ஊஞ்சலில் அமர்ந்து மெல்ல அசைந்தாடிக் கொண்டிருந்தாள். அவள் உள்ளத்தில் ஆத்திர உணர்ச்சி மிகுந்து நின்றது. இரண்டு நாளில் தீபாவளி. அவள் கணவன் வாசு இன்று கிளம்பி 'டூர்' சென்றிருக்கிறான். 'பெரும்பாலும் புதன்கிழமையே வந்துவிடுகிறேன்; தவறினால் வியாழனன்று கட்டாயம் வந்துவிடுவேன்; கவலைப்படாதே' என்று சொல்லிவிட்டுத்தான் போனான். இருந்தாலும் அவள் மனம் வேதனைப்பட்டது. 'சீச்சீ, நாள் கிழமை எதையும் நிம்மதியாகக் கொண்டாட முடியாமல் இப்படி ஓர் உத்தியோகம்!' என்று அலுத்துக் கொண்டது.

வாசு காரில் ஏறும்போது அவள் முகத்தில் சஞ்சலம் தோன்ற அருகே நின்றிருந்தாள். 'நான் வரட்டுமா கோமு?' என்று அவன் கேட்டதற்கு அவள் மௌனமாகத் தலை அசைத்தாள். அவன் மென்மையாக நகைத்தான். 'இது இன்றுதான் புதிதா கோமு? விவரம் தெரியாத குழந்தை மாதிரி முகத்தைத் தூக்குகிறாயே?' என்றான். 'இது இன்று புதிதில்லைதான். ஆனால் நீங்கள் ஊரில் இல்லாத சமயத்தில் உங்கள் கல்கத்தா நண்பர் வந்து நம் வீட்டில் தங்குவது புதிய அநுபவம்தானே?' என்று அவள் சிறிது வெடுவெடுத்தாள்.

இப்போது வாசு வாய் விட்டே சிரித்து விட்டான். 'அந்த நண்பருக்காக நீ செய்யப் போவது என்ன கோமு? நண்பர் பாலு மனிதருள் மாணிக்கம். நான் ஊரில் இல்லை என்றதுமே வேறு இடத்துக்குப் போய்விடுவார். இல்லையென்றாலும் என்ன? மாடி இருக்கிறது அவர் தங்க; சீதாலட்சுமிப் பாட்டி, முனியன், அவன் மனைவி மக்கள் முதலியோர் இருக்கின்றனர், அவரைக் கவனித்துக்கொள்ள. எல்லாம் இரண்டே நாள் ஏற்பாடுதானே?... நேரமாகிறது. வரட்டுமா?' என்றான். இப்போது அவள் தலையைக் கூட அசைக்கவில்லை. கார் கிளம்பிவிட்டது.

ஆத்திரத்தின் நடுவே மகிழ்வுணர்ச்சியும் தலைநீட்டிற்று கோமதியின் உள்ளத்தில். 'இவருக்குத்தான் என்னிடம் எவ்வளவு நம்பிக்கை! கணவரின் பூரண நம்பிக்கைக்குப் பாத்திரமான மனைவி உயர்ந்தவளா, மனைவியை முழுமையாக நம்பும் கணவர் உயர்ந்தவரா? மனிதருள் மாணிக்கம்: இவருடைய நண்பரா, இவரா?' — இப்படி ஓடிக் கொண்டிருந்தது அவள் சிந்தனை.

''அம்மா!.... அம்மா!...'' என்று தெருவிலிருந்தே கூப்பாடு போட்டுக் கொண்டு ஓடி வந்தாள் பானு. இடக் கையில் புத்தகப் பை; வலக் கையில் கற்பலகை. முன் தலையிலிருந்து அவிழ்ந்து தொங்கும் ரிப்பன் முகத்தில் விழுந்து ஒரு கண்ணை மறைக்க அவள் ஓடிவரும் காட்சியைக் காண, கோமதிக்குச் சிரிப்பு வந்தது. வாத்சல்ய உணர்ச்சி மீதூர ஊஞ்சலினின்றும் எழுந்து எதிரே சென்று குழந்தையை அள்ளி எடுத்து அணைத்துக் கொண்டு முகத்தோடு முகம் பதித்தாள்.

''இதோ பாரும்மா, மாக்கு....'' என்று பானு கற்பலகையைக் காட்டினாள். ''அடடே!... பெரிய மார்க்காய் வாங்கியிருக்கிறாயே!....'' என்று தன் முகத்தில் ஆச்சரியம் தோன்றக் கற்பலகையில் இருந்த பூஜ்யத்தைப் பார்த்த கோமதி, ''சமர்த்து! உள்ளே போய்ப் பாட்டியிடம் தின்பதற்கு வாங்கிக் கொள்'' என்று பானுவைக் கீழே இறக்கிவிட்டாள். பானு பாட்டியைக் கூவி அழைத்துக் கொண்டு உள்ளே ஓடினாள். கோமதி மீண்டும் ஊஞ்சலில் அமர்ந்தாள்.

கல்கத்தாவில் பெரிய கம்பெனி ஒன்றில் கண்ணியமான பதவி வகித்து வரும் பாலுவும், வாசுவும் சமீப கால நட்பு உடையவர்கள்தாம் என்றாலும் நட்பிலே பிடிப்பு அதிகமாக இடம் பெற்றிருந்தது. தொழில் முறையில் இருவரும் அடிக்கடி வெளியூர்களில் சந்தித்துக் கொள்வார்கள். இருமுறை பாலு வாசுவின் இல்லத்துக்கு வந்து அரை நாள் தங்கியுமிருக்கிறான். பண்பில் உயர்ந்

துவன் அவன் என்பதை வாசு, கோமதி இருவருமே ஒருவாறு உணர்ந்திருந்தனர். என்றாலும் கணவன் ஊரில் இல்லாதபோது அன்னிய ஆடவன் வீட்டில் வந்து தங்குவது கோமதிக்கு என்னவோ போல் இருந்தது.

'சென்னையில் உள்ள கிளைக் காரியாலயத்தில் இரண்டு நாட்கள் அலுவல் இருக்கிறது. ஞாயிறன்று அவ்விடம் வருகிறேன்' என்று பாலு எழுதியிருந்தான்.

'இங்கே உள்ளவரையில் என் விருந்தினராக என் இல்லத்திலேயே தங்க வேண்டும். இந்தச் சமயத்தில் தீபாவளியும் சேருவதால் நீங்கள் எங்கள் குடும்பத்தோடு சேர்ந்து பண்டிகை கொண்டாட வேண்டும்' என்று வாசு எழுதினான்.

'பன்றிக் குட்டிக்கு மகர சங்கராந்தியா என்று வசனம் சொல்வார்கள். எனக்குப் பண்டிகை ஏதும் கிடையாது. ஆயினும் உங்கள் அன்பை மறுக்கவில்லை' என்று பாலு பதில் எழுதினான்.

அந்தக் கடிதத்தைப் பார்த்ததும் கோமதி வாசுவிடம் கேட்டாள்: ''உங்கள் நண்பர் ஏன் இன்னும் கல்யாணம் செய்துகொள்ளவில்லை?'' என்று.

''தெரியவில்லை. திருமணம், இல்லறம், குடும்பம் என்று பேச்செடுத்தாலே அவர் முகம் விகாரமாக மாறிவிடுகிறது. அதனால் தான் அவரை நான் எதுவுமே கேட்பதில்லை'' என்றான் வாசு வறண்ட குரலில்.

''ஒருவேளை காதல், ஏமாற்றம் அது இது என்று ஏதாவது....''

'இருக்கலாம். அந்தப் போராட்டத்திலே எல்லாருக்குமே வெற்றி கிட்டிவிடுகிறதா?'' என்று கேட்டபடி அவள் கண்ணை ஊடுருவி இளநகை புரிந்தான் வாசு. கோமதி லஜ்ஜை மீதூர முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள். கடுமையான பல சோதனைகளைக் கடந்து காதலிலே வெற்றி பெற்றவர்கள் அவர்கள்.

வாசுவுக்கு மேலாவிலிருந்து திடீர் திடீரென்று வெளியூர்ப் பிரயாண உத்தரவு வருவது வழக்கமாகி விட்ட செயல். இப்பொழுதும் அப்படித்தான்.

சிந்தனையில் ஆழ்ந்திருந்த கோமதி அருகே காலடி ஓசை கேட்டுத் திரும்பினாள். விமலா வந்து கொண்டிருந்தாள். அன்னம் போல் அசைந்து நடந்து கன்னங் குழியச் சிரித்தபடி பொன்னைப் போல் ஒளி வீசி வந்த அவள் வராந்தாவின் சிமிண்டுத் தூணில் சாய்ந்து ஒயிலாக நின்றாள்.

''ஏதோ பலமான யோசனைபோல் இருக்கிறது....''

கோமதி பதில் சொல்லவில்லை. வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்தாள்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டாள் விமலா.

''இன்று நீ சுடர் விட்டுப் பிரகாசிக்கிறாய், விமலா.''

''ஆமாம்; ஏனென்றால் அணியும், தங்கப் பணியும், பட்டுத் துணியும், மரகத....''

''நீயே தங்கச் சிலை; ஒளி வீசும் பொன் மலர். உனக்கெதற்கு அவை? அழகற்றவர்களுக்கல்லவா அலங்காரம் வேண்டும்? உன் எழிலுக்கும் குணத்துக்கும்....''

''உங்களுக்கு என்னிடம் உள்ள அன்பு முதிர முதிர உங்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் நான் அப்படியெல்லாம் தோன்றுகிறேன்.— பொன் மலர் ஒளியை வீசலாம்; மணத்தைப் பரப்பாதே. மணமற்ற மலருக்கு மவுசு ஏது?''

''பொல்லாத பேச்சுக்காரி நீ....அது இருக்கட்டும். நாளை உனக்கு லீவுதானே?''

''இல்லை. தீபாவளியன்று தீட்சிதர் நினைவு நாள். அதற்கு முதல் நாள் இசை மேதை ஒருவரும், வெளிநாட்டு ரசிகமணி ஒருவரும் கல்லூரிக்கு விஜயம் செய்கிறார்களாம். காவியப் பகுதியிலிருந்து ஒரு சிறு நாடகம் — இசையரங்கு இப்படி ஒருசில நிகழ்ச்சிகள். நான் இசை அரங்கிலும், நாடகத்தின் பின்னணியிலும் பாடுகிறேன். அவற்றை முன்னிட்டு ஒருசிலருக்கு 'ஸ்பெஷல் கிளாஸ்' ஒத்திகை.''

''வகுப்பு எப்பொழுது? நாள் முழுதுமா?''

''இல்லை. பிற்பகலுக்கு மேல் ஓய்வுதான். ஏன்?'' என்று வினவினாள் விமலா.

''பிற்பகலில் இங்கே வந்துவிடு. மாமா ஊரிலில்லை. விருந்தினர் ஒருவர் வருகிறார்.''

''ஓ!... விருந்துச் சாப்பாடு சாப்பிடவா?''

''அதற்குந்தான்; எனக்குத் துணைக்குந் தான்.''

''நல்லதம்மா. நான் வரட்டுமா?''— அவள் எழுந்தாள். கோமதி மௌனமாகத் தலையசைத்து விடையிறுத்தாள்.

அவளுடைய பின்னழகையும், நடை அழகையும் இமையாமல் பார்த்து ரசித்தாள் கோமதி. பையப் பைய நடந்து சென்ற விமலா கேட்டைக் கடந்து அதன் கொக்கியை மாட்டிவிட்டு மறைந்தாள். கோமதியின் உள்ளத்தில் அவள் நினைவு நிறைந்தது.

மூன்று ஆண்டுகளுக்கு முன் ஒருநாள். பிற்பகல் மூன்று மணி யிருக்கும். கோமதி



தூக்கம் கலைந்து படுக்கையில் புரண்டு கொண்டு கிடந்தாள். காப்பி போட எழுந்திருக்க வேண்டும். சோம்பல் எழுந்திருக்க விடவில்லை.

அவள் சோம்பல் முறித்துக் கொண்டு எழுவதற்கும் வாசலில் ''அம்மா!'' என்று பெண் குரல் ஒன்று தீனமாக அழைப்பதற்கும் சரியாக இருந்தது. கோமதி வராந்தாவுக்கு வந்தாள். நடுக் கூடத்திலே பளிச்சென்று தேய்த்து ஏற்றி வைத்த வெண்கலக் குத்துவிளக்கைப் போல் ஒரு பெண் நின்றிருந்தாள். சுமார் இருபது வயதிருக்கும். உடலெங்கும் எழிலும் யௌவனமும் நிறைந்து ஒளிவிட்டன. அத்தனைக்கத்தனை முகத்திலே சோகத்தின் நிழல் கவிந்திருந்தது.

''யாரம்மா நீ?.... என்ன வேண்டும்?'' என்று கோமதி மிருதுவாகக் கேட்டாள்.

''நான் அநாதை. பிழைப்பை நாடிக் கிராமத்திலிருந்து வந்தேன். சமையலுக்கு இங்கே ஆள் தேவை என்று சொன்னார்கள்.''

''யார் சொன்னார்கள்?''

''மூன்றாவது பங்களாவில் இருக்கிற பெரியம்மாள்.''

''ஓகோ...'' — கோமதியின் கண்களில் கருணை ஒளிவிட்டது.

''அம்மா, எளிய குடும்பமானாலும் மிகவும் உத்தமமான குலத்திலே பிறந்து வளர்ந்தவள் நான். திருடமாட்டேன். பொய் சொல்லமாட்டேன். நான் சுசிருசியாகச் சமையல் செய்வேன். உங்கள் மனம்போல் நடப்பேன்...''

''வருத்தப்படாதே அம்மா. உள்ளே வா. உன் பெயரென்ன?'' என்றாள் கோமதி.

''விமலா!'' என்றபடி அந்தப் பெண் வராந்தாவில் அடியெடுத்து வைத்தாள். அந்த வேளை எத்தகையது என்று கோமதிக்கும் தெரியாது; விமலாவுக்கும் தெரியாது.

''உன் முகத் தோற்றமும் பேச்சும் உன் நல்ல தன்மையை விளக்குகின்றன. புண்பட்ட உன் நெஞ்சைக் கேள்விகள் கேட்டுக் குத்திக் கிளற நான் தயாராக இல்லை. அலைந்து அலைந்து களைத்திருக்கிறாய். வா. காப்பி போட்டுத் தருகிறேன்.''



இருவரும் உள்ளே சென்றார்கள். கோமதி காப்பி போட்டதாகப் பேர்தான். விமலாதான் எல்லாம் செய்தாள். அந்த விநாடியே பொறுப்பை அவள் ஏற்றுக் கொண்டாள்.

கோமதியின் உள்ளத்தில் மட்டும் ஏனோ விமலா சம்பந்தமாக நிம்மதி யில்லை. மனம் ஏனோ அடிக்கடி சலித்துக் கொண்டே இருந்தது. காலத்தின் கொடுமையால் நளச் சக்கரவர்த்தி ருதுபர்ண மன்னனிடம் சமையல் பணியில் ஈடுபட்டிருந்ததையே அவள் அடிக்கடி எண்ணினாள். விமலாவை ஏவ அவள் உள்ளம் கூசிற்று.

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒரு நாள். அடுத்த தெரு வரை சென்று வருவதாகக் கிளம்பினாள் கோமதி. அப்போது பக்கத்துப் பங்களாவிலிருந்து ரேடியோ இசை ஒலி கேட்டது. 'ஓ ஜகதம்பா!' என்ற பாடலைப் பிரபல பாடகி விஜயம்தான் பாடிக்கொண்டிருந்தாள்.

சற்று நேரத்துக்குப் பின் வீடு திரும்பி வராந்தாவில் ஏறியதும் கோமதியின் செவிகளில் உள்ளேயிருந்து 'ஓ ஜகதம்பா' பாடல் மறுபடியும் கேட்டது. அவள் திடுக்கிட்டுப் போனாள். 'ரேடியோவில் அதே பாட்டொலி மீண்டும் கேட்கிறதே!'

பாட்டு முடிந்தது. கோமதி உள்ளே சென்றாள். விமலா தொட்டிலை இலேசாக அசைத்தவண்ணம் கூடத்தில் நின்றிருந்தாள்.

''நீயா?... நீயா பாடினாய்?'' கேட்டுக் கொண்டே விமலாவை அணுகிய கோமதி அவளை அப்படியே ஆரத் தழுவிக்கொண்டாள். பிறகு, ''எங்கே இப்படி வந்து உட்கார்ந்து மீண்டும் அதே பாடலைப் பாடு'' என்றாள்.

விமலா பாடினாள். கோமதி அப்படியே குழைந்து போனாள். ''உனக்குச் சிட்சை உண்டா? சுருதி, லயம், உச்சரிப்பு எல்லாம் கன கச்சிதமாக இருக்கின்றனவே!''

''கிராமத்தில் பண்ணையார் வீட்டுப் பெண்களுக்குச் சிட்சை நடக்கிறபோது கூடவிருந்தும் மறைந்திருந்தும் கேட்டுக் கற்றுக் கொண்டேன் அம்மா.''

''கீர்த்தனங்கள் மட்டும்தான் கற்றுக் கொண்டாயா, அல்லது....''

''ஸரளி, ஜண்டை, அலங்காரம், கீதங்கள், வர்ணங்கள் முதலிய அடிப்படைப் பாடங்கள் அனைத்துமே பயின்றிருக்கிறேன் அம்மா.''

''அடி பாவிப் பெண்ணே! குயில் போன்ற குரலையும், தெளிவான ஞானத்தையும், ரதி போன்ற அழகையும் வைத்துக் கொண்டு யாராவது இப்படி அடுப்படியில் அவிவார்களோ!.... அசடு, அசடு, சுத்த அசடு நீ!'' என்ற கோமதி சற்று நேரம் மௌனமாக இருந்த பின், ''சரி, இப்பொழுதுதான் என்ன மோசம்? அடுத்த மாதம் உன்னை இசைக் கல்லூரியில் சேர்த்து விடுகிறேன்'' என்றாள்.

''வேண்டாம் அம்மா!''

''அழுதுவிடுவாய் போல் இருக்கிறதே! ஏன் மறுக்கிறாய்?''

''என் இயல்புக்கும் கலை வாழ்க்கைக்கும் பொருந்தவே பொருந்தாது.''

சென்னை வெலிங்டன், மேகலா, மகாராணி மற்றும் தென்னாடெங்கும்



**தென்னகத் திரையுலகம்**
**இதுவரை கண்டிராத**
**மகத்தான வனச்சித்திரம்!**

*மெய்சிலிர்க்க வைக்கும் காட்சிகள்!*
*மனமகிழ்வூட்டும் இன்னிசை!*

அக்டோபர்
**18உ** முதல்

**நீலாவின்**

# காட்டு மைனா

(தமிழ்)

ஆனந்தன் · ஷீலா · பிரேம் நசீர்
சாந்தி *மற்றும் பலர் நடித்தது*

''அதையெல்லாம் பற்றி உனக்கு மிகவும் தெரியுமோ? பேசாமல் இரு.''

சிறு பிராயத்திலிருந்தே பிடித்த பிடியை நிறைவேற்றிப் பழகிய கோமதி இசைக் கல்லூரித் தலைவரைக் கண்டு பேசி முடித்தாள். தினசரி இங்கிருந்து போய் வருவதில் தொல்லைகள் இருப்பதை எண்ணிக் கல்லூரியின் உணவு விடுதியிலேயே விமலா தங்கியிருப்பதற்கான ஏற்பாடுகளையும் செய்தாள். வாசு முழு மனத்துடன் ஒப்புக் கொண்டான்.

விமலா மளமளவென்று இசையில் முன்னேறினாள். அவளது தகுதியை எண்ணிக் கல்லூரித் தலைவர் அவ்வப்போது அவளுக்கு அரங்கில் பக்க வாத்தியங்களோடு பாடும் வாய்ப்பை அளித்து வந்தார். விமலா இன்று சிறு குறையும் இல்லாத சிறந்த பாடகி.

**கை**க் கடிகாரத்தை அடிக்கடி பார்த்த வண்ணம் காரை வேகமாகச் செலுத்திய கோமதியின் உள்ளம் காரினும் வேகமாகத் துள்ளிக் கொண்டு முன்னே ஓடிற்று. 'டாக்ஸி' வைத்துக் கொண்டு வரட்டும்' என்று முதலில் நினைத்தாள். 'டிரைவர் போய் அழைத்து வரட்டும்' என்று பிறகு நினைத்தாள். முடிவில் அவளே காரை ஓட்டிக் கொண்டு விரைந்தாள்.

கோமதியைக் கண்டதும் கரம் கூப்பிய பாலு, ''உங்களுக்கு ஏன் இந்தச் சிரமம்?'' என்றான். பிறகு, ''மிஸ்டர் வாசுவுக்கு உடம்பொன்றும் இல்லையே?'' என்று கனிவுடன் கேட்டான். சிரித்த முகத்துடன் அவனை வரவேற்ற கோமதி, மழுப்பினாற் போல் ஏதேதோ பேசினாள். இருவரும் காரில் ஏறி, அது ஓடத் தொடங்கிய பிறகே வாசு ஊரில் இல்லை என்பதை வெளியிட்டாள். முன்னதாக வெளியிட்டால் அவன் தன்னோடு வராமல் வேறு எங்கேனும் போய் விட்டால் என்ன செய்வது என்கிற பயம்!

''அடடா! அப்படியானால் நான் வேறு ஒரு நண்பரிடம் போய் இருந்துவிட்டு இரண்டு நாட்கள் கழித்து வருகிறேன்'' என்றான் பாலு.

கோமதி நகைத்தாள். ''நீங்கள் அப்படி நடந்து கொண்டால் உங்கள் நண்பர் என்னை என்ன செய்வார் தெரியுமா?'' என்றாள்.

அதற்கு மேல் பாலு ஒன்றும் மறுத்துப் பேசவில்லை.

குளியல், உணவு, இவற்றுக்குப் பின் தூங்கி எழுந்த பாலு உடுத்துக்கொண்டு வெளியே சென்றான். அவன் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் விமலா வந்தாள்.

''விருந்தாளி எங்கே?''

''வெளியே சென்றிருக்கிறார். வந்துவிடுவார்; பொறுத்துக்கொள்!'' நெஞ்சிலே முள் தைத்தாற்போல் இருந்தது விமலாவுக்கு. கோமதியின் தோற்றமும் பேச்சும் சுருதி கலந்த இசையைப் போல் இருந்தன. 'பொறுத்துக் கொள்' — இதற்கு என்ன பொருள் என்று மனம் உளைந்தது. அவளுடைய மௌன நிலையையும் நாணத்தின் சின்னங்களாகக் கோமதி கணக்கிட்டுக் கொண்டாள்.



பல்பொடி வியாபாரி: இந்தப் பல் பொடி இருபது வருஷங்களாக மங்காத புகழுடன் விளங்குகிறதென்று உங்களுக்கெல்லாம் தெரியும். இன்னொரு ரகசியம் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். அறிவாளிகள் கொஞ்ச நேரம் இருந்து நல்லா கவனிக்கணும்!

**கூட்டத்தில் ஒருவர்** (நண்பரிடம்): நமக்கென்ன ஸார் இங்கு வேலை? வாங்க போகலாம்!

''விமலி! வந்திருக்கும் விருந்தினருக்குப் பாட்டு என்றால் பிராணன். நீ சிறிது நேரம் அவருக்காகப் பாடுகிறாயா?''

''உம்.''

''என்ன உம் கொட்டுகிறாய்?'' மோவாயைப் பற்றித் தாழ்ந்திருந்த அவள் முகத்தை நிமிர்த்தினாள் கோமதி. ''இது என்ன விமலி, உன் கண்கள் நொடிக்குள் ஏன் இப்படிக் கலங்கிவிட்டன?'' என்று கேட்டாள்.

நொடிக்குள் உள்ளமும் கண்களும் கலங்கினது போலவே மறு நொடிக்குள் அவள் அறிவும் விழித்துக் கொண்டது. ''ஒன்றும் இல்லை அம்மா. உங்கள் அன்பின் ஆழத்தை எண்ணினேன். உணர்ச்சி வசமானேன்'' என்று போலியாகச் சிரித்த வண்ணம் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். ''சமையல் வேலைக்கு வந்தவளைச் சங்கீதக் கலைக்குத் திருப்பினீர்கள். இப்போது பிரமுகர் ஒருவர் மூலம் அந்தக் கலைக்கு ஏற்றம் அளிக்கவும் திட்டம் போட்டிருக்கிறீர்கள்'' என்று தொடர்ந்து பேசினாள் விமலா.

'தப்புக் கணக்கடி பெண்ணே, தப்புக் கணக்கு! நான் திட்டம் போட்டிருப்பது உண்மைதான். ஆனால் நீ நினைக்கிறபடி அன்று' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்ட கோமதி மேலுக்கு அர்த்தமின்றிச் சிரித்து வைத்தாள்.

மணி ஆறடித்த போது கோமதியிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. சிறந்த புடவையையும், சில அணிகளையும் விமலாவிடம் கொடுத்து அணிந்து கொள்ளச் சொன்னாள். திடுக்கிட்ட விமலா, ''இவையெல்லாம் எதற்காகம்மா?'' என்றாள்.

''நான் சொன்னதை மறந்து விட்டாயா? பாட வேண்டும் என்றேனே?''

''பாடுவதற்கு இவை ஏன்? பெண் பார்க்கும் நிகழ்ச்சிக்கு அலங்கரிப்பதுபோல் இருக்கிறதே உங்கள் ஏற்பாடு!''

''அப்படியேதான் வைத்துக் கொள்ளேன்.''—கோமதி சிரித்தாள்.

''நீங்கள் என்ன அம்மா சொல்கிறீர்கள்?''

''இதோ பார், விமலா, வந்திருக்கும் விருந்தாளிக்கு வயது முப்பதுதான் இருக்கும். உயர்ந்த படிப்பு, சிறந்த உத்தியோகம்; நிறைந்த சம்பளம். கண் நிறைந்த லட்சணம்'' — என்று கோமதி பாலுவை வருணிக்கத் தொடங்கினாள். விமலாவின் முகம் நிலத்தை நோக்கித் தாழ்ந்து கொண்டே போயிற்று.

முன்புற ஹாலில் நிழலாடிற்று. கோமதி கவனித்தாள். பாலுவேதான். விமலா தலை நிமிரவே யில்லை. கோமதி கண்டும் காணாதவள் போல் தொடர்ந்து பேசிக்கொண்டே போனாள்.

''உன்னை அடைய வேண்டிய பிராப்தியினால்தானோ என்னவோ, அவரும் இதுவரை பிரம்மச்சாரியாகவே இருந்திருக்கிறார். உன்னைப் பார்த்தால் அவர் மறுக்க மாட்டார்; அவரைக் கண்டால் நீயும் களி கொள்வாய்....''

விமலா விம்முவது போல் இருந்தது.

''அம்மா! பெற்ற தாயினும் மிகுந்த வாத்சல்யத்தோடு நீங்கள் அநாதையான என்னை ஆதரித்து முன்னுக்குக் கொண்டு வந்தீர்கள். இத்தகைய உத்தமியின் கருத்துக்கு மாறாக நான் நடந்து கொள்வதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் நல்ல கருத்தை நிறைவேற்றத் தகுதியற்ற பாவி நான்! அம்மா!... இந்த விமலா எச்சிற் பண்டம் அம்மா!....''

''என்ன! மணமாகி வாழ்விழந்தவளா நீ?''

''மணமானவள்தான்; வாழ்விழந்தவள் அல்ல; இதோ பாருங்கள்!''

நெஞ்சின் அடித்தளத்திலே புதைந்திருந்த தாலியை எடுத்துக் காட்டினாள் விமலா. பிறகு அதைக் கண்ணில் ஒற்றிக்கொண்டு, ''இதனால் என்னைத் தன்னோடு பிணைத்துக் கொண்டவர் எங்கோ வாழ்கிறார்; நான்.....நான்.....'' என்று விசித்து அழத் தொடங்கினாள்.

கோமதிக்கும் அழுகை பீறிட்டு வந்தது. ''அழாதே அம்மா'' என்றாள்.

''பாண்டூர்க் கோயிலிலே என் அப்பா கணக்குப்பிள்ளை. எனக்கு முன்பு நாலைந்து குழந்தைகள் போயினவாம். என்னை வாழ வைக்கவே அப்பாவுக்குச் சக்தி இல்லை. பெற்றோரை இழந்த என் அத்தானுக்குச் செலவின்றி மணம் முடித்தார். சில காலத்தில் என் அம்மா காலமானாள். அத்தான் வேலை வேலை என்று அலைந்துகொண்டிருப்பதாகச் சிலர் சொன்னார்கள். பொறுப்பற்ற முறையில் ஊர் சுற்றுவதாக வேறு சிலர் கூறினார்கள். திருமணம் நடந்து ஓர் ஆண்டு ஆகியும் திரும்பியே வராமலிருந்த அத்தான் மீது அப்பாவுக்கு அளவு கடந்த ஆயாசம். ஊர் சுற்றுகிறார் என்பதைத்தான் அவர் நம்பினார். ஒரு நாள் தற்செயலாக இருவரும் மாயூரம் சந்திப்பிலே சந்தித்துக் கொண்டார்களாம். அந்தச் சந்திப்புத்தான் என் இல்வாழ்வில் விழுந்த கோடரி! பேச்சு முற்றவே அப்பா அத்தானைத் தாறுமாறாக ஏசிப் பேசிக் காறித் துப்பிவிட்டு வந்து விட்டார். அதே வியாஜமாக மனமுடைந்து படுத்தவர்தான்; விரைவிலே கண்மூடிவிட்டார். உண்ண, உடுக்க எதற்கும் வகையில்லை. ஊரை விட்டுப் புறப்பட்டேன். உத்தமியாகிய உங்கள் நிழலில் புகப்பட்டேன்'' என்றாள் விமலா.

''அசடே! இதையெல்லாம் முன்பே சொல்லித் தொலைத்திருக்கக் கூடாது? நானும் அசட்டுத்தனமாக ஒன்றும் கேளாமல் இருந்து விட்டேன். போனது போகட்டும். உன் அத்தான் பெயர், அங்க அடையாளங்கள் சொல், மாமா வந்ததும் முதல் வேலையாக முயன்று அவரைக் கண்டுபிடிக்க.''

''மிண்டர் வாக எந்த முயற்சியுமே எடுக்க வேண்டாம் கோமதி அம்மா.''

அருகே ஆண் குரல் கேட்டுப் பெண்கள் இருவரும் திடுக்கிட்டனர். விமலாவின் சோகக் கதையில் மூழ்கிவிட்ட கோமதி சற்று முன் ஹாலில் பாலுவைப் பார்த்ததையே மறந்திருந்தாள்.

''ப.....ட்.....டு....''

விமலா துணுக்குற்றுப் பாலுவை நோக்கினாள். தலை கிர்ரென்று சுழன்றது.

பாலு சொன்னான்: ''வெண்ணெய் திரளும் நேரத்தில் தாழி உடைந்துவிட்டது. பாண்டூரிலும், பக்கத்து ஊர்களிலும் விசாரித்து ஏமாற்றம் அடைந்தேன். மாமாவின் ஆதரவுகள் என்னைப் பண்பில் உயரச் செய்தன. அதனால் நீ இன்றி வாழ்வில்லை என்றிருந்தேன். என் தவம் பலித்துவிட்டது.''

நிதானம் பெற்ற விமலா மண்டியிட்டுக் கணவனை வணங்கினாள்.

''இந்தப் பெண் தெய்வத்தை வணங்கு, பட்டு. உனக்கும் எனக்கும் ஒருசேர வாழ்வளித்த உத்தமத் தெய்வம் இது!''

நாடகக் காட்சியைப் போல் மின் வேகத்தில் நிகழ்ந்தவற்றை எண்ணி மெய் சிலிர்த்த கோமதி மெல்லப் பேசினாள். ''என் கண்ணையும் காதையுமே இப்போது என்னால் நம்ப முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நினைவு வருகிறது. 'நீ ஒளி வீசும் பொன் மலர்' என்று நான் நேற்று கூறியபோது, 'மணமற்ற மலருக்கு மவுசு ஏது!' என்று நீ சொன்ன கருத்து சற்று முன் புரிந்தது. ஒளி வீசும் பொன் மலரில் மணமும் கூடிவிட்டதை இப்போது உணர்ந்து ஆனந்திக்கிறேன். அறிந்தோ அறியாமலோ சரியாகவோ, தவறாகவோ நான் புரிந்த செயல்கள் நற்பலனையே அளித்துவிட்டதை எண்ணி மகிழ்கிறேன்.''

வாசலில் கார் வந்து நின்றது. எல்லாரும் வராந்தாவில் நின்று பார்த்தார்கள். டக்டக் என்று பூட்சுகள் ஒலி செய்ய வாசு வந்தான். ''டூர் புரோகிராம் திருச்சியிலேயே கான்ஸல்; திரும்பி விட்டேன்!'' என்றான்.

இந்தத் தம்பதிகள் அந்தத் தம்பதிகளை வணங்கி எழுந்தனர்.

# ஜலதோஷம் வராமல் தடுக்கச்

## சாப்பிடுங்கள்

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்

—வெறும் மருந்துமட்டுமல்ல,

நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்குமாகும்!




வாழையடி வாழையாகக் குடும்பத்தினர் நல்லதென நம்பிக்கை கொள்ளச் செய்யும் பல நல்ல காரணங்களுள் நாலு இதோ :

1. கபம் அறுத்து, நுரையீரலைச் சுத்தப் படுத்தும் கிரியோஸோட், க்வயகால் அடங்கியது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

2. இருமலை இமைப்பொழுதில் கச்சிதமாய்க் கரைக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

3. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நோய்நிவாரணியும், நம்பிக்கைக்குகந்த டானிக்குமாகும். நோயை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு உதவுகிறது.

4. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் பசியைத் தூண்டி, ஜீரண சக்தியை வளர்ப்பதுடன், ரத்தத்தைச் சுத்தப்படுத்தி, தாதுப்பொருள் நஷ்டத்துக்கு ஈடுசெய்கிறது.



## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்

வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி. (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏயில் இணைக்கப்பெற்றது)




மறக்காமல்
கேட்டு வாங்குங்கள்
ஸ்பென்ஸர்ஸ்
கிரைப் ஸிரப்
குழந்தைகளின் ஜீரணக்
கோளாறுகளுக்கு
துரித நிவாரணி
ஸ்பென்ஸர் & கோ., லிட்.,
தரமான மருந்துகளைத்
தயாரிப்பவர்கள்
153, மவுண்ட் ரோடு,
சென்னை - 2





**KALINGA** POLES

STEP DRAWN STEEL TUBULAR POLES FOR
POWER TRANSMISSION, STREET LIGHTING, ETC.

KALINGA TUBES LTD. 33, Chittaranjan Avenue, Calcutta-12,
Works—Choudwar, (Orissa)

# நிமிஷக் கதைகள்



பரோடா சமஸ்தானத்து ஆட்சியாளர்களுக்கு ஒரு முறை லோகமான்ய திலகரின் மேல் சந்தேகம் ஏற்பட்டது. ராஜத் துரோகமான காரியங்களில் ஈடுபடுகிறார் என்று. எனவே, அவருக்குப் பின்னால் ஒற்றர்களை ஏவிவிட்டனர்.

ஒரு நாள் தமது நண்பரைச் சந்திக்க இரவு நேரத்தில் புறப் பட்டார் திலகர். தம்மைத் தொடர்ந்து உளவாளி ஏவி விடப்பட்டிருக்கிறான் என்பது அவருக்குத் தெரியும்.

நண்பருடன் உரையாடுவதில் நேரம் போவது தெரியாமல் போயிற்று. ஒற்றன் அவரை எதிர்பார்த்தவண்ணம் திண்ணை யில் அமர்ந்து அப்படியே கண் அயர்ந்து விட்டான்.

திலகர் நண்பரிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தார். ஒற்றன் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். இவனை இப்படியே தூங்க விட்டு விட்டுச் சென்று விடலாம் என்றால், பாவம்! நாளை இவன் அதிகாரிகளின் வாயில் புகுந்து புறப்பட்டாக வேண்டுமே என்று தோன்றியது அவருக்கு. அதற்காக அவன் நல்ல தூக்கத்தைக் கலைக்கவும் விரும்ப வில்லை அவர். அவன் புரண்டு படுக்கும் வரையில் காத்திருந்து, பின்னரே தட்டி எழுப்பினார். ''அப்பா! நீ உன் கடமையைச் செய்யப் புறப்படு. நான் என் கடமையை முடித்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்!'' என்றார்.

◆ ◆ ◆

டாக்டர்கள் கூட்டம் ஒன்று நிகழ்ந்து கொண்டிருந்தது. மனிதர்களுக்கு வரும் நோய்களைப் பற்றியும் பேச்சு நடந்து கொண்டிருந்தது. மிருக வைத்தியத்தில் நிபுணரான ஒருவர் மானிடர்களுக்கு வரும் நோயைப் பற்றியும் தாம் மிகவும் அறிந்தவர் போல் எளிதாகப் பேசிக் கொண்டிருந்தார். மற்ற டாக்டர்களுக்கு அது பிடிக்கவில்லை. தலைவருக்கோ அது தலை வேதனையாக இருந்தது. குறுக்கிட்டு, ''தாங்கள் மிருக வைத்தியர் என்பது நினைவிருக்கட்டும்'' என்றார்.

''நினைவில்லாமல் என்ன? உங்களுக்கு ஏதாவது உடல் நலம் இல்லையோ?'' என்று கேட்டார் மிருக வைத்தியர்.

◆ ◆ ◆



ஜாலந்தரில் ஒருநாள் சர்தார் விக்கிரம சிங் என்பவர் மகரிஷி தயானந்தரைக் கண்டார். பேச்சுவாக்கில், ''பிரும்ம சாரிக்கு மிக்க பலம் உண்டு என்று சொல்லுவார்களே, உங்களைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே!'' என்றார்.

ஸ்வாமி தயாநந்தர் ஒன்றும் பதில் சொல்லவில்லை. சர்தார் நான்கு குதிரைகள் பூட்டிய வண்டியில் வந்திருந்தார். விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டவர் வண்டியில் ஏறிக் கொண்ட தும் ஸ்வாமி தயாநந்தர் பின்னாலிருந்து வண்டியைப் பிடித்துக் கொண்டார். சர்தார் குதிரைகளைச் சவுக்கினால் அடித்து ஓட்டினார். வண்டி இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. ''இப்பொழுது உங்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கலாமே!'' என்று சொல்லி முறுவல் பூத்தார் ஸ்வாமி தயாநந்தர்.

◆ ◆ ◆



வான வெளிப் பயணி ககாரினைக் காண நண்பர் ஒருவர் அவர் வீட்டுக்குச் சென்றிருந்தார். அப்பொழுது வீட்டில் அவர் குழந்தை மட்டும்தான் இருந்தது. அந்தக் குழந்தை யைப் பார்த்து, ''உன் அப்பா எங்கே?'' என்று கேட்டார்.

''சந்திரனைச் சுற்றப் போயிருக்கிறார்!'' என்றது குழந்தை.

''எப்பொழுது திரும்புவார்?''

''அரை மணியில் வந்து விடுவார்!''

''அம்மா?''

''முட்டை வாங்கக் கடைக்குப் போயிருக்கிறாள். இப் பொழுது 'க்யூ' வரிசையில் போய் நின்று கொண்டிருப்பாள்!''

''எப்பொழுது திரும்புவாள்?''

''குறைந்தது மூன்று மணி நேரமாவது ஆகும்!''

# பாருங்கள்

எப்படியெல்லாம் பயன்படுகிறது

## டாடாவின் ஓடி கோலான்!





வாசனைப் பொருளாக


முக க்ஷவரத்திற்குப் பின் ஆரோக்கியம் தரும் லோஷனாக


சோர்வுற்ற வேளையில் உங்களுக்குப் புத்துணர்ச்சி கொடுக்க


புதுமலர்ச்சியூட்டும் நறுமண ஸ்நானத்திற்கு


'ஜில்'லெனப் பயணம்செய்து, மலர்ச்சியுடன் வந்துசேர


பாங்கான பரிசுப்பொருளாக

இவை மட்டுமா? இன்னும் பல வழிகளில் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஒரு சீசா கைவசம் வைத்திருங்கள். டாடாவின் ஓடி கோலான் வாகான நாலுவித சைஸ்களில், நல்ல கடைகளில் கிடைக்கின்றன. ஒருமுறை உபயோகித்துப் பார்த்தால் பின் 'இது இல்லாமல் எப்படி இதுவரை இருக்கமுடிந்தது' என்று வியப்படைவீர்கள். டாடா தயாரிப்பு

# பாதுகாப்பு

எம். எஸ். கல்யாணசுந்தரம்

அப்பொழுது ஹேஸ்டிங்ஸ் பிரபு கவர்னர் ஜெனரல். அவருக்கும் இந்த வரலாற்றுக்கும் நேரடி சம்பந்தம் ஒன்றுமில்லை; ஆனால் இது மிண்டோ பிரபுவின் காலத்துக்குப் பிறகு என்பது நினைவிலிருந்தால் நல்லது. மிண்டோ காலத்தில் பிரிட்டிஷார் இந்தியா விஷயத்தில் அசிரத்தை உள்ளவர்கள் போல நடந்தார்கள் —அதாவது நடு நடுவே அவர்களுக்கு அனுகூலமாக இருக்கும்போது மாத்திரம் நறுக்கென்று தலையிட்டார்கள். அதன் பிறகு ஒற்றைக் கால் கொக்கைப்போல்பற்றுதலற்று இருந்தார்கள். ஹேஸ்டிங்ஸ் காலத்தில் பிண்டாரிகளுக்குச் சற்று இக்கட்டான வேளை. தங்களுடைய மூல — பூர்வாசிரம ஜாதிகளையும் அந்தஸ்துகளையும் நெல்லிக்காய் மூட்டை போன்ற மனப்பான்மையையும் மறந்து இடித்த புளிபோல் இணைந்திருந்தனர் அவர்கள். வலுவிழந்த பாமர மக்களிடையே கிலியுண்டாக்குவது ரொம்பவும் சௌகரியம். அவர்களுடைய ஒரே லட்சியம் கருணையற்றுக் கொள்ளையடிப்பது, கொலை செய்வது, தீக்கிரையாக்குவது. அந்தப் பாவிகளுக்குள் கற்பனைக் கடங்காத கொடியவர்கள் அமீர்கானும் சித்துவும். ஆனால் அவர்களுடைய கூட்டத்தாரின் இறுகிய அமைப்பையும் பாராட்டத்தான் வேண்டும்.

ஒரு முறை அவர்களுடைய ஒற்றர்கள் தேன் சொட்டும் செய்தியொன்றைக் கொண்டு வந்தார்கள். இடார்ஸி பட்டணத்துக்கருகில் ஒரு சிற்றூர். அதில் மிச்ரிலால் எனப்படும் ஒரு வட்டிக் கடைக்காரன். அவன் வீட்டில் எப்பொழுதும் சாக்குச் சாக்காகத் தங்கம், வெள்ளி நாணயங்களும், ரத்தினங்களும் இருக்கும். அவனுடைய வயது முதிர்ந்த தகப்பனார் கங்கைக் கரையில் உயிர்விட வேண்டும் என்ற நோக்கத்துடன் சில வருஷங்களாகக் காசியில் வசித்து வந்தார். தகப்பனார் சாகும் தறுவாயில் இருக்கிறார். மிச்ரிலால் போட்டது போட்டபடி விட்டு விட்டு அவசரமாகக் காசிக்குப் புறப்பட்டு விட்டான். கட்டுக்கடங்காத பெரிய வீட்டில் ஒரு பிராமணக் கணக்கனும் ஒரு சில பணியாட்களும் மாத்திரமே இருக்கிறார்கள் — என்பது ஒற்றர்கள் சமர்ப்பித்த செய்தி.

அந்தவீட்டில்எதிர்ப்பு அதிகமாயிராதுஎன்று தெரிந்ததும் பிண்டாரித் தலைவர்கள் தங்கள் வழக்கப்படி தாக்குதலுக்கு நுணுக்கமான ஏற்பாடுகளைச் செய்தார்கள். அமாவாசைக்கு இரண்டு நாட்களுக்கு முன் கோரமான தீவட்டித் தாக்குதல் நடத்துவது என்பது ஏற்பாடு. ஆனால் அவர்களுக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம்! மனம் குழம்பிய ஒற்றர்கள் கடைசி நிமிஷத்தில் கிளப்பிய சந்தேகங்களின் காரணமாக இரு தலைவர்களும் தோட்டச் சுவரின் வெளிப்புறத்தில் சுற்றி வந்தார்கள். அப்பொழுது தாழ்ந்த குரலில் பேசப்படும் வார்த்தைகள் வழி நெடுக அவர்கள் காதில் விழுந்தன:

''அவர்கள் நெருங்கி விட்டார்கள் போல் இருக்கிறது.''

'' ஆம்; கட்டடத்தைச் சூழ்ந்து விட்டார்கள்; அந்த இரண்டு பிசாசுகளும் நிலைமையை ஆராய்ந்தபின் கட்டளை பிறப்பிப்பதற்காகச் சுற்றி வருகிறார்கள்.''

''வீட்டில் காவல் ஏற்பாடு பலமாக இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிந்திருக்குமா....?''

''இல்லை; கலபமாய்த் தங்கள் இஷ்டப்படி கொள்ளையடிக்கலாம் என்றுதான் கனவுகண்டு கொண்டிருக்கிறார்கள்.''

''நமக்கென்ன கட்டளை, படிப்படியாய்ப் பாடந்தானே?''

''ஓ! சண்டை பிடிப்பது போல் சற்று பாசாங்கு செய்து விட்டு ஓடி மறைய வேண்டும். அவர்கள் உள்ளே பாய்வார்கள். ஆங்கில துரைமார்கள் லபக்கென்று அவர்களைக் கவ்விக் கொள்வார்கள்.''

''இரையாதே, மடையா!.... அவர்கள் பொறிக்குள் நுழைவார்களா, அல்லது......''

''இதில் சந்தேகம் இல்லை.''

'' பட்டாளமாக வீட்டைத் தாக்கிக் கொண்டே முன்னேறுவார்களா....?''

''இல்லே, மாப்பிள்ளை வீட்டார் போல் நிச்சிந்தையாக வருவார்கள். நீ பார்த்துக் கொண்டே இரு.''

''ஹா! ஹா! ஹா! அப்புறம்....!''

''அப்புறம் மாடியில் இருக்கும் ஆங்கிலேயரின் புது மோஸ்தர் துப்பாக்கிகள் தீயைக் கக்கும். அப்பொழுது நீ வாயைப் பிளந்து கொண்டு தமாஷ் பார்த்த வண்ணம் நிற்காதே; பதுங்கும் குழிக்குள் சட்டென்று குதித்து விடு.''

''இல்லா விட்டால் ஒரே யடியாய் வாயைப் பிளக்க வேண்டியதுதான்! நம் பண்டிதஜி எவ்வளவு கெட்டிக்காரர்! இந்தத் தாக்குதலை உளவறிந்து எவ்வளவு நல்ல ஏற்பாடுகள் செய்திருக்கிறார்!''

''என்ன பச்சைக் குழந்தையாய் இருக்கிறாய்! கிழவர் தலையில் பழியைப் போட்டு இவர் லாலாஜியைக் காசிக்கு அனுப்பினதே இதற்காகத்தானே! ஆங்கிலேயருடன் கூட்டு யோசனை செய்து கொண்டதும் இதே காரணத்துக்காகத்தானே!''

''அடேயப்பா! பெரிய ஆள்தான் இவர்! எனக்கு இந்த மர்மம் தெரியவே தெரியாது.''

''அதனால்தான் மீசை நரைத்தும் நீ வேலை உயர்வு இல்லாமலே இருக்கிறாய்!''

கொள்ளைக் கூட்டத் தலைவர்கள் இருவர் காதுகளிலும் சுவரின் உட்புறத்திலிருந்து விழுந்த சம்பாஷணைத் துணுக்குகளின் சாராம்சம் இது. அவர்களுடைய மனம் குழம்புவது எதிர்பார்க்கக் கூடியதுதானே! சந்தடியில்லாமல் அவர்கள் ஒரு கிச்லித் தோட்டத்துக்குச் சென்று புது யோசனைகள் தொடங்கினார்கள். தங்களுடைய ரகசியம் அந்தப் 'பொம்ம'னுக்கு எப்படித் தெரிந்தது, தங்களுடைய ஒற்றர்களுக்குச் சிறிதும் தெரியாமல் வெள்ளையர்கள் எப்படி வரவழைக்கப்பட்டார்கள் என்றெல்லாம் நினைத்துஅவர்கள் மூளையைக் கசக்கிக் கொண்டார்கள். இதற்கு முன் அவர்களுடைய திட்டங்கள் இவ்வாறு தலைகீழாகப் புரண்டதே யில்லை—அதாவது மனித யத்தனத்தால். முன் ஒரு முறை ஒரு பெரிய ஜமீன்தார் வீட்டுக் கலியாணப் பந்தலில் நான்கு மூலையிலும் தீ மூட்டிக் குழப்பம் உண்டாக்கிக் கொள்ளை அடிக்க அவர்கள் திட்டமிட்டார்கள்; ஆனால் அவர்கள் ஊரில் நுழையும் பொழுதே கலியாணக் கொட்டகை வேறு காரணத்தால் சாம்பலாகிக் கொண்டிருந்தது: அது வேறு சங்கதி. ஆனால் இது ரொம்பவும் அக்கிரமம்.

அவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் போதே ஒரு மின்னல் மின்னிற்று. அந்த வெளிச்சத்தில் லாலாவின் வீட்டு வெளிப்புற மாடியில் ஆங்கில சிப்பாய்களின் தொப்பிகளும், துப்பாக்கிகளும் தெளிவாய்த் தெரிந்தன. அதற்குப் பிறகு தயக்கமேன்? விதியை நொந்து கொண்டே அவர்கள் தம் ஆட்களுடன் முகாமுக்குத் திரும்பினர்.

அமீர்கானைவிடச் சித்து விடாமுண்டன். அரசாங்கத்துடன், அவன் கடைசி வரை போராடி, பிரிட்டிஷ் சிறையைக் காட்டிலும் புலியின் வயிறு தேவலை என்று தீர்மானித்த கதையை நாம்தான் படித்திருக்கிறோமே. அவன் சில நாட்கள் அவ்வீட்டைத் தன் ஆட்கள் மூலம் கவனித்து வந்தான். வண்டி வண்டியாக இறைச்சி தினமும் அங்கே வந்திறங்கிற்று; கள் பானைகளும் வந்து சேர்ந்தன. காரே பூரே என்ற ஐரோப்பியப் பாட்டுக்கள் அங்கிருந்து ஒலித்தன. அஸ்தமனத்துக்குப் பின் கிசுகிசு வென்று ரகசிய உத்தரவுகளும் காதில் விழுந்தன. இவ்வாறு சில தினங்கள் கழிந்தபின் பிண்டாரிகள் வருத்தத்துடன் அவ்விடத்தை விட்டு நகர்ந்தனர்.

மிச்ரிலால் பகட்டான தான தர்மங்களுடன் தந்தையின் இறுதிக் கிரியைகளை முடித்துக் கொண்டு வீடு திரும்பினான். குசலப் பிரச்னைகள் தீர்ந்த பிறகு, வீட்டில் தங்கியிருந்த அவனுடைய பணியாட்கள் எல்லாக் கதையையும் பாசி கோத்தாற்போல் ஊக்கத்துடன் சொன்னார்கள்-பிண்டாரிகள் கொள்ளையிட வந்தது, வீடு ஒரு சிறு ஆங்கிலேயக் கோட்டையாகக் கொள்ளைக்காரர்களைப் பெரிய எண்ணிக்கையில் பிடிக்கும் பொறியாக மாறி விட்டதென்ற எண்ணம் அவர்கள் மனத்தில் பிறப்பிக்கப்பட்டது, அவர்கள் ஏமாற்றத்துடன் பின் வாங்கியது, கணக்கையரும் வேலையாட்களும் உயிர் தப்பியது, பல தலைமுறையாக இருந்துவரும் வீடு தீக்கிரையாகாதது, எல்லாம் அவர்களுக்குத் தெரிந்த அளவு சாங்கோபாங்கமாகச் சொன்னார்கள். ஆச்சரியத்தோடும் அதிர்ச்சியோடும் கேட்டுக் கொண்டிருந்த எஜமானன் பண்டிதஜியைக் கூப்பிட்டு மற்ற விவரங்கள் விசாரித்தான்.

கணக்குப் பிள்ளை சொன்னார்: ''பிண்டாரிகள் இந்த வீட்டைக் குறி வைத்திருக்

# இதைப்போன்ற புள்ளிகளை நீங்கள் சுவர்களில் கவனித்ததுண்டா?



மிகவும் கவனமாக அவைகளைப் பாருங்கள்— அவைகள் மூட்டைப்பூச்சிகளின் அடையாளங்கள் அதாவது உறக்கமற்ற இரவுகளின் அறிகுறிகள். நீங்கள் அறிந்திருப்பதைக்காட்டிலும் மூட்டைப் பூச்சிகள் மிகமிக வேகமாகப் பெருகுகின்றன. அவைகளை அலட்சியப்படுத்தாதீர்கள். அவைகளை இப்பொழுதே 'டால்பை'க் கொண்டு அழித்தொழியுங்கள். கொஞ்சம் டால்பைத் தெளியுங்கள்... நீங்கள் அறியுமுன்பே மூட்டைப் பூச்சிகள் செத்துப்போயிருக்கும்.

டால்பின் ஒரே ஒரு தெளிப்பு அல்லது அதன் ஸ்பரிசம் பட்டாலே போதும். டால்ப் மூட்டைப் பூச்சிகளை உடனடியாகக் கொல்வதுடன் நீடித்த வன்மையுடையது. எல்லாவற்றையும்விட டால்ப் மிகவும் சிக்கனமானது—ஒவ்வொரு பாட்டிலிலிருந்தும் ஐந்து முழு ஸ்ப்ரே டப்பிகளையோ அல்லது சிகிரெட் டின்களையோ இதன் கரைசலால் நிரப்பலாம்.




பேயர் இந்தியா லிட்.

# டால்ப்




A ®Bayer® PRODUCT

மூட்டைப்பூச்சிகளுக்குச் சாவு மணியடிக்கிறது

எல்லா மனிதர்களுக்கும் இன்பமே நோக்கம் என எண்ணுவது தவறாகும். துன்பத்தைத் தேடவென்றே பிறந்தவர் எவ்வளவோ பேர். சித்திரவதையிலும் ஆனந்தம் இருக்க முடியும். எனவே நாம் (அழகை வழிபடுவது போல்) பயங்கரத்தையும் அதன் பயங்கரத்துக்காகவே வழிபடுவோமாக! இனிமையும் இன்பமும் கூட்டுபவைகளில் எப்படி அம்பிகையைப் பூஜிக்கிறோமோ அதே போல் தீமையிலும், பயங்கரத்திலும், துயரத்திலும், சர்வநாசத்திலும் அவளை (காளியாக) உணர்வோமாக! —**ஸ்வாமி விவேகாநந்தர்**

ன்றார்கள் என்று தற்செயலாகக் கேள்விப்பட்டதும் எனக்குக் கவலையாக இருந்தது. பல யுக்திகள் மனத்தில் தோன்றின. கடைசியில், வீடு பலமாகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது என்ற பொய் எண்ணத்தை எதிரியின் மனத்தில் ஸ்தாபிக்கத் தீர்மானித்தேன். ஆனால் நான்கு பேர் இருக்குமிடத்தில் நானூறு பேர் இருப்பதாக எப்படி ஒரு மயக்கத்தை உண்டாக்குவது? நன்றாக யோசித்து ஒரு சூழ்ச்சி செய்தேன். கொட்டகைக்காகச் சேகரித்து வைத்திருக்கும் பெரிய மூங்கில்களையெல்லாம் கொண்டு வந்து கணுக்களிலெல்லாம் தணலால் துளையிட்டு நீண்ட குழல்களாக்கினேன். மூங்கில்கள் பாழாய்ப் போனதற்கு எஜமான் மன்னிக்க வேண்டும். பிறகு அந்தக் குழல்களை ஒன்றுக்கு ஒன்றாக நுனிகளில் செருகி அறுபது, எண்பது அடிக் குழாய்கள் பத்துப் பன்னிரண்டு தயாரித்தேன். அவற்றை வீட்டு முன் கூடத்திலிருந்து தோட்டத்தின் வெளிச் சுவர் வரை சக்கரத்தின் ஆரக்கால் போல் அமைத்தேன். அதாவது, அச்சக்கரத்தின் அச்சு நாபி முன்கூடம். ஆரக்கால் குழாய்களைக் கூடிய வரை ஒரு அடி மண்ணில் புதைத்து மறைத்து வைத்தேன். கூடத்தில் பேசின வார்த்தைகள் குழாய்களின் மறு கோடியில்—அதாவது வெளிச் சுவர்களின் எல்லையில்—கேட்டன. சத்தம் குறைவாக இருந்தது. வார்த்தைகள் சில சமயம் சிதைந்து போய்விட்டன. ஆனால் மொத்தத்தில் அர்த்தம் விளங்கும்படி இருந்தது. இந்தப் பேச்சுப் பரப்பிக் குழாய்களின் மூலம் ஒரு பெரிய கூட்டம் கசபுச வென்று சம்பாஷிப்பது போலவும் தம் தம் என்று நடப்பது போலவும் ஆயுதங்களைக் கீழே போடுவது போலவும் சுவருக்கு வெளியே நிற்பவர் மனத்தில் ஒரு பிரமை உண்டாக்க எங்களால் முடிந்தது. நான் எதிர்பார்த்ததைவிட மிகவும் நன்றாகவே இந்தத் தந்திரம் பலித்தது. அடுத்தபடியாகச் சாக்குகளில் வைக்கோல் திணித்து, கோல்களைச் செருகி, பானைகளையும் கூடைகளையும் அவற்றின் மேலே யுக்தியாகக் கவிழ்த்து ஆங்கிலச் சிப்பாய்களை உண்டாக்கினேன்; இருட்டிய பிறகு அவர்கள் வெளிப்புற மாடிக் கைப்பிடிச் சுவர்களில் சாய்ந்து புகை பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஈச்ச ஓலையின் மட்டைகள் துப்பாக்கிகளாக உதவின. அடுத்த நடவடிக்கை எனக்கு முற்றிலும் பிடிக்காதது—இறைச்சியும் கள்ளும் வரவழைத்து, பெருந்தீயில் மாமிசத்தை நாற்றம் வீசக் கருக்கிவிட்டு, புறக்கடையில் குழியில் கவிழ்த்துப் புதைத்தேன். நம் காவலாள் ஹரி சிங், சிறுவனாயிருந்த போது கான்பூரில் ஆங்கிலேயப் பாசறைகளில் எடுபிடிப் பையனாக இருந்தவன், காமா சோமா வென்று 'ஆங்கில'ப் பாட்டுக்கள் பாடினான். ஒரே தொண்டையிலிருந்து ஏககாலத்தில் மூன்று அபஸ்வரங்கள் — ஒரே குழப்பம் — எப்படித்தான் கிளப்பினானோ! இங்கிலீஷ்காரர்கள் தத்ரூபம் அப்படித்தான் பாடுவார்கள் என்று அவன் சாதிக்கிறான். அந்த மிலேச்ச பாஷை எனக்கென்ன புரியும்! இப்படியாக இந்தச் சிறு பிள்ளைக் கோமாளித்தனமெல்லாம் சேர்ந்து அந்தப் படுபாவிகளைப் பயமுறுத்தி அனுப்பி விட்டது.''

முழு மனமும் வியந்துக் கேட்டுக் கொண்டிருந்த மிச்ரிலால், ''அற்புதத்திலும் அற்புதம்! ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனும் உம் திறமையைப் புகழ முடியாது. இதோ இனாம்!'' என்று சொல்லித் தன் கழுத்திலிருந்த உயர்தர முத்துமாலையைப் பண்டித்ஜி கழுத்தில் போட்டான்.

அதற்குப் பிறகு, ''அதெல்லாம் சரி, பண்டித்ஜி, இவ்வளவு சிரமமும் எதற்காக! விலை மதிப்புள்ள சாமான்களெல்லாம்தான் நம் வீட்டில் ஆக்ராக் கடைக்கு அனுப்பி விட்டோமே! இந்த வீட்டில் துணிமணி மண்பாண்டம் பாத்திரம் தவிர வேறொன்றுமில்லையே! வெற்றிலைப் பாக்கு வைத்து அந்தத் துஷ்டர்களை உள்ளே அழைத்து 'இந்த நொறுங்கிய கூடை வேணுமா, அந்தக் கிழிந்த பாய் வேணுமா, எடுத்துக் கொள்ளுங்கள்!' என்று சொல்லியிருக்கலாமே!'' என்ற சந்தேகத்தை எஜமானன் கிளப்பினான் சிரித்தவண்ணம்.

''ஆம், ஐயா; அது மெய்தான். இந்த வீட்டில் விலை உயர்ந்த பொருள்கள் அதிகமில்லை. பிற்காலத்திலும் இராது என்றே தீர்மானித்திருக்கிறோம். அதற்காக என்ன அந்தப் படுபாவிகளின், இரத்தக் கறை படிந்த கால்களைப் புனிதமான இந்த வீட்டுக்குள் விடுவதா? பெரிய மனிதர்கள் போல அவர்கள் உலாவி அதையும் இதையும் தொட்டுப் பார்ப்பதா? இங்கே ஏமாந்த பின் அடுத்தாற்போல் அதிகக் கோபத்துடன் அவர்கள் ஆக்ராக் கடையை நோக்கிச் செல்லவா? அது தவிர, ஏதாவது ஒரு சமயம் நாம் கணிசமான வசூல்களை இங்கே சில காலம் இருத்தவும் நேரும். விரும்பினபோதெல்லாம் இங்கு சுலபமாய் நுழையலாம் என்ற நினைப்பு அந்த நரகப் புழுக்களுக்கு உண்டாகக் கூடாது. இந்த வீட்டைப் பற்றிச் சதி செய்யும்போதெல்லாம் அவர்கள் வயிற்றில் புளி கரைய வேண்டும். ஈவு இரக்கமறியாத அவர்கள் நெஞ்சிலும் சந்தேகம் என்னும் விஷப் பூண்டை நாம் விதைக்க வேண்டும். சந்தேகத்திலிருந்து பயம் பிறக்கும். பயத்தால் குழப்பம் ஏற்படும். 'குழம்பிய சத்துருவால் எதையும் வெற்றிகரமாகச் செய்ய முடியாது'' என்றார் பண்டித்ஜி.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# மக்ளீன்ஸ் பற்களை
# வெண்மையாக்குகிறது என்பதற்கான ஆதாரம்

## 1 அதை உணருங்கள்

பற்களில் கறை படிந்திருக்கிறதா? அது இயற்கையான வெண்மையை மறைக்கிறது. இப்போது மக்ளீன்ஸ் கொண்டு பல்துலக்கி அது கறையை எவ்வாறு அகற்றுகிறது என்று உணருங்கள்.

## 2 அதை ருசியுங்கள்

நீங்கள் அனுபவிக்கும் அநத குளுமையான ருசிக்குக் காரணம் மக்ளீன்ஸில் இருக்கும் 3 கலவைப் பொருள்களும் திறம்பட வேலை செய்வதால்தான். அவை பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கி பாதுகாக்கின்றன.

## 3 அதைப் பாருங்கள்

உங்கள் புன்முறுவலில் காணும் வெண்மையைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள். உங்கள் பற்களை முன்பிருந்ததைவிட மக்ளீன்ஸ் பற்பசை இன்னமும் வெண்மையாக்குகிறது. . நீங்களே இதைப் பரீட்சித்துப் பாருங்கள்.



**வெண்மை
யான
பற்களுக்கு
மக்ளீன்ஸ்**



Registered as a Newspaper in Ceylon
REGISTERED No. M. 4392